

# தஞ்சை ராஜா சரபோஜி

க.நா. சுப்ரமண்யம்

இந்திய மறுமலர்ச்சியை உருவாக்கியவர்கள் என்று சில பெயர்கள் பரவலாகப் பேசப்படுகின்றன. பிரசித்தமாக இருக்கிற பல பெயர்களுடன் அவ்வளவு பிரசித்தம் இல்லாத பல பெயர்களும் இந்திய மறுமலர்ச்சியை சாத்தியமாக்கியிருக்கிறார்கள். இந்தியப் பெயர்களில் இந்தியா பூராவும் தெரிந்திருக்க வேண்டிய பெயர்கள் பல. தென்னிந்தியப் பெயர்கள் வட இந்தியாவிலோ மேற்கு இந்தியாவிலோ, கிழக்கு இந்தியாவிலோ தெரிவதேயில்லை. இப்படிப்பட்டவர்களில் ஒரு பெயராக தஞ்சையை ஆண்ட ராஜா சரபோஜியைக் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும்.

பதினெட்டாம் நூற்றாண்டின் கடைசியிலும் 19ஆம் நூற்றாண்டின் ஆரம்ப காலங்களிலும் இந்தியா பூராவிலுமே பிரிட்டிஷாரின் ராணுவ அதிகாரம் பரவிப் பெருகி வந்து கொண்டிருந்தது. பல அரசர்கள் அரச குமாரர்கள் ராஜ்யம் இழந்து தங்களை புது வழிகளுக்கு பழக்கிக்கொள்ள வேண்டியிருந்தது. இவர்களில் சிலர் பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தினருடன் ஒத்துழைத்துப் பெயரளவில் தங்கள் ராஜ்யாதிகார இடத்தைக் காப்பாற்றிக் கொண்டனர். சிலர் தங்கள் பலஹீனத்தை அறியாமல் பிரிட்டிஷ் ராணுவத்துடன் மோதி உயிரிழந்தனர். வேறு சிலரை பிரிட்டிஷாருக்குக் காட்டிக் கொடுத்து தங்கள் அதிகாரத்தையும் சுயநலத்தையும் காப்பாற்றிக் கொண்டனர் சிலர்.

இந்த மூன்று வகைகளிலும் செயல் படாதவர் தஞ்சை சரபோஜி ராஜா அவர் தஞ்சையை ஆண்ட வம்சத்தில் ஒரு கிளையில் தோன்றியவர். சாகுப் தருவாயில் துளஜாஜி ராஜா அவரை சுவீகாரம் எடுத்துக்கொண்டபோது அவருக்குச் சின்ன வயதுதான். விவரம் தெரியாத வயது. அவர் சுவீகாரம் செல்லாது என்று கும்பினியாருக்கு த பாரில் அறிவித்துவிட்டு, மந்திரிகளும் பிரதானிகளும் அமீர்சிங் என்று வே றொரு அரசகுமாரரை ராஜா ஆக்கினா கள். தென்னிந்தியாவின் நெற்களஞ்சிய மாகக் கருதப்பட்ட தஞ்சை ராஜ்ய

ப்படியும் தங்களுக்குச் சிக்கிவிடும் ன்கிற நினைப்பில் கும்பினி காத்திருந் து.

சில வருஷங்களில் ராஜா அமீர்சிங் ங்கிலேயர்களுக்கு எதிராகக் கலகக் ரர்கள் கொள்ளைக்காரர்களை துண்டி டுவது தெரியவரவே சென்னை கம் னியார் சுவீகாரம் எடுக்கப்பட்ட பயனைப் பற்றிச் சிந்திக்க ஆரம்பித் ர்கள். பையன் மிகவும் சூடிகை ன பையன். அரண்மனையில் அவனை நாலைந்து வருஷம் வயதான முக்தி ம்பாள் என்ற ஒரு தாசியின் பராம பில் இசை, நாட்டியம், நாடகம், கள் இலக்கியம் மற்றும் பல கலைகள் பதிலெல்லாம் மிகவும் தேர்ச்சி ற்றவனாகவும் ஈடுபாடு உள்ளவனாக வளர்ந்துகொண்டிருந்தான். பை சிறையில் வைக்கவும் கொன்றுவி ம் அமீர்சிங் செய்த முயற்சிகள் க்கவில்லை.

அந்தப் பகுதியில் செல்வாக்கும் வுலும் உள்ள புரோடஸ்டண்ட் பா ஷ்வார்ட்ஸ் என்பவரின் கவனத் சரபோஜி கவர்ந்தார். பையனை ார்ட்ஸிடம் ராஜா துளஜாஜியே பித்துவிட்டு இருந்ததாகச் சொல்ப களும் உண்டு. பாதிரியை அகஸ் தாக அரண்மனையில் சந்தித்த அர ாரன் "உங்கள் தேசங்களில் அரச ரர்களைச் சூரிய சந்திரர்களைப் க்க முடியாமல் அடைத்து வைத் தான் வளர்ப்பார்களா" என்று டானும். சர்போஜியை மேற்பார்வையில் நவீன கல்வி த்து அவனை அரண்மனைச் சூழலி ந்து வெளிப்படுத்தி முதலில் தஞ் யிலும், பின்னர் சென்னையிலும் அறப்படுத்தி ஷ்வார்ட்ஸும் ஜெரிக் கிற பாதிரியாரும் அவனுக்கு சரித் , தத்துவம், நீதி, விஞ்ஞானம், க்கியம் எல்லாம் சொல்லிக்கொடுத் கள். சரபோஜிக்கும் கலைகளில் ஈடு ம் ஆர்வமும் இருந்தது போல ப் புது அறிவுத்துறைகளிலும் ஆர் ம், ஈடுபாடும் இருந்தது. மரபுப் அறுபத்துநான்கு கலைஞானங்கள் இருப்பதாகச் சொல்லுவார்கள். சர போஜி அவற்றில் எல்லாவற்றையும், அதற்குமேல் மேலைநாட்டுக் கலைஞா னங்கள் பல பற்றியும் படித்துக்கொண் டார். 1798ல் அவன் சுவீகாரத்தை ஏற்றுக்கொண்டு அவனைத் தஞ்சை நக ரில் அரசனாக ஆள அனுமதித்தபோது அவனுக்கு வயது 20க்குள்தான். தஞ் சை நகரத்துக்கு அப்பால் அரசு ஆணை செலுத்தும் அதிகாரத்தை வரி வசூ லிக்கும் உரிமையை பிரிட்டிஷார் கைப் பற்றிக் கொண்டார்கள். ஒரு வேட்டுக் கூட தீர்க்காமல் தென்னிந்தியாவின் நெற்களஞ்சியம் பிரிட்டிஷார் கைக்குப் போய்விட்டது. தஞ்சை நகரம் மட்டும் சரபோஜி ஆளுகையின் கீழ் இருந்தது.

சரபோஜி தஞ்சையை ஆளத் தொ டங்கும்போது அரண்மனைத்தாசி முக்தி மாம்பாள் முதற் பிரசவத்தில் இறந்து விட்டாள். குழந்தையும் இறந்துவிட் டது. தன் முதல் காதலி , குரு, என்று அவள் ஞாபகார்த்தமாக ஒரு ஆங்கி லப் பள்ளிக்கூடத்தை ஆரம்பித்து, சத் திரம் ஒன்று கட்டி இலவசப் படிப்புக்கு வழி செய்ததுதான் அரசு கட்டிலில் ஏறிய பின் முதல்காரியமாக சரபோஜி செய்தது. இந்த முக்திமாம்பாள் புரம் என்கிற ஒரத்தநாடு சத்திரமும், பள்ளி யும் 1930 வரையிலும் கூடப் பிரசித்த மாக இருந்தன. இலவசக் கல்வி, இலவ சச் சாப்பாடு எல்லாம் சமீப காலம்வ ரையில் சரபோஜியின் முதல் காதலி முக்திமாம்பாள் நினைவாகத்தான் உருப் பெற்றன.

1825-ல் ஒரத்தநாட்டுக்கு விஜயம் செய்த பிஷப் ஹெபர் என்பவர் 340 பிராமணப் பையன்களும், 760 பிராம ணர் அல்லாத பையன்களும் 200 சொச்சம் தீண்டத்தகாதவர்களாகக் கரு தப்பட்டவர்களும் தனித்தனியாக ஒரத் தநாட்டில் ஆங்கிலக் கல்வி கற்றுக் கொண்டிருப்பதாகத் தன் நூலில் குறிப் பிட்டிருக்கிறார்.

ராஜா சரபோஜி பட்டாபிஷேகம் செய்து கொள்ளுமுன்பாதிரி ஷ்வார்ட் சும் இறந்து விட்டார். அவர் சாகும் தருவாயில் சரபோஜியை அருகில்

அழைத்து "நீ மன்னவனுக இரு, மனிதனுக இரு" என்று சொன்னதாகச் சொல்லுவார்கள். ஷ்வார்ட்ஸ் பாதிரியாரின் மரணக் காட்சியை சலவைக் கல்லில் தீட்டி வைத்திருக்கிருர்கள். அதேபோல ராஜா சரபோஜி ஷ்வார்ட்ஸ் பாதிரியாரின் கல்லறையில் பொறிக்க எழுதிய கவிதையும் சலவைக் கல்லில் தீட்டப்பட்டு தஞ்சையில் இன்றும் காணக்கிடக்கிறது. இதுதான் ஆங்கிலத்தில் ஒரு இந்தியன் எழுதிய முதல் கவிதை என்று எனக்குத் தோன்றுகிறது. காலத்தால் இதற்கு முந்திய ஆங்கிலக் கவிதைகள் எதுவும் என் கண்ணில் பட்டதில்லை.

*1798* முதல் *1832* வரையில் ஒரு *34* வருஷங்கள் சரபோஜிராஜா தஞ்சை நகரை அரசாண்டார். கலை வளர்ச்சியும், இலக்கிய வளர்ச்சியும், அறிவு வளர்ச்சியும் சரியான முறைகளில் செயல்படுவதுதான் இந்திய மறுமலர்ச்சிக்குத் தான் செய்யக் கூடிய தொண்டு என்று தீவிரமாகச் செயல்பட்டார் ராஜா சரபோஜி. பிரிட்டிஷார்தான் அ
ரை ராஜா ஆக்கினுர்கள். பிரிட்டிஷ
ரை எதிர்த்து நிற்க பலம் போதாத
மக்களின் கல்வி வளத்தைப் பெருக்
அறிவுத் தாகத்தை அதிகரிச்சச்
தால் மக்கள் மேன்மை பெற
என்ற அடிப்படை சிந்தனை
செய்த எல்லாக் காரியங்களிலு
ணக்கிடக்கிறது. பொதுவாக ப
டியம், இசை, நாடகம், கதாகா
பம் என்பதில் ராஜா சரபே
இருந்த ஈடுபாடு எல்லோருக்கும்
கிறது.

அவற்றின் இன்றைய உருவ
உள்ளடக்கம் போக்கு எல்லாம் சரபே
ஜி வித்வத் சதஸ்களில் அவர் முன்
லையில் ஏற்பட்டதுதான் என்று
கொண்டு விடுகிருர்கள். ஆனுல் வே
துறைகளில் அவர் உருவாக்கியிரு
சிந்தனைகள் பலருக்கும் தெரிய
வில்லை. இதை இந்திய சரித்திர ஆ
யர்கள் ராஜா சரபோஜிக்குச் செ
துள்ள ஒரு பெரிய அநீதி
சொல்ல வேண்டும்.

உதாரணமாக மருத்துவத் துறையில் ராஜா சரபோஜிக்கு இருந்த ஈடுபாட்டைச் சொல்லலாம். மனிதர்களுக்கும், மிருகங்களுக்கும் வைத்தியம் செய்வதை அவர் விஞ்ஞான ரீதியில் ஆரம்பித்து வைத்தார் என்றே சொல்லலாம். மருத்துவம் தெரிந்திருந்த பலரைச் சேர்த்து வைத்து அவர்கள் வழிகளை, மருந்துகளை, மூலிகைகளை அனுபவ ரீதியில் உபயோகித்துப் பார்த்து, குறிப்புகள் எடுத்து வைத்திருக்கிறார். இந்த தன்வந்திரி சோதனைச் சாலைச் சோதனைகள் பற்றிய குறிப்புகள் ஒரு நாற்பது வருஷங்களுக்கு அதிகமாகக் காணப்படுவதாகவும், அவற்றைப் பற்றிய ஆராய்ச்சி சமீபகாலத்தில் ஒரு இருபது வருஷங்களுக்கு அதிகமாக தஞ்சாவூர் சரஸ்வதி மஹால் லைப்ரரியில் நடந்து கொண்டிருப்பதாகவும் சொல்லுகிறார்கள்.

இது உள்நாட்டு வைத்தியமுறைகள் மருந்துகள் பற்றி. இந்து முஸ்லீம் சித்த வைத்திய முறைகள் எல்லாம் வழக்கில் இருந்ததாகத் தெரிகிறது. இதைத் தவிர கல்கத்தாவுக்கு வந்த மெக்லியாட் போன்ற ஆங்கில சர்ஜனை வரவழைத்து அறுவை சிகிச்சை முறைகளைத் தனக்கு கற்றுக் கொடுக்கச் சொல்லி, தன் கையாலேயே அறுவை சிகிச்சைகள் செய்து பார்த்திருப்பதாகவும் தெரிகிறது. கண்ணில் வளர்ந்த சதையை நீக்க ஒரு கண் டாக்டரை ஏழாயிரம் வெள்ளிப் பணம் கொடுத்து வரவழைத்து, தானே கண் ஆபரேஷன் செய்யக் கற்றுக் கொண்டு பிறருக்கும் சொல்லிக் கொடுத்ததாக ரிக்கார்டில் இருப்பதாகச் சொல்லுகிறார்கள்.

இதே மாதிரி யானை, குதிரை, ஆடு, மாடு என்று மிருகங்கள் வைத்தியமும்



## ரேஸ் குதிரை

இந்தப் படங்களைப் பார்த்து, ஒரு குதிரை பூட்ஸ் மாட்டிக் கொண்டுள்ளது, இன்னொரு குதிரை 'கோட்' போட்டுக் கொண்டுள்ளது, இவையெல்லாம் எதற்காக என நினைக்கிறீர்களா?

பல இலட்சக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள 'ரேஸ்' குதிரைகளைப் பராமரிப்பதில் பயன்படுத்தப்படும் நவீன முறைகள்தாம் இவை!

குதிரை மாட்டிக்கொண்டுள்ள கோட்டின் பெயர் ஃபிளியோ தெரபி ஹார்ஸ் கோட். இதிலுள்ள காந்தத் தகடுகள் குதிரையின் உடலில் உள்ள சிராய்ப்புகள் காயங்கள் போன்றவை விரைவாகக் குணமாக உதவுகின்றன.

பூட்ஸ்களில் நிரப்பப்பட்டுள்ள ஐஸ் போன்ற குளிர்ந்த தண்ணீர் குதிரைகளின் கால்கள் விரைவாகக் குணமடைய உதவுகின்றன.

'சண்டே மிட்டே' இதழிலிருந்து
தொகுப்பு

சரபோஜி ராஜா தலைமையில் விரிவாக நடந்ததாகத் தெரிகிறது.

மருத்துவத்தில் போலவே மேலை நாடுகளில் புதிதாகத் தொடங்கி உருப் பெற்றுக் கொண்டிருந்த புது விஞ்ஞானத் துறைகளிலும் ஈடுபாடு கொண்டு தானே சோதனைகள் செய்து பார்த்து, பிஸிக்ஸ், கெமிஸ்ட்ரி, பாட்டனி, பையாலஜி முதலிய துறைகளில் தன்னுடைய சோதனை முடிவுகளை அவன் எழுதிப் பார்த்ததாகவும், இந்தத் துறையில் ஆரம்பப் பாடப் புஸ்தகங்கள் பலவும் அவர் இயற்றியதாகவும் தெரிகிறது. வந்துபோன பிரிட்டிஷ் நண்பர்களை எல்லாம் லண்டனிலிருந்து தனக்கு சைண்டிபிக் அப்பரட்டஸ்கள் அனுப்பச் சொல்லி வேண்டிக்கொள்வார் ராஜா சரபோஜி. இதையெல்லாம் தவிர அவரே கைப்படவும் பிறரைக் கொண்டும் பட்சி ஜாலங்கள், மரம், செடி, கொடிகள், மிருகங்கள் இவற்றில் எதார்த்தமான உள்ளமைப்புகள் ...ரிய வரும்படியான படங்கள் எழுது... பார்த்திருக்கிறார் எனத் தெரிகிறது.

தன்னுடைய கல்வி முயற்சிகளு... உபயோகப்படுவதற்காக புஸ்தகங்களை அச்சிடுவதற்காக நகர்த்தக்கூடிய ம... தாலான வார்ப்புகள் அடங்கிய ... அச்சு எந்திரத்தை அவர் சரஸ்வதி மஹாலில் நிர்மாணித்திருந்தார். இந்த அச்சு எந்திரத்தின் பகுதியை 1925-26... நானே, பள்ளியில் இருக்கும்போது பார்த்திருக்கிறேன்.

புதிய கல்வி முறைகளில் ஈடுபாடு கொண்டு, கல்கத்தாவில் நடந்த ஹேர் ஸ்கூல் சோதனையைப் பார்ப்பதற்கென்று காசி போனவர் கல்கத்தா வழியாகத் தஞ்சை திரும்பினார். இந்த ஹேர்–சரபோஜி சந்திப்பு பற்றி விவரங்கள் அதிகம் தெரியவில்லை. யாராவது ஆராய்ச்சி செய்து சொன்னால் உபயோகமாக இருக்கும்.



இசை, நாட்டியம், முதலிய கலைக ளைப் போல, சரபோஜியின் இலக்கிய ஈடுபாடும் பரவலாக தெரிந்த விஷயம் தான். அவருடைய சரஸ்வதி மஹால் லைப்ரரியில் அவருக்குத் தெரிந்த ஏழு ஐரோப்பிய மொழி நூல்களைச் சேக ரித்து வைத்திருந்தார். அதேபோல இந் திய மொழிகள் ஒரு பத்தில் சுவடியைச் சேகரித்து வித்வத் சதசுக்கு ஓயாமல் வேலை கொடுத்துக் கொண்டிருந்தார்.

இலக்கிய ஈடுபாட்டுக்கு உதாரண மாக பிரசித்தமாக இருந்த ஜோஹன் உல்ஃப் காங் கேதே என்கிற ஜெர்மன் கவியைப் பார்க்க வெய்மர் நகருக்கு 1820ல் அவர் அனுப்பிய தூதைச் சொல்ல வேண்டும். ராமசாமி முதலி யார் என்பவரிடம் இரண்டு தேங்காய் கொத்துக்கள், மூன்று கும்பகோணம் சால்வைகள், மூன்று தஞ்சாவூர் படங் கள், ஒரு கடிதம் கொடுத்தனுப்பியதாக சரஸ்வதி மஹால் மோடி கார்டுகள் மொழி பெயர்ப்பு கூறுகின்றன. கேதே பதில் கொடுத்து அனுப்பினாரா என் பது தெரியவில்லை.

அன்று அரசு இழந்த காப்பாற்றிக் கொண்ட பல அரசர்களில் சிலர் சில விஷயங்களில் ஈடுபாடுள்ளவர் களாக மேன்மையுற்றவர்களாக இருந்தி ருக்கிறார்கள். ஆனால், கலை, அறிவு, மருத்துவம், கல்வி, விஞ்ஞானம் என்று எல்லா மறுமலர்ச்சித் துறைகளிலும் ஈடுபாடு கொண்ட ஒரே சிந்தனையாளர் தஞ்சை ராஜா சரபோஜி என்று சொல்ல வேண்டும். இவர் பெயர் பொதுவாக இந்தியர்களுக்கு அவ்வள வாகத் தெரியாது இருப்பது பற்றி நாம் பெருமைப்பட முடியாது.

(தொடரும்)

இருக்கிறது. இதன் ஆட்சிக் குழுவில் மூன்று துணைவேந்தர்கள் இருப்பது விசேஷமானது. திருப்பதி மகளிர் பல்கலைக்கழகம், பர்த்வான், மணிப்பூர் பல்கலைக் கழகங்கள் இப்படி பிரதிநிதித்துவம் பெறுகின்றன. காஷ்மீரிலிருந்து கன்னியாகுமரி வரை இதன் ஆட்சிக் குழு உறுப்பினர்கள் இருப்பது தேசிய ஒருமைப்பாட்டின் விளக்கமாக அமைகிறது.

*இதுவரையில் என்னென்ன சாதனைகள் புரிந்திருக்கிறீர்கள்?*

பாடத் திட்டங்களில் இதுவரை இருந்த ஒரு குழப்பத்தை நீக்கியிருக்கிறோம். ஒரு சுவையான செய்தி தெரியுமா? பாண்டிச்சேரி அரசின் கல்வி நிலையங்களில் இதுவரை மூன்று பல்கலைக் கழகங்களின் பாடத் திட்டங்கள் ஒரே சமயத்தில் செயல்பட்டுக் கொண்டிருந்தன. யானத்தில் ஆந்திரப் பல்கலைக் கழகம், மாஹியில் கோழிக்கோடு பல்கலைக் கழகம், பாண்டிச்சேரி, காரைக்காலில் சென்னைப் பல்கலைக் கழகம் இவற்றின் பாடத் திட்டங்களும் பரீட்சைகளும் செயல்பட்டன. இதை மாற்றி, பல பேராசிரியர்களின் உதவியுடன் எல்லாத் துறைகளுக்கும் புதிய செம்மைப்படுத்திய பாடத் திட்டங்களை உருவாக்கியதோடு எல்லா ஆசிரியர்களுக்கும் உடனே பயிற்சியும் அளித்து விட்டோம்.

புதுவைப் பல்கலைக் கழகத்தின் மூன்று அமைப்புகள் பின்வருமாறு:

"ஸ்ரீஅரபிந்தோ ஸ்கூல் ஆஃப் ஈஸ்டர்ன் அண்ட் வெஸ்டர்ன் தாட்"–இந்த தத்துவக் கழகத்துக்கான ஆலோசனை வழங்குபவர் டெல்லி இந்தியத் தத்துவ ஆராய்ச்சிக் கழகத்தின் இயக்குநர் டாக்டர்சட்டோபாத்யாயா. "பாரதி ஸ்கூல் ஆஃப் லாங்க்வேஜ் அண்ட் லிட்டரேச்சர்" இந்த மொழி ஆராய்ச்சிக் கழகத்துக்கான ஆலோசனை வழங்குபவர் மதுரை காமராஜர் பல்கலைக்கழக முன்னாள் துணை வேந்தர் டாக்டர் வ.சுப.மாணிக்கம். பிரெஞ்சு அரசாங்கத்தின் உதவியோடு நிறுவ இருக்கும் "இன்ஸ்டிட்யூட் ஆஃப் ஃப்ரெஞ்ச் கல்ச்சர்" கலாச்சாரக் கழகத்துக்கு ஆலோசனை வழங்குபவர் நேரு பல்கலைக்கழக பேராசிரிய டாக்டர் அனுராதாகுண்டே.

மற்றும் "இன்ஸ்டிடியூட் ஆஃப் ஓஷனுகிராபி" "ஸ்கூல் ஆஃப் கம்ப்யூட்டர்" எல்லாவற்றிற்கும் திட்டங்களைத தீட்டி வருகிறோம்.

பாண்டிச்சேரி மத்தியப் பல்கலைக்கழகத்தை அமைத்த பாராளுமன்றச் சட்டம் வேறு எந்தப் பல்கலைக்கழகத்துக்கும் இல்லாத சில விசேஷ ஆணைகளைப் பிறப்பித்திருக்கிறது. அதன்படி இந்தப் பல்கலைக்கழகம் மூன்று துறைகளில் சிறப்பான முன்னோடியாகச் செயல்பட்டாக வேண்டும்.

முதலாவதாக கலாச்சார, நுண்கலைத்துறை. இதற்கு ஆலோசனைக் குழுவின் தலைவராக திருமதி பூபுல் ஜயகரையும் உறுப்பினர்களாக டாக்டர் பானுமதி ராமகிருஷ்ணு, டாக்டர் பத்மா சுப்பிரமணியம், திருமதி எம்.எல்.வசந்தகுமாரி, திரைப்பட இயக்குநர் கே.பாலச்சந்தர் போன்ற பல கலைஞர்களையும் அழைத்திருக்கிறோம்.

அடுத்ததாக விளையாட்டுத்துறை. சிறந்த ஓட்டக்காரரான குமாரி பி.டி.உஷா கூட உலக அரங்கில் வெண்கல மெடல் மட்டுமே பெற்றிருக்கிற அவல நிலைமை மாறி, இளைஞர்களுக்கு கடுமையான பயிற்சி தரும் ஒரு அரங்கத்தை உருவாக்க ஒய்.எம்.சி.ஏ. தலைவர் திரு. ஈ.சி.பி.பிரபாகர், ஐ.ஏ.எஸ். (ஓய்வு) தலைமையில் ஒரு குழு அமைத்து அதில் மேஜர் ஜெனரல் நரேந்திரசிங், ராமநாதன் கிருஷ்ணன், வெங்கட்ராகவன் போன்றவர்களை ஈடுபடுத்த இருக்கிறோம்.

பாண்டிச்சேரி பல்கலைக்கழகத்துக்கு இடப்பட்ட மூன்றுவது ஆணை, கிராமப்புறப் புத்தமைப்புக்கு ஒரு கழகம் நிறுவுவதாகும். அறிஞர் திரு ஹால்திபூர், ஐ.ஏ.எஸ். தலைமையில் ஒரு குழு அமைத்து காந்தி கிராமம் போன்ற அமைப்புகளையும் பல அறிஞர்களையும் கலந்து ஆலோசித்து இந்தப் பணியைத் தொ இருக்கின்றோம்.

ராஜரங்க

# ஜோதி ராமலிங்கம்

- க. நா. சுப்ரமண்யம் -

பத்தொன்பதாம் நூற்றூண்டில் கல்வியிலாகா 'மினிட்ஸ்' என்பது அமலுக்கு வருமுன் இந்தியாவில் கல்வித்துறைகளில் ஒரு தெளிவில்லாமையிருந்தது. முக்கியமாக வட இந்தியாவில் அரபி, பாரசீகக் கல்விமுறைகளும் சமஸ்கிருத, பிராந்திய மொழிக் கல்வி முறைகளும் போட்டி போட்டுக் கொண்டிருந்தன.. தென்னிந்தியாவில் தமிழ் நாட்டில் அந்த அளவுக்குக் குழப்பம் இல்லாவிட்டாலும், நிலைமை தெளிவில்லாமல் தான் இருந்தது. இஸ்லாமியர்கள் அரபி, பாரசீக கல்வி முறைகளையும் இந்துக்கள் சமஸ்கிருத மற்றும் பிராந்திய மொழிக் கல்விமுறைகளையும் பின்பற்றினுர்கள். கிறிஸ்துவர்கள் பெரும்பாலும் ஆங்கிலக் கல்வி முறைகளைப் பின்பற்றினுர்கள்.

ஒவ்வொரு முறையிலும் சாதாரண அறிவுத்தரத்தை எட்டுவதுடன் ஒரு அசாதாரண மேன்மையான தரத்தை எட்டுவதற்கும் வழி இருந்தது என்றுதான் சொல்ல வேண்டும். பின்னுல் இந்த வழிகள் எல்லாம் 1850-க்குப்பின் கொஞ்சங் கொஞ்சமாக மறையத் தொடங்கினுலும், இன்று வரையிலும் கூட முழுதும் மறைந்து விட்டதாகச் சொல்ல முடியாது. சர்க்கார் அதிகாரத்துக்குட்பட்ட முழுமையான ஆங்கிலக் கல்விமுறைதான் பின்னர் மேலோங்கத் தொடங்கியது.

இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி ஏற்பட்டு பூராவிலுமாக நிலவி உருப்பெற்ற ஆண்டுகள் அவை. இந்தியாவில் மறுமலர்ச்சி ஏற்பட்டு ஒரு புதுயுகம் பிறக்க வேண்டுமானுல் அதற்கு கல்வித்துறைதான் திறவுகோல் என்று சரித்திர ரீதியில் இப்போது யோசித்துப் பார்க்கும் பொழுது நன்றுகவே தெரிகிறது. இந்திய மறுமலர்ச்சியின் தந்தை என்று இப்போது பரவலாக எல்லோராலும் கருதப்படுகிற ராஜா ராம் மோகன்ராய் இந்து, முஸ்லிம் இரண்டு வழிகளிலும் கல்வி கற்று ஆங்கிலக் கல்வி மூலம் தன் அறிவையும் அனுபவங்களையும் விஸ்தரித்துக் கொண்டவர். வழக்கமாக லார்டு மெக்காலே என்பவரைத்தான் இந்தியாவில் ஆங்கிலக் கல்வியின் ஆரம்ப காரண கர்த்தா என்று சொல்லுவது வழக்கம் என்றுலும் அதைச் சாத்தியமாக்கியவர்கள் என்று ராம் மோகன்ராய் போன்றவர்களைச் சொல்லவேண்டும். வங்கத்தில் ஆங்கிலக் கல்வி கற்று வளர்ந்தவர்களை "பாபு"க்கள் என்றும் வங்கத்துக்கு வெளியே ஆங்கிலக் கல்வி கற்றவர்களை "பழுப்புநிற சாகிப்புகள்'' என்றும் சொல்லுவதும் வழக்கமாயிற்று.

வங்கத்தில் சரம்பூர் கல்வியில் தோன்றி ஆங்கிலக் கல்வி பரவியது போல இந்தியாவில் பல இடங்களிலும், தரங்கம்பாடியிலிருந்து கொச்சி, திருநெல்வேலிச் சீமையிலிருந்து கோவாவரையில் ஆங்கிலக் கல்வி இந்தியா பூராவும் பரவிற்று. தஞ்சை ராஜா சரபோஜியும் இந்தக் கல்வி காரணமா

கத் தோன்றியவர்தான். ஆனால் அவர் கல்வி ஓரளவுக்குக் கலை ஞானத்திலு லும் மருத்துவ ஆசையினாலும் பதப் பட்டிருந்தது.

இந்தக் கல்வி முறைகள் எதனாலும் பாதிக்கப்படாமல் தோன்றிக் கல்வி முறை மாற்றங்களினால் ஏற்படவிருந்த சமூக மாற்றங்களை எல்லாம் உள்ளத்தில் வாங்கி, மாறுதல்களை சிருஷ்டித்தரமாக சமாளிப்பதற்கு ஆவன செய்ய வேண் டுமென்ற ஆவல் கொண்டவர் என்று ஜோதி ராமலிங்கம் என்பவரைச் சொல்ல வேண்டும். சாதாரண சமஸ்கி ருத மொழிக் கல்வியோ, பிராந்திய மொழிக் கல்வியோகூட அவருக்குக் கிடைத்ததாகத் தெரியவில்லை. கேள்வி ஞானம் ஒன்றையே ஆதாரமாகக் கொண்டவர் அவர் என்று தெரிகிறது. புராண மதப்பிரசங்கம் செய்ய வேண் டிய மூத்த சகோதரர் உடல் நலமில்லா மல் அவஸ்தைப்பட்டபோது ஒன்பதே வயதான ராமலிங்கர் திறம்பட பிரசங் கம் செய்து மக்கள் கவனத்தைக் கவர்ந் ததாகச் சொல்லப்படுகிறது. இதை தெய்வத்தின் வரமாகவும் கருதலாம். சூழ்நிலையின் சவாலை ஏற்றுக்கொள் ளும் வீரமாகவும் கருதலாம். அவரவர் இஷ்டம் அது.

ஜோதி ராமலிங்கத்தின் வாழ்க்கைச் சரித்திரத்தின் பல விஷயங்கள் தெளி வாக இல்லை. இது காரணமாகவே கூட தெய்வீக வரம் என்று நம்புவது சுலப மாக இருந்திருக்கிறது. ஆனால் இந்து மதத் தாக்கமும், விளைவுகளும் பாமர மக்களிடையே வெகுவாகப் பரவியி ருந்த காலம் அது. எல்லா மதங்களிலு மே பலவிதமான பாமரப் போக்குகளி னால் காலம் செல்லச்செல்ல அச்ட்டுத் சித்தாந்தங்கள், குருட்டு நம்பிக்கைகள், இருட்டுப் பழக்கவழக்கங்கள், அதிக ரித்து விடுகின்றன. இவைகளை அகற்றி, மதத்தில் எளிமையான, அடிப்படைக ளைக்]காண ராமலிங்கர் ஆரம்பகாலம் முதலே முயன்று வந்திருக்கிறார் என்று தெரிகிறது. கொல்லாமை, அஹிம்சை, ஜீவகாருண்யம் என்கிற தத்துவங்களை சுலபமாகவே கண்டுகொண்டுவிட லாம். இவையெல்லாம் எல்லா மதங்க ளுக்கும் பொதுவான விஷயங்கள். அஹிம்சை காரணமாக, ஜீவகாருண் யம் காரணமாக மாமிசம் சாப்பிடக் கூடாது என்கிற நினைப்பு சமண பாதிப் பினால் குலப்பழக்கத்தினால் அடுத்தபடி



யாக ஏற்பட்டுவிடக் கூடும். அதைப்பற்றிச் சிந்திக்காமலே கூட புலால் உண்ணுமலிருப்பதும் சாத்தியமே. எல்லா உயிர்களையும் சமமாக நேசிப்பது என்பதைப் பயின்று பயின்று தான் அனுபவத்தில் நடைமுறையில் கொண்டுவரமுடியும். ராமலிங்க மதத்துக்கு அஹிம்சை, ஜீவகாருண்யம், எல்லா உயிர்களையும் நேசிப்பது என்பது அடிப்படையான அம்சங்களாக அமைந்தன.

சென்னையை ஒட்டிய பிரதேசத்தில் காருணிகர் குலத்தில் பிறந்த ராமலிங்கருக்கு சைவமும், தேவாரத் திருவாசகத் திருமுறைகளும் பிதுரார்ஜிதமாக வந்த சொத்து. தமிழ்நாடு எங்கும் சைவ மடங்கள் பலவும் இருந்தன. பெருமளவில் சைவசமயத்துக்கும் மூதத்துக்கும் சேவை செய்தன. ஏழை எளியவருக்கு சோறு போட்டன. சமயத்துக்குத் தக்கபடி தானதர்மங்கள் செய்தன. இதெல்லாம் நல்ல விஷயங்கள்தான். இருந்தாலும், மடம் என்பதும், மடாதிபதி என்பதும் அதிகாரத்தின் மையம். அந்த அதிகாரம் துஷ்பிரயோகம் செய்யப்படக் கூடும்தானே? ராமலிங்கருக்குத் தன் காலத்தில் செயல்பட்டுக் கொண்டிருந்த மடங்களிடமும், மடாதிபதிகளிடமும் அதிக நம்பிக்கை இருந்ததாகத் தெரியவில்லை.எந்தெந்த மடங்களிடம் அவருக்கு நேர் அறிமுகம் இருந்தது என்பது அவர் சரித்திரங்களிலிருந்து தெரியவில்லை. மடங்கள் பரிபாலித்த சைவ மதத்தில் அவருக்கு நம்பிக்கை இல்லை என்பது அவர் ஆரம்ப காலத்திய போக்குகளிலிருந்தே தெரிகிறது. ஆனால் அவரே ஒரு புதுமாதிரியான, தவறுகள் செய்யாத மடத்தை ஸ்தாபிக்க வேண்டுமென்று எப்போது எண்ணத் தொடங்கினர் என்பதும் நிச்சயமாகத் தெரியவில்லை. அவர் வாழ்க்கையின் பிற்பகுதியில்தான் இந்த எண்ணம் அவருக்குத் தோன்றியிருக்க வேண்டும். தெய்வீகக் கவியாகவும், புராண மதப் பிரசங்கியாகவும் வாழ்க்கை நடத்திய ஜோதி ராமலிங்கத்துக்கு இந்தியாவில் மறுமலர்ச்சிச் சிந்தனைகளின் தாக்கமாக சர்வ மத சமரசம் என்கிற ஒரு எண்ணம் தோன்றலாயிற்று.

எல்லா மதங்களும் சொல்கிற கடவுளுக்குப் பல பெயர்கள் இருந்தாலும் குறிப்பிடப்படுவது ஒன்றேதான் என்பது அப்படியொன்றும் புதுமையான சிந்தனையல்ல. கிறிஸ்துவர்கள், முகமதியர்கள், இந்துக்கள், இந்துக்கள் அல்லாத பிற்பட்டவர்களாகக் கருதப்பட்டவர்கள் எல்லாருமே தங்கள் தங்கள் வழிகளில் ஒரே கடவுளைத்தான் துதிக்கிறார்கள் என்கிற நினைப்பும் ஞானமும் அவருக்கு மிகவும் சுலபமாகவே ஏற்பட்டிருக்க வேண்டும். எல்லா ஜீவன்களிடமும் அன்பு, நேசம், காருண்யம் என்று வருகிறபோது, இந்து, முஸ்லிம், கிறிஸ்துவர் என்று வேறுபடுத்திப் பார்க்க முடியுமா? ஒன்றே தெய்வம் என்று சொல்லுகிறபோது மனித குலம் பூராவையும் ஒரே குலமாகப் பார்ப்பதும் சுலபந்தானே? இது எல்லாமாகச் சேர்ந்து கவிதையாகவும் வசனமாகவும் வெளிப்பட்டது. இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகள் ஜோதி ராமலிங்கத்தின் மூலம் வெளிப்பட்டது. ராம் மோகன் ராயின் பெயர் இந்திய மறுமலர்ச்சியின் ஆதார கர்த்தாவாகத் தெரிகிற அளவு பரவலாக இந்தியாவில் தமிழகம் தவிர மற்ற பாகங்களில் ராமலிங்கரின் பெயர் தெரியவில்லை. இதற்குக் காரணம் இன்று இருப்பது போலவே அன்றும் இருந்தது தான். ராம்மோகன் ராய்க்கு ஆங்கில அறிவு இருந்தது. அதனுல் அவர் பெயர் தெரிந்தது. ராமலிங்கருக்கு அந்த அறிவு இல்லை. அதனுல் அவர் பெயர் தெரியவில்லை. எது எப்படியாலும் ராம் மோகன் ராயைப் போலவே ராமலிங்கரும் இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனையாளர் வரிசையில் முதல்வர்களில் ஒருவர்.

கவியாகவும் மதப்பிரச்சாரகராகவும் மடங்களில் நம்பிக்கையில்லாதவராகவும் பிரசங்கியாகவும் தமிழ்நாடு பூராவும் தெரிய வந்துவிட்ட பிறகு தன்னுடைய பிரசாரத்துக்கு உதவியாகப் புதிதாகத் தமிழ்நாட்டில் செயல் பட்டுக்கொண்டிருந்த அச்சு யந்திர சா

தனத்தை ராமலிங்கர் உபயோகப்படுத்தத் தொடங்கினார். இதே அளவில் இல்லாவிட்டாலும், இதே தரத்தில், மார்ட்டின் லூதர், விட்டன் பார்தில், ரோமுக்கு எதிராக பிராடஸ்டாண்டிஸம் பிரசுரப்படுத்தி அதற்குச் சாதகமாக அச்சு யந்திரத்தை உபயோகப்படுத்தியதைச் சொல்லலாம். அச்சு யந்திர சாதனம் காரணமாக ஆறுமுக நாவலர் என்கிற ஈழத்துக்காரர் பல புராணங்களை வசன உருவில் கொடுக்கும் முயற்சிக்குக் காரணமானவர் ஆனார். தமிழ் இலக்கண பாலபாட இந்துமத வினா விடை ஆசிரியர் ஜோதி ராமலிங்கத்தின் மேல் போட்ட வழக்கும் அதன் விளைவும் ஒரு வேடிக்கையான தமிழ்ப் பண்பாடு பற்றிய வியாக்கியானம் என்று சொல்லவேண்டும்.

ஆறுமுக நாவலர்- இலங்கையில் கிறிஸ்துவர்களுக்குத் தமிழ் மொழி பெயர்ப்பாளராக இருந்தவர். கிறிஸ்துவ மதப்பிரச்சார வழிகளைக் கண்டு தேர்ந்தவர். புலமைமிக்கவர். சைவப் பற்று மிகுந்தவர். கிறிஸ்துவர்கள் பிரசாரம் செய்ததுபோல சைவப் பிரசாரம் செய்யவேண்டும் என்ற ஆவலுடன் இலங்கைத் தமிழர்களின் காசியான சிதம்பரத்தில் வந்து தங்கி ஒரு தமிழ்ப்பள்ளியும் ஆரம்பித்தார். அச்சு யந்திர சாதனத்தைமதப்பிரச்சாரத்துக்கு உபயோகப்படும் முகமாக பல சைவப் புராணங்களை எளிய தமிழில் வசன நடையில் எழுதிப் பிரசுரித்தார். இந்துமதப் பிரச்னைகள் பற்றி வினா- விடைகள் எழுதியிருக்கிறார். பால பாடபுத்தகங்கள் எழுதினார். தமிழ் எழுத்துக்களில் உள்ள ஒலிகள் போதவில்லை என்று ஜ, ஷ, ஸ, ஹ என்கிற சம்ஸ்கிருத எழுத்துக்களைத் தமிழில் சேர்த்தவர் அவர்தான் என்று சொல்லுகிறார்கள். இதுதவிர நீதிக்கதைகள் பல எழுதியிருக்கிறார். இத்தனையிருந்தும் அவருடைய பார்வை ஒரு பின்னோக்கிய பார்வை. பண்டிதருடையது, புலவருடையது. அவருக்கு ஜோதி ராமலிங்கத்தின் முன்னோக்கிய மறுமலர்ச்சிப் பார்வை அவ்



சிவாஜி, இராமதாசர் மீது அளவு கடந்த அன்பு வைத்திருந்தார். அவருக்கு வேண்டிய பொன்னும் பொருளும்' காணிக்கையாகக் கொடுத்து அனுப்பினார்.

இவைகளைப் பெற்றதும் இராமதாசர் சிறிதளவு மண், சில கூழாங்கற்கள், கொஞ்சம் குதிரைச் சாணம் ஆகியவற்றைக் கொடுத்து அனுப்பினார்.

இதைப் பார்த்ததும் சிவாஜியின் அன்னை, "உயர்குடியில் பிறந்த ஒருவனுக்குக் கொடுக்கக் கூடிய பொருள்களா இவை" என்று மிகுந்த கோபத்துடன் வினவினாள்.

உடனே சிவாஜி, "இவை தீர்க்க தரிசனம் மிக்க குறிப்புப் பொருட்கள் அம்மா! இந்த நாடு முழுவதையும் நான் ஜெயிப்பேன் என்பதை இந்த மண் குறிக்கிறது. எனது நாட்டை வலிமை மிக்க கோட்டைகளால் பாதுகாப்பேன் என்பதை இக் கூழாங்கற்கள் காட்டுகின்றன. பெரிய குதிரைப் படையை அமைப்பேன் என்பதை சாணம் உணர்த்துகிறது" என்று அன்னையிடம் கூறினார்

—எஸ். முகம்மது யூசு—

வள்வாகப் புரியாததில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. புரியாதது என்பது மட்டுமல்ல. எதிர்க்கவேண்டியது என்றும் ,தோன்றியது. ஏனென்றால் அவரைப் போலவே ஜோதி ராமலிங்கமும் அவ ரளவில் ஒரு மதப்பிரசாரகர்தான்.

ஆறுமுக நாவலரும், ஜோதி ராமலிங்கமும் நேருக்குநேர் சந்தித்துக் கொண்டது பற்றி ஒரு விவரணம் எங்கேயோபடித்த நினைவிருக்கிறது. நினைவிலிருந்து இதை எழுதுகிறேன். சுவாமிமலையில் சுவாமிநாத சுவாமி சந்நதியில் ஆறுமுக நாவலர் தன் சிஷ்ய கோடிகளுடன் விபூதி அபிஷேகம் பார்த்துக் கொண்டிருக்கையில் ஜோதி ராமலிங்கம் தன் சிஷ்ய கோடிகளுடன் அங்கு வந்ததாகவும், நீண்ட அருட்பா ஒன்றைப் பாடிப் பரவியதாகவும் பரவசப்பட்டுப் போன பலர் ஆறுமுக நாவலரின் சிஷ்யர்களில்சிலர் உட்பட ஜோதி ராமலிங்கத்துடன் வெளியேறியதாகவும், அதுமுதலே ஆறுமுக நாவலர் அவரிடம் விரோதம் பாராட்டத் தலைப்பட்டார் என்வும் படித்ததாக ஞாபகம். அருட்பா என்று தன் கவிதைகளுக்கு அவர் பெயர் வைப்பது சரியல்ல என்று கோர்ட்டில் கேஸ் போட்டுவிட்டார்.

அப்போது ஆறுமுக நாவலர் போலவே ஜோதி ராமலிங்கமும் நிரந்தரமாகவே சிதம்பரத்தில் தங்கியிருந்தார். ஏன், எப்போது சென்னையைவிட்டு கிளம்பிச் சிதம்பரம் வந்தார் என்பது தெரியவில்லை. இன்னொரு விஷயம் கூட நினைவில் வைக்க வேண்டியதாயிருக்கிறது. ராமலிங்கரின் பிரயாணங்களில் திருச்சிக்குத் தெற்கே போனதாகத் தெரியவில்லை. மதுரை, திருநெல்வேலி ஜில்லாக்களில் அவர் பிரயாணம் மேற்கொண்டதாகத் தெரியவில்லை. காரணம் அந்தக் காலத்திலும் மடங்களின் ஆதிக்கம் அதிகமாக இருந்ததாக இருக்கலாம். ஆறுமுக நாவலர் கொண்டு வந்த வழக்கின் விசாரணை ஒரு ஆங்கில சப்-ஜட்ஜ் முன்கடலூரில் நடந்தது. ஒரு ஈரங்கியின்போது ராமலிங்கர் கச்சேரிக்குள் வந்ததாகவும், அப்போது எல்லோரும் எழுந்து நின்றது மட்டுமல்லாமல் ஆறுமுக நாவலரும் எழுந்து நின்று வணங்கியதாகவும், அது கண்ட நீதிபதி, "நீரே வணங்கத் தகுதியுள்ளவராகக் கருதும் துறவி, அவர் தன் கவிதைகளுக்கு அருட்பா எனப் பெயர் சூட்டியது சரியே" என்று வழக்கை தள்ளுபடி செய்ததாகச் சொல்லுவார்கள்.

சிதம்பரத்தில் தங்கிய ராமலிங்கர் இரண்டொருதரம் கோபாலகிருஷ்ண பாரதியையும் சந்தித்து அளவளாவி இருப்பதாகத் தெரிகிறது. விவரங்கள் கிடைக்கவில்லை. பஞ்சாட்சரப்படியேறி நடராஜாவுக்குப் பூஜை செய்யும் உரிமை தனக்கு வேண்டுமென்று அவர் கேட்டதாகவும், அதற்கு தீக்ஷிதர்கள்அனுமதி அளிக்காததனால் கோபம் கொண்டு "இது உண்மையில் சிதம்பரம் அல்ல, நடராஜா நடனமாடிய இடம் வடலூர்" என்று அங்கு கோவில் கட்ட முற்பட்டதாகவும் சொல்லுவார்கள். வடலூரில் அணையாது எரிந்துகொண்டிருக்கும் ஜோதியைத் தான் பார்த்திருப்பதாக மேடம் பிளேவட்ஸ்கி என்கிற தியாஸபிகல் சொஸைட்டியின் மூல சிந்தனையாளர் தன் நூல் ஒன்றில் எழுதியிருக்கிறார். தியாஸபிகல் சொஸைட்டி சிந்தனைகள் பலவும் ராமலிங்கரின் சிந்தனைகளுக்கு ஒத்து வந்தன. இந்தியச் சிந்தனையின் எதிர்காலத்தின் பிரதிபலிப்பு இது.

நவ இந்தியாவின் முக்கியமான முதல் சிற்பிகளில் ஒருவராக ஜோதி ராமலிங்கரைக் கண்டுகொள்வது அவசியமாகும்.

(தொடரும்)

படுக்கப் போகுமுன் செருப்போடு கவலைகளையும் கழற்றி வையுங்கள்.

-ரூபியா.

இந்திய மறுமலர்ச்சியின் முழுச் சின்னமாக 18ம் நூற்றாண்டின் மத்தியிலே ஒரு புரட்சி ஏற்பட்டது. அதை ஒரு புரட்சியாக அந்தக் காலத்தில் யாராவது உணர்ந்தார்களா என்பது சந்தேகந்தான். மற்ற பல, இந்தியப் புரட்சிகளைப் போல இதுவும் மரபின் முழுச் சக்தியுடனும் பழுத்த ஒரு புரட்சி என்றுதான் சொல்ல வேண்டும். கல்வியினுலோ அறிவுத் தாக்கத்தினுலோ ஏற்பட்டதல்ல இது. சங்கீதத்தில் இது முழுவதும் கனிந்து பழுத்தது. மற்றக் கலைத் துறைகள் பற்றிப் போதுமான தகவல்கள் இல்லாததனுல் இசையில் மட்டும் தான் இந்தப் புரட்சி ஏற்பட்டது என்று நினைக்க வேண்டியதாயிருக்கிறது.

இசையின் சரித்திரம் கூடத் தமிழ் நாட்டில் இல்லை. அதன் பழைய புதிய போக்குகள் பற்றிக் கூடக் கூர்மையான தெளிவான சரித்திரம் தெரியவில்லை. சைவம் பாடிய நால்வரும் வைணவம் பாடிய பன்னிருவரும் ஆரம்பித்து வைத்த இசைப் போக்கு எத்திசையில் எப்படிப் போயிற்று என்று நிச்சயமாகத் தெரியவில்லை. இவர்கள் காலத்தை அடுத்து வந்த சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோவடிகள் மாதவி தன் நாட்டியத்தைத் தொடங்கியபோது ஒரு தெலுங்குப் பாட்டை முதலில் பாடி அதற்கு நாட்டியம் ஆடினுள் என்று சொல்லுகிறுள். புரந்தர தாசரின் கன்ன



# தியாகப் பிரும்மம்

## —க.நா.சுப்ரமண்யம்

டக் கீர்த்தனைகளைக் கர்நாடக சங்கீதத்தின் ஆரம்பமாகக் கருதுவது பதினுறு, பதினேழு, பதினெட்டு நூற்றுண்டுகளில் வழக்கமாக இருந்து வந்திருப்பது தெரிய வருகிறது. ஆக தெலுங்கு, கன்னடம். தமிழ் மூன்று மொழிகளிலும் இசை ஒருமித்து வளர்ந்திருப்பதாகத் தெரிகிறது. தஞ்சையிலும், மதுரையிலும் நாயக்க மன்னர்கள் ஆட்சி ஏற்பட்ட பிறகு தெலுங்கு மொழி

உபயோகம் மற்ற இரு மொழிகளையும் விட அதிகப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. பதினைந்து, பதினாறாவது நூற்றாண்டுகளில் தஞ்சை நாயக்கர்கள் ஆதரவில் வெங்கடமகி போன்றவர்களின் மேதையினால் கர்நாடக இசை ஒரு குறிப்பிட்ட உருவமும் உள்ளடக்கமும் பெறத் தொடங்கியது. ஆனால் பதினெட்டாம் நூற்றாண்டின் மத்தியில் தொடங்கி பத்தொன்பதாம் நூற்றாண்டுகளின் ஆரம்பக் காலங்களில் ஒரு முழுமை நிலையை எட்டியதாகச் சொல்லுகிறார்கள். தஞ்சாவூர், திருவனந்தபுரம் தர்பார்களிலும், எட்டயபுரம், ராமநாதபுரம் போன்ற பல சிறு சிறு ஜமீன்களிலும் இசை வளர்க்கப்பட்டுப் பரிணமித்தது.

பதினெட்டாவது நூற்றாண்டின் ஆரம்ப வருஷங்களில் செயிண்ட் ஜார்ஜ் கோட்டையில் ராணுவ பாண்டில் வாசித்த வயலின் விற்பன்னர்களை காதால் கேட்டு முத்துஸ்வாமி தீஷிதரின் பாட்டனாரோ, அவருடைய தகப்பனாரின் சகோதரரோ வயலின் வாத்தியத்தை அப்பசித்து அது கர்நாடக இசைக்கு உபயோகப்படும் என்கிற விஷயத்தை உணர்ந்து அதைப் பக்க வாத்தியமாகக் கொணர்ந்தார் என்று சொல்லுகிறார்கள். இப்போது எண்ணிப் பார்க்கும்போது இதையேகூட ஒரு பெரும் புரட்சியாகக் கருத வேண்டும் என்று தோன்றுகிறது. இன்று வயலின் இல்லாத கச்சேரியைப் பற்றி நினைக்கக் கூட முடியாது. அவ்வளவுக்கு கர்நாடக சங்கீதத்தில் வயலின் 'இசைந்து விட்டது.

மற்ற எல்லாக் கலைகளையும்விட இசையில் ஒரு சௌகரியம் இருக்கிறது. ஈடுபாடும் தேர்ச்சியும் குரலும் இருந்து விட்டால் சங்கீதத்துக்கு என்று உபகரணங்கள் வேறு எதுவும் தேடத் தேவையில்லை. சித்திரக்காரன் போல வர்ணம், படுதா, சுவர் என்று தேடிப் போக வேண்டியதில்லை. சிற்பி போல உளி, கல், உலோகம் என்று தேடிப் போக வேண்டியதில்லை. இலக்கியகர்த்தா போல எழுதியதைப் பிரசுரிக்க யார் முன் வருவார்கள் என்று தேட வேண்டியதில்லை. உன்னதமான கலையின் முக்கியமான ஒரு அம்சம் இசைக் கலையில் பூர்ணமாக இருக்கிறது. சிருஷ்டிகர்த்தாவிடமிருந்து விட்டுப் போகாத இசை யாருடைய குறுக்கீடும் இல்லாமல் பலரையும் எட்டி விடுகிறது. கலைகளின் கூர்மையும் தாக்கமும் அதிகமாக மழுங்கி இருக்கிற இந்த 1980களில்கூட இசை பற்றி நம்மிடையே அதிகமான விவாதம், பேச்சு, ஈடுபாடு காணப்படுவதற்குக் காரணம் இசை அதி சுலபமாகவே எல்லோரையும் எட்டி விடுகிறது என்பதுதான். மனம் ஒன்றுதான் வேண்டும்.

இசைக்கு மொழி தேவையில்லை என்றும், அது எல்லா ஜீவராசிகளுக்கும் பொதுவான ஒரு மொழியைப் பேசுகிறது என்றும் சொல்லுகிறார்கள். இலட்சிய உலகில் அப்படி இருக்கலாம். நடைமுறை உலகில் நிச்சயமாக அப்படியில்லை என்பது தெரிகிறது. தமிழிலும், தெலுங்கிலும் கன்னடத்திலும் பல இசை உருப்படிகள் பயின்று வந்திருக்கின்றன. கடினமான வார்த்தைகளோ, இலக்கணச் செம்மையோ சங்கீதத்துக்கு அவசியமாக இருக்கவில்லை. தினசரி புழங்கும் வார்த்தைகளில் சுலபமாக அர்த்தப்படுத்தக்கூடிய வாக்கியங்களில் இசையை அமைப்பது அதைப் புதிய முறையில் ஜனரஞ்சகமாகச் செய்ய உபயோகப்பட்டது. கன்னடம் பேசுகிறவர்களும், தெலுங்கு பேசுகிறவர்களும் தமிழ் பேசுகிறவர்களும் நிறைந்திருந்த தஞ்சாவூர் பிரதேசத்திய இசையில் மறுமலர்ச்சி ஏற்பட்டு, இன்றைய மறுமலர்ச்சிக்குக் காரணமாக அமைந்ததற்குக் காரணம் மக்களிடையே அந்தப் பிராந்தியத்தில் இசையும், அறிவும், பிரக்ஞையும் பரவலாக இருந்ததுதான் என்று சொல்லலாம். தஞ்சாவூர் பிரதேசத்தில் திருவாரூர் நகரத்தில் சற்றேறக்குறைய ஒரே காலகட்டத்தில் கர்நாடக சங்கீதத்தின் மும்மூர்த்திகள் என்று சொல்லுகிற சாமா சாஸ்திரிகள், முத்துசுவாமி தீக்ஷிதர், தியாகப்பிரம்மம் மூவரும் பிறந்ததை காலத்தின் ஒரு விளைவாகத்தான் கருத வேண்டும்.

அது தஞ்சாவூரில் மராட்டியர்கள் ஆண்ட காலம். பிரிட்டிஷார் ஈஸ்ட் இந்தியா கும்பெனியார் என்கிற பெயரில் ராணுவ நடவடிக்கைகள் மூலமும் ஒருதலைப்பட்சமான வியாபார ஒப்பந்தங்கள் மூலமும் கொஞ்சம் கொஞ்சமாக நாடு பிடிப்பதில் ஈடுபட்டிருந்த காலம். தெற்கே ஹைதர் அலியும், திப்புவும் பிரிட்டிஷார் சாம்ராஜ்யத்தை ஸ்தாபிக்காது இருக்கும் வண்ணம் வேறு அந்நியர்களைச் சேர்த்துக் கொண்டு போராடிக்கொண்டிருந்த காலம். போர் நடந்த இடங்களில் ஏற்பட்ட ஆள் சேதத்தையும், அழிவுகளையும் கண்டு பயந்த பல அறிஞர்களும் கலைஞர்களும் அறிவையும், கலையையும் ஆதரித்த தஞ்சாவூர் . தர்பாருக்கு வந்து அடைக்கலம் புகுந்து கொண்டிருந்த காலம். தஞ்சையில் அதிகமாக அமைதி குலையாமல் இருந்த காலம். தஞ்சை சங்கீத மகாலில் தினம் ஒருவராகப் பாடினாலும்கூட அரசவையில் இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை தான் பாட முடியும் என்று எண்ணிக்கையில் அவ்வளவு அதிகமாக இருந்தார்கள் இசைக் கலைஞர்கள். இதில் பெரும்பகுதியினர் தெலுங்கர்கள். அதற்குக் காரணம் தஞ்சாவூர் ராஜ்ஜியமே நாலு தலைமுறை முன்னர் வரை தெலுங்கர் ஆட்சியிலிருந்தது. ராஜா சன்மானங்களும், தர்பார் வெகுமானங்களும் பெற்று இசைக் கலைஞர்கள் தன்மானத்துடன் காலந்தள்ள முடிந்தது என்பது இன்று சிந்தித்துப் பெருமைப் படக்கூடிய விஷயமாகத்தான் இருக்கிறது. இதிலும் ஏற்றத் தாழ்வுகள், நியாய, அநியாயங்கள் தர்மம், அதர்மம் அடியோடு அழிந்து போயிருக்கும் என்று எண்ணிப் பார்க்க முடியாது.

சங்கீத மும்மூர்த்திகள் என்று சொல்லப்படுகிற சாமா சாஸ்திரிகள், முத்துஸ்வாமி தீட்சிதர், தியாகப்பிரம்மம் மூவரும் சமகாலத்தவர்கள். 18-ஆம் நூற்றூண்டின் பிற்பகுதியிலும் 19-ஆம் நூற்றூண்டின் முற்பகுயிலும் வாழ்ந்து இசையறிவையும், ஞானத்தையும் பரவச் செய்தவர்கள். தஞ்சையில் பெய

## ஹாங்காங்



உலகிலேயே அதிகமாக ரோல்ஸ்ராய்ஸ் கார்கள் (580 கார்கள்) இங்குதானிருக்கின்றன.

உலகின் மிகமிகப் பெரிய நியான் விளம்பர விளக்கு இங்குதானுள்ளது. காஸ்வே பே என்ற இடத்தில்-மேலே அமைக்கப்பட்டுள்ள சிட்டிசன் கடிகார விளம்பரம் 328 அடி நீளம் - அதாவது ஒரு 747 ஜெட் விமானத்தை விட 100 அடி அதிகமான நீளம்! இதை எரிக்க 1 லட்சம் வாட் மின்சாரம் செலவாகிறதாம் (1000 பெரிய டி.வி. செட்டுகளுக்குச் சமம் என்கிறார்கள்! அம்மாடி!)

உலகிலேயே பயணிகள் அதிகம் உபயோகிக்கும் 'சப் வே' ஹாங்காங்கில் தானுள்ளது. 26 கிலோ மீட்டர் தூரமுள்ள இந்த 'சப்-வே'யை தினமும் 1 கோடியே 20 லட்சம் பேர் பயன்படுத்துகின்றனர்.

(வேர்ல்ட் எக்ஸிகியூடிவ் டைஜஸ்ட்)

— அனிதா

ரஸவில் ஆண்ட சரபோஜி ராஜாவுக்கு ஒரு தலைமுறை மூத்தவர்கள். மூவரையும் சரபோஜி ராஜாவுடன் இணைத்துப் பலதரப்பட்ட கதைகள் சொல்லப்படுகின்றன. எந்தக் கதை பாதி உண்மை, எது முழுவதும் உண்மை என்று இப்போது அறிந்துகொள்ளுவது மிகவும் சிரமம். ஆனால் ஒருவர் தஞ்சை தர்பாரிலேயே இசை விற்பன்னராக வீற்றிருந்ததும், இரண்டாமவர் அமைதி நாடி தெற்கே எட்டையபுரம் வரையில் சென்று உயிரிழந்ததும், மூன்றாம் நபர் தஞ்சைக்குப் பக்கத்தில் திருவையாற்றில் எளிய வாழ்க்கை வாழ்ந்துகொண்டு புகழ் பரப்பியதும் சரித்திரச் சான்றுகளுடன் தீர்மானமான விஷயங்கள். மூவருக்குமே இந்தியா என்கிற ஒரு நினைப்பு அவர்கள் காலத்தில் ஏற்பட்டிருக்குமேயானால் காசி, கங்கை, ராமேசுவரம் என்று ஏற்பட்டிருக்கக்கூடுமே தவிர, வேறு அல்ல. தாங்கள் தங்கள் இசை முயற்சிகள் மூலம் சமுதாயத்தில் ஏற்படப்போகிற ஒரு மறுமலர்ச்சிக்கு வித்து இடப்போவதாக அவர்களுக்குப் பிரக்ஞையே இருந்திருக்காது. சமுதாயம், மறுமலர்ச்சி என்கிற சிந்தனைகள் அவர்கள் நினைவு வட்டத்தில் வந்தே இராத காலம். அவர்கள் தங்கள் இசையை ஒரு தவமாகவும், தங்கள் வாழ்க்கையையே ஒரு யோகமாகவும் ஏற்றுக்கொண்டு வந்தவர்கள். தவம், யோகம் என்கிற இரண்டும் மற்ற இருவரையும் விட தியாகராஜாவின் வாழ்க்கையில் அவர் காலத்திய மக்களுக்கும், பிற்காலத்தியவருக்கும் எடுப்பாகத் தெரிந்ததில் ஆச்சரியம் ஒன்றுமில்லை.

தியாகப்பிரும்மம் என்பதில் பிரும்மம் என்கிற பட்டப் பெயர் யாரோ தந்து அவருக்குப் பெருமை சேர்க்கிற பட்டமாக உபயோகப்பட்டதல்ல. ராமப் பிரம்மத்தின் மகன் தியாகப்பிரம்மம் என்பது தானாக ஏற்பட்டது. தகப்பனைவிட மகனுக்கு அதிகப் பொருத்தமாகவும் அந்தப் பட்டம் இருந்தது என்று சொல்லத் தோன்றுகிறது. லௌகீக வழிகளில் ஈடுபடாமல் ஆன்மீகப் பாதையில் செல்பவரைக் குறிப்பதற்கு அது தகுந்த வார்த்தைதான்.

போக்குவரத்து சுலபமாக இல்லாத காலம் அது. பழைய பக்தர்களைப் போல ஊர்ஊராக, கோவில் கோவிலாகச் சென்று பாடியதாகவும் தியாகராஜாவைப் பற்றிக் கதைகள் இல்லை. இருந்த திருவாரூரிலிருந்து வாழ்ந்த திருவையாறுக்கு ஒரு பயணம், தெற்கே ஸ்ரீரங்கத்துக்கு ஒரு பயணம், வடக்கே திருப்பதிக்கு ஒரு பயணம் இதற்குமேல் வேறு எங்கும் அவர் சென்றதாகத் தகவல் இல்லை. ஆனால் தமிழ் கூறும் நல்லுலகம் பூராவும் அதற்கு அப்பால் கேரளத்திலும்கூட கடைசி முப்பது நாற்பது வருஷங்களில் அவர் புகழ் பரவியிருந்ததாகத் தெரிகிறது. அப்படி



**மந்திராலோசனை...**

தனக்கு ஒரு காபினெட் மந்திரி பதவி வேண்டுமென்று பிரதமரிடம் கேட்டதாகச் சொல்லப்படுவதை அமிதாப் மறுத்திருக்கிறார்.

அப்படியானால் மந்திரியாக இவருக்கு விருப்பம் இல்லையா?

''அந்தப் பதவிக்கு என் பெயர் சிபாரிசு செய்யப்படும்போது அது பற்றிப் பரிசீலனை செய்வேன்'' என்கிறார் அமிதாப்.

—தேவாதிதேவன்

யொன்றும் இன்றைக்கு அன்று கலை யின் பெருமையை அறிந்தவர்கள் நிறைந்திருந்தார்கள் என்றும் சொல்ல முடியாது. தியாகராஜாவின் புகழும், பெருமையும் தட்ட முடியாத கட்டாய மாக ஏற்றுக்கொள்ள வேண்டிய புக ழும் பெருமையுமாகத் தமிழகமெங்கும் பரவியிருந்தது என்றுதான் சொல்ல வேண்டும். 19ஆம் நூற்றுண்டில் ஒரு ஐம்பது வருஷங்களுக்கும், அதிகமாக அவர் உயிருடன் இருந்தார். பக்கத்திலி ருந்த தஞ்சையில் சரபோஜி ராஜா இறந்து அவன் மகன் சிவாஜி ராஜா பட்டத்துக்கு வந்து அவனும் இறந்து, பிரிட்டிஷார் நகர பரிபாலனத்தையும் கைக்கொண்டதற்கு இரண்டு வருஷங்க ளுக்குப் பிறகுதான் தியாகராஜாவின் தவ வாழ்வு முடிந்தது.

இதெல்லாம் பற்றி தியாகராஜாவுக் குக் கவலையும் இல்லை. கவனமும் இருந் ததாகத் தெரியவில்லை. மற்றவர்கள் என்ன நினைத்தாலும் அதையெல்லாம் பற்றிக் கவலைப்படாமல் தன் வாழ்வு வாழ அவருக்குத் தெம்பு இருந்தது. கலையையோ, வாழ்க்கையையோ, வியாபாரப் பொருளாக்குவது என்பது பிழைப்புக்கு வழியாகக் கருதுவது என் பது இன்று நேற்று ஏற்பட்ட சித்தாந் தம் அல்ல. ஆனல் தியாகப் பிரம்மத் தின் காலத்தில் பிரிட்டிஷ் கும்பினி புழக்கத்தாலும் பழைய மதிப்பீடுகளின் தளர்வு செயலின்மை இவற்றாலும் வியாபாரப் போக்கு என்பது சற்று தெளிவாகவே வியாபகம் பெற்றிருந் தது. மதப்பிடிப்பு தளராவிட்டாலும் பழைய நம்பிக்கைகள் கொஞ்சங் கொஞ்சமாகத் தங்கள் பிடிகளைத் தளர்த்திக்கொண்டு வந்தன. இந்தச் சம யத்தில் தன்னையோ தன் கலையையோ பணமாக்கவோ பிழைப்புக்கு வழியாக் கவோ முடியும் என்கிற சிந்தனை சிறி தும் இல்லாமல் தன் பாட்டுக்குப் பா டிக்கொண்டு உஞ்ச விருத்தி எடுத்து பிழைத்துக்கொண்டு எண்பது ஆண்டு கள் வாழ்வது என்பது இப்போது நினைத்துப் பார்க்கும்போது கூட சிரம சாத்தியமான காரியமாகத்தான் தோன்



நீதிபதி: இந்தக் கணவனும் மனைவி யும் சண்டை போட்டுக் கொண்ட போது பார்த்ததாகச் சொல்கிறுயே, இந்த சண்டையின் ஆரம்பத்தில் நீ சாட்சியாக இருந்தாயா?
சாட்சி: ஆமாம்; அவர்கள் திரும ணத்தின் போது நானும் இருந்தே னே!

— முத்து

றுகிறது. சம்பாத்தியம் என்றும் செல் வாக்கு என்றும் தானே தேடிப் போகா மலிருப்பது சிரமம். அவை தானுக்வே ஒருவனைத் தேடி வரும்போது வேண் டாம் என்று தீர்மானமாகச் சொல்லி விட்டு நகர்ந்து விடுவது மிகச் சிரமம். இதைச் செய்தவர் ஒரு இசை மேதையு மாக இருந்தது மிகவும் சிறப்பான விஷயமாகத்தான் பொதுமக்களுக்குப் பட்டிருக்க வேண்டும்.

தியாகராஜர் காலத்திலும் ஒரு சில ரேனும் ஆன்மிக வாழ்க்கை வாழ்வதற் காக பௌதீக வழிகளைப் புறக்கணித்த வர்கள் இருந்திருக்கக்கூடும். இன்றும் கூட ஒரு சிலர் இருக்கலாம்தான். ஆனல் இவர்கள் எல்லோருக்கும் தியா கப்பிரும்மத்தின் இசை மேதையும் கூடி யிருக்கவில்லை. கலையும் வாழ்க்கையும் ஒருங்கே அமைதி பெறுகிற பாக்கியம் எப்பொழுதோ அபூர்வமாக நடக்கிற காரியம் என்றுதான் சொல்ல வேண் டும்.

ஈஸ்ட் இந்தியா கம்பெனி நாட்க ளில் இந்தியா என்கிற தேசம் நவநாகரீ கம் என்று சொல்லப்படுகிற முற்போக் குப் பாதையில் காலை எடுத்து வைக்க ஆரம்பித்தபின் விக்ரக ஆராதனையில் நம்பிக்கை வைப்பது என்பது மிகவும்

சிரமமான காரியம். கிறிஸ்துவப் பாதிரியார்கள் விக்ரகங்களே ஆராதனே செய்வது அநாகரீகம் என்று சொல்லிப் பிரச்சாரம் செய்து கொண்டு இருந்தார்கள். ஆனல் அந்தப் பிரசாரம் திருவாரூரையோ, திருவையாறையோ எட்டியிருக்க வேண்டியதில்லே. சற்றேறக்குறைய தியாகப்பிரம்மம் பிறந்த ஆண்டிலேயே பிறந்து அவர் இறப்பதற்கு இருபது ஆண்டுகள் முன் இறக்க இருந்த ராம் மோகன்ராயைத்தான் அறிவுப் பூர்வமாக இந்திய மறுமலர்ச்சியின் தந்தை என்று ஏற்றுக்கொள்வது இன்றைய அறிவாளிகளிடையே வழக்கமாகப் போய்விட்டது. இந்தியச் சிந்தனேகளில் பல சிகரங்களேயும் அறிந்த ராம்மோகன்ராய் விக்ரக ஆராதனேயை எதிர்ப்பதைத் தன் சித்தாந்தத்தில் ஒரு ஆணி வேராகக் கருதினர். பிரம்ம சமாஜம் இந்து மதத்தில் விக்ரங்களின் ஆதிக்கத்தைப் பூரணமாக எதிர்த்தது. ஆனல் பகுத்தறிவுவாதிகள் எத்தனே சொன்னலும் கலே, அழகு என்பது இந்திய மரபில் மட்டுமல்ல, மற்ற உலக மரபுகள் பலவற்றிலும்கூட விக்ரக ஆராதனேயை அஸ்திவாரமாகக் கொண்டுதான் இருந்திருக்கிறது. தியாகப்பிரும்மம் இந்த மாதிரி சித்தாந்த விவகாரங்களில் ஈடுபாடு இல்லாதவர். ஆனல் அவர் பூஜித்த விக்ரகம் அவருக்கு மற்றது எல்லாவற்றையும்விட அதிக உண்மையானது. இந்த உண்மைக்கு ஆதாரமாகக் கதைகள் அவர் கீர்த்தனேகள் இருக்கவே இருக்கின்றன.

இன்னென்றும் சொல்லலாம். தான் ஆராதித்த ராமரைத் தேடிக்கொண்டு தியாகப்பிரும்மம் அயோத்திக்குப் போகவில்லே. க்ஷேத்ராடனம் செய்யவில்லே. ராமன்தான் அவரைத் தேடிக்கொண்டு வந்தான் என்று சொல்லுகிருர்கள். இதை வெறும் கதையென்றும் ஒதுக்கிவிட முடியவில்லே என்பது தான் விஷயம்.

தியாகப்பிரும்மத்தின் வாழ்க்கையும் கலேயும், பொதுவாகத் தளர்ந்து வந்து கொண்டிருந்த ஒரு பூரணமான பழமையின் பிடிப்பை அவர் காலத்துக்குப் பின்வந்த மக்களுக்கு எடுத்துச் சொல்லுகின்றன. இந்தப் பழமையும் அதன் பிடிப்பும் போகப் போகத் தளர்ந்து கொண்டேதான் இருக்கும் என்பது பின்வந்த சந்ததிகளுக்கு அனுபவத்திலும் நினேப்பிலும் உள்ள ஒரு விஷயம். இந்தப் பிடிப்பும் பழமையும் எவ்வளவு வேண்டுமானலும் தளரலாமே தவிர தவிர்ந்து அகன்றுவிடக்கூடாது என்பது இந்திய மறுமலர்ச்சியின் இன்றைய சிந்தனேப்போக்கு. அந்தச் சிந்தனேயைச் சாத்தியமாக்குகிறவர்களில் தியாகப்பிரும்மம் ஒருவர்.



**எண்ணூறு வயது மரம்**

சீனவில் மரங்களேப் பெரிதும் அக்கறையுடன் வளர்க்கிருர்கள். அதுவும் புராதன மரங்களுக்குக் கூடுதலான பாதுகாப்பும், பராமரிப்பும். அங்குள்ள நாலாயிரத்து இருநூறு பைன் மரங்கள் முன்னூறு வயதானவை. அவற்றில் ஒன்றுக்கு எண்ணூறு வயதாகிறது.

— ஜியாகிரஃபிகல் மேகஸின்

— ஆர்.எம்.

ம.சையத் காதர்,
சென்னை-1

குனிந்து நிமிர்ந்தால் ஒரு விழா; தடுக்கி விழுந்தால் ஒரு விழா என்று அரசியல்வாதிகள் பறந்து கொண்டேபோனல் ஏழைகளுக்கு சோறு கிடைத்துவிடுமா?

அன்றைக்கு மட்டும் பிரியாணி பொட்டலமே கிடைக்கிறதாம்.

அ.‌ சம்சுதீன்,
நாவினிப்பட்டி.

70 ஆயிரம் ஏக்கர் நிலத்தை பஞ்சாப் அரியாணவிற்கு விட்டுத் தர வேண்டியது பற்றி தும்பியார் என்ன கூற விரும்புகிருர்?

இந்த 70 ஆயிரம் ஏக்கர் பிரதேசத்தை தனி மாநிலமாக்கி அதற்கு சண்டிகரை தலைநகராக வழங்கி விடலாம் என்பது என் யோசனை.

டாக்டர எஸ்.ஏ. அமுதன்,
நீடாமங்கலம்.

பல மாணவர்கள், கிராமங்களில், பள்ளிகளுக்குச் சென்று, சத்துணவு சாப்பிட்டவுடன் வீட்டிற்குத் திரும்பி விடுகிருர்களாமே! இது எதை உணர்த்துகிறது?

பசிக்கு உணவு இனிக்கும். புரியாத பாடம் கசக்கும்.

கா. அப்துல் மஜீத்,
திருமயம்.

தலை விரித்தாடும் மூன்றெழுத்துப் பிசாசு உலக நாடுகளை விட்டே ஒழியவில்லையே! பொதுமக்கள்தான் பல்வேறு ஊழல்கள் தோன்றக் காரணம் என்பதை மறந்து விட்டு நல்லாட்சி நடத்துபவர்களை தூற்றுவதால் உம்மை மக்கள் வெறுக்க மாட்டார்களா?

நல்லாட்சி என்ருல் என்ன?

ஜி.ராஜசேகர்,
வலங்கைமான்.

இன்று இந்தியாவில் யாருடைய குரல் அதிகமாகக் கேட்கிறது?

ஒலிபெருக்கியின் குரல்.

காஸிம் ஆலிம் மஹ்ளரி,
இளையான்குடி.

சிலரால் கடவுளெனக் கருதப்படும் சிலைகளே நாடு கடத்தப்படும்பொழுது, அந்தச் சிலைகள் எவ்வாறு கடவுளாக இருக்க முடியும்?

கடவுள்தான் சிலையாக இருக்கிருர்.

13-7-86 இதழில் பெரும்பான்மை வாசகர் தீர்ப்புப்படி ரூ. 10 பரிசுக்கான கேள்வியைக் கேட்டவர்: அ. ஜமால் மொய்தீன், C/O ஒய். யூனஸ் டெய்லர், திரு.வி.க. தெரு, செங்குன்றம், சென்னை-52.

### பரிசுக்குரிய கேள்வி

கொடி நாள், குழந்தைகள் ஆண்டு, இளைஞர் ஆண்டு, என்பனவற்றை நம் நாடு கொண்டாடுவதைப்போல், "வேலையில்லாத் திண்டாட்ட ஒழிப்பு- நாளோ அல்லது ஆண்டோ" என்று கொண்டாடப்படும்?

"வேலையில்லாத் திண்டாட்ட ஒழிப்பு நூற்ருண்டு" விரைவிலேயே கொண்டாடப்பட இருக்கிறது.

---

மு.வே.சங்கர்,
திருமயம்.

மத்திய ராஜ்யசபை தேர்தலில் தி.மு.க. வெற்றியின் ரகசியம் என்ன? செழியன் தோல்வியின் மர்மம் என்ன?

கறுப்பு, பச்சை, வெள்ளை (தெரியாது)



ஆ.பாலாஜி குமார்,
மதுரை-20

தான் செய்த தவறுகளை ஒப்புக் கொள்ளும் பெருந்தன்மை நமது அரசியல்வாதிகளுக்கு, எப்போது வரும்?

கட்சிமாறும்போது.

இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனையாளர்கள்-4

# ராஜாராம் மோகன்ராய்

— க.நா. சுப்ரமண்யம்

வழக்கமாக இந்திய மறுமலர்ச்சியின் தந்தை என்று சொன்னால் ராம் மோகன் ராய் என்று சொல்லித் தொடங்குவதுதான் வழக்கம். ராம் மோகன் ராயை இந்திய மறுமலர்ச்சியின் தந்தை என்று ஏற்றுக்கொள்வது இந்த நூறு ஆண்டுகளில் வழக்கமாகிவிட்டது.

இந்திய மறுமலர்ச்சியின் பல்வேறு அம்சங்களையும் தங்களுக்குள் அடக்கிக் கொண்டவர்கள் உழைத்தவர்கள் என்று வேறு பலரையும் சொல்லலாம். ராய்க்கு சமகாலத்தவரான தஞ்சை சரபோஜி கலைகள் (இசை, நாட்டியம், நாட்டிய நாடகங்கள், சிற்பம் முதலியன) இலக்கியம், விஞ்ஞானத் துறைகள் (ஃபிஸிக்ஸ், கெமிஸ்டிரி, பாட்டனி, ஜூவாலஜி, பையாலஜி முதலியன) சுகாதாரம் (பொது, தனி மனித, மருத்துவம், மிருகங்களுக்கு வைத்தியம்) கல்வி என்றெல்லாம் பல பகுதிகளிலும் உழைத்தவர். அவர் உழைக்காத துறைகள் என்று அரசியல், சமூகச் சீர்திருத்தம் என்ற இரண்டையும் சொல்ல வேண்டும். இந்த இரண்டு துறைகளும்தான் பின்வந்த நூறு ஆண்டுகளில் முக்கியமாகக் கருதப்பட்டவை என்பதனாலேயே அவை இரண்டிலும் இந்தியர்களுக்கு அடியெடுத்துக் கொடுத்த ராம் மோகன் ராயை இந்திய மறுமலர்ச்சியின் முதல்வராகக் கருதுவது என்பது வழக்கமாகப் போய்விட்டது என்று சொல்லலாம்.

இன்னொரு துறையிலும் சரபோஜி, ராய் இருவருடைய கவனமும் சென்றது. அவர்கள் எவ்வளவு அழுத்தமாகத் தான் அதை வற்புறுத்திச் சொல்லியிருந்தாலும் நாம் இன்றும் அதைப் பூரணமாக உணர்ந்துவிட்டதாகச் சொல்ல முடியாது. அது கல்வித் துறை நமது மறுமலர்ச்சி லட்சியங்களுக்கு பொதுவாக ஒத்துவராத ஒரு கல்வி முறை இன்று, இந்தியாவில் ஆட்சி செலுத்துவதற்கு லார்டு மெக்காலேயின் கல்வி முறை பற்றிய கட்டுரைச் சட்டத்தை காரணம் காட்டிவிட்டு நாம் திருப்தியுற்று விடுகிறோம். உண்மையில் மெக்காலே சட்டம் இயற்றியது உண்மைதான் என்றாலும் அந்தச் சட்டத்தைச் சாத்தியமாக்கியவர்கள் என்று ராம் மோகன் ராய் போன்றவர்களைத்தான் சொல்லவேண்டும். அப்போதைய தேசீயக் கல்வி முறைகளில் ராய்க்கு இருந்த அதிருப்தி பிரசித்தமானது.

ராஜா சரபோஜி சொன்ன கல்வி முறையைப் பின்பற்றியிருந்தால் இந்தியக் கலைகள், இலக்கியங்கள், மேலை நாட்டு விஞ்ஞானங்கள் எல்லாவற்றிற்கும் இந்தியக் கல்வி முறையில் இடம் இருந்திருக்கும். ஒரு சமநிலைக் கல்வி இந்தியா பூராவும் பரவியிருக்கும். இதைப் பின்னர் டாக்டர் ஆனந்த குமாரசாமி என்பவர் வற்புறுத்த இருந்தார் என்று காணலாம்.

ராம் மோகன் ராயை இந்திய மறுமலர்ச்சியின் முதல்வராகக் கருதுவதற்கு இன்னொரு காரணமும் உண்டு. இது சரித்திர ரீதியாக அமைந்தது. துருக்கியர்களும், முகலாயர்களும் இந்தியாவின் வடகிழக்குப் பிரதேசங்கள் வழியே வந்து பஞ்சாப், டெல்லி முதலிய பிரதேசங்களை ஆண்டனர். ஆங்கிலேயர்கள் சூரத், பம்பாய், மதராஸ் என்று வியாபார நிமித்தம் பல இடங்களிலும் இருந்தாலும் கூட ஆங்கிலேயர்களுக்கு முழுமையாக அரசியலாதிக்கம் செலுத்தக் கிடைத்த பிரதேசம் வங்காளம்தான். வங்காளத்தையும், வங்க மொழிக்காரர்களையும் தங்களுக்கு அடுத்தபடியாகக் கருதுவதென்பது அந்தக் காலத்து ஆங்கிலேயர் வழக்கமாயிற்று. ஆங்கிலேயர்களை எல்லா விஷயங்களிலும் பின்பற்றுவதே நாகரிகம் என்று எண்ணிய இந்தியர்களுக்கும் நாளடைவில் வழக்கமாகிப் போய்விட்டது. இந்திய மறுமலர்ச்சியில் பல துறைகளில் பல தரப்பட்ட அம்சங்களில் வேறு பல பிராந்தியங்களில் காலத்தாலும், கனத்தாலும், ஆழத்தினுலும் முதல்வர்கள் என்று சொல்லக் கூடியவர்கள் பலரும் இருந்தாலும், வங்க முதல்வர்களையே முதல்வர்களாக ஏற்றுக் கொள்வது மரபாகிப் போய் விட்டது. ஆங்கில சரித்திராசிரியர்களும் அவர்களைத் தொடர்ந்து இந்திய சரித்திராசிரியர்களும் செய்து தந்து விட்ட பழக்கம்!

இதில் சௌகரியமும் இருந்தது. அசௌகர்யமும் இருந்தது. உலக சரித்திரத்தில் இந்த மாதிரிப் "பொய்கள்" பல உண்டு. அவை தெரிந்தும் மெய்யாகவே ஏற்றுக் கொள்ளப்படுகின்றன என்பதுதான் விசேஷம். உதாரணமாக கிறிஸ்துவ மதம், கிறிஸ்துவுக்குப் பின் முப்பது வருஷங்களுக்குள்ளாகவே இந்தியாவை எட்டி விட்டது. ஆனல் அதை ஏற்றுக் கொள்வது இந்திய சரித்திரத்தில் வழக்கமில்லை. இதே போல "சரித்திர உண்மைகளாகிவிட்ட பொய்களாக" தமிழ்ச் சங்கங்களையும் சொல்லலாம்.



ராம் மோகன்ராய் 1772-லோ, 1774-லோ பிறந்தவர். வங்க பிராமணக் குலத்தில் பிறந்தவருக்குப் பிராமணர்கள் வீட்டு மதச் சடங்குகள் அர்த்தமற்றவையாகவும், அனுவசியமாகவும் தோன்றியதில் ஆச்சரியமில்லை. எந்த மதமுமே அதன் ஸ்தாபகரின் அல்லது ஆரம்ப கர்த்தாவின் காலத்திலேயே க்ஷீணிக்கவும் நசிக்கவும் ஆரம்பித்து விடுகிறது என்பது சரித்திர ரீதியாகக் காணக்கிடக்கிற ஒரு உண்மை. வங்கத்தில் மட்டுமல்ல, இந்தியா பூராவிலுமே இந்து மதத்தின் உன்னதமான சிகரங்களாகக் கருதப்பட்ட பிராமணர்கள் காலதேச வர்த்தமான்களை ஒட்டி நசிவு அடையத் தொடங்கி வெகு காலம் ஆகிவிட்டது. முஸ்லீம் அதிகார வர்க்கத்தை எதிர்த்து நிற்க இந்து மத நம்பிக்கைகள் போதுமானவையாக இருந்திருக்கலாம். ஆனல் வெள்ளையர்களின் வியாபாரத் தந்திரங்களை எதிர்த்து நிற்கப் போதுமானவையாக இல்லை. மதமே வியாபாரப் பொருளாகி விட்ட மாதிரித்தான் இருந்தது. அறிவுத் தாகம் கொண்ட ராம் மோகனுக்கு நடைமுறையில் இருந்த இந்து மதப் பழக்க வழக்கங்கள் திருப்தி தராததில் கொஞ்சம்கூட ஆச்சரியம் இல்லை.






# அந்தக் கட்டை விரல்...

குழந்தைகள் விரலை வாய்க்குள் வைத்துக் கொண்டு மெல்ல மெல்ல உறிஞ்சும் போது நமக்கு வேடிக்கையாக இருக்கும். ஆறுமாதக் குழந்தை கட்டை விரலை வாய்க்குள் வைத்துக் கொண்டு இருப்பதைக் கண்டால் ரசிப்போம். ஆனால் இதே பழக்கம் ஒரு வயதிற்குப் பிறகும் தொடர்ந்தால் அது ரசிக்கக் கூடியது அல்ல, விரும்பக் கூடியதும் இல்லை!

பால் குடிப்பதற்கு முன்னால் தன் பசியை அறிவிப்பதற்காகத்தான் குழந்தைகள் கட்டை விரலை வாய்க்

---

ராம் மோகன்ராய் முதலில் வங்க மொழியையும், பின்னர் அரபி, பர்சியம் முதலிய மொழிகளையும், அதற்குப் பின்னர் வீட்டைவிட்டு ஓடிப்போய் பன்னிரண்டு வருஷங்கள் வாரணாசியில் தங்கி சமஸ்கிருதமும் கற்றுக் கொண்டதாகத் தெரிகிறது. பின்னர் கடைசியாக ஆங்கிலமும் கற்றுக் கொண்டார். அவருக்கு எட்டு மொழிகளில் ஆழமான அறிவு இருந்தது என்று சொல்லுகிறார்கள். இந்த எட்டு மொழிகளிலுமே அவருடைய கவனம், ஈடுபாடு, பயிற்சி எல்லாம் மத சம்பந்தமான விஷயங்கள் தான். புதிதாகத் தோன்றி வளர்ந்து கொண்டிருந்த விஞ்ஞானத் துறைகளிலோ, பழமையின் பிடியிலிருந்து நழுவி விடாத இந்தியக் கலைகளிலோ அவர் கவனம் சிறிதுகூடச் சென்றதாகத் தெரியவில்லை. அதே கால கட்டத்தில் ராஜா சரபோஜிக்கு இசை, நாட்டியம், நாடகம் என்று மரபுக் கலைகளில் அதிக ருசி ஏற்படுத்திவிட்ட அரண்மனைத் தாசி முக்தியாம்பாள் போல யாரும் ராம் மோகனுக்கு இருக்கவில்லை என்பது தெரிகிறது.

இன்னொரு விஷயத்திலும் ராஜா சரபோஜிக்கும் ராம்மோகன்ராய்க்கும் உள்ள வித்யாசத்தை இங்கு சொல்லலாம். சரபோஜியின் படிப்பு ஆரம்பம் முதலே கத்தோலிக்கர்கள் கையில் இருந்தது. ராயின் படிப்பு பர்சியன் அரபிக் முன்ஷிகள், இந்திய சமஸ்கிருத பண்டிதர்கள், இவர்களுக்கு அப்பால் முடிவாக செரம்பூரைச் சேர்ந்த புரோடஸ்டண்ட் கிறிஸ்துவரிடம் இருந்தது. ஆரம்பம் முதலே கோயில், பூசாரிகள்,

குள் வைத்துக் கொள்ளும். இதை கண்டவுடன் தாயானவள் தாய்ப்பா லேயோ புட்டிப்பாலேயோ கொடுக்க வேண்டும். ஆனால் குழந்தை பேச ஆரம்பித்ததும் வாய்க்குள் கையை வைத்துக் கொள்வதை அனுமதிக்கக் கூடாது!

கையில் எச்சில்பட்டு குழந்தை விளையாடும் போது அந்த எச்சில் விரல்களில்-தூசி, கிருமிகள் ஒட்டிக் கொள்ள வாய்ப்பு இருக்கிறது. இது குழந்தையின் உடல் நிலையைப் பா திக்கலாம்.

கை விரலை வாயில் வைத்துக் கொள்வதால் உடம்பில் எச்சில் ஒழுக வாய்ப்பு இருக்கிறது. குழந் தை எவ்வளவுதான் நல்ல முறையில் டிரஸ் செய்யப்பட்டு இருந்தாலும் எச்சில் ஒழுக்கு குழந்தையின் தோற் றத்தையும், போட்டு இருக்கும் ஆடைகளையும் அலங்கோலப்படுத் தும்.

குழந்தையின் வாய்க்குள் விரல் போட்டுக் கொள்ளும் பழக்கம் பிற் காலத்தில் அவர்களுடைய தன்னம் பிக்கையைக் கூடக் குறைக்கக் கூடி யது என்று உளவியல் நிபுணர்கள் சொல்கிறார்கள். எனவே தன்னம்பிக் கை உள்ள குழந்தையாக வளர்க்க இந்தப் பழக்கத்தை மறக்கடிக்க வேண்டும்.

குழந்தையின் கையில் கசப்பான பொருள்களைத் தேய்ப்பதின் மூலம் இந்தப் பழக்கம் மறந்து போக வாய்ப்பு இருக்கிறது. விளக்கெண் ணெயைக் கூடக் கையில் தேய்க்க லாம். இதனால் குழந்தை முகம் சுளித்து இந்தப் பழக்கத்தைக் கைவி டும். [அதற்கென்று நிறைய எண்ணெ யைத் தேய்க்கக் கூடாது. குழந் தைக்கு பேதியாகும்!!]

குழந்தையோடு உட்கார்ந்து விளையாடுங்கள். அல்லது அவைக ளுக்குப் பக்கத்து வீட்டுக் குழந்தை களை அறிமுகப்படுத்தி விளையாட அனுமதியுங்கள். வீட்டில் குழந்தை கள் இருக்கும் போது குழந்தைகளின் கவனம் ஏதாவது புதிய பொருள் ஒன்றின் மீது படும்படிப் பார்த்துக் கொள்ளுங்கள். வாய்க்குள் கை போட்டுக் கொள்ளும் பழக்கம் தா னாகவே மறைந்து போகும்!

**தொகுப்பு: தாம்பிரவருணி**

---

சடங்குகள், பொய், ஏமாற்றுதல்கள் என்று சிந்திக்க ஆரம்பித்த ராம்மோ கன் ராய் விக்ரக ஆராதனையைத் தடுப் பதை ஒரு பெரிய சமூகச் சீர்திருத்தமா கக் கருத ஆரம்பித்து விட்டார். வங்கத் தில் ராம்மோகன் ராய் ஆரம்பித்து வைத்த இந்து மத சீர்த்திருத்த இயக்க மான பிரும்ம சமாஜ இயக்கம் விக்ரக ஆராதனை மறுப்பை புரோடஸ்டண்ட் கிறிஸ்துவ பாணியில் பிரசாரம் செய் தது. வேறு பல அம்சங்களும் பிரும்ம சமாஜத்தில் இருந்தன. ஆனால் விக்ரக ஆராதனை மறுப்பு ஒரு முக்கியமான அம்சம். இதைச் சரிக்கட்டி ஆவன செய்வதற்கு ராம்மோகன் ராய் இறந்து மூன்று வருஷங்களுக்குப் பின் பிறந்த ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர் தெரிந் தோ தெரியாமலோ பாடுபட வேண்டி யதாக இருந்தது. தெற்கே தோன்றிய தியாகப் பிரும்மம், ஜோதி ராமலிங்க அடிகள் போன்றவர்கள் விக்ரக ஆராத னையை ஒரு களங்கமாகக் கருதாமல், இந்து மதத்தின் சிறப்பான அம்சமாக வே கருதினார்கள் என்று சொல்ல வேண்டும்.

விக்ரக ஆராதனையில் இன்னொரு முக்கிய அம்சம் அடங்கிக் கிடக்கிறது என்பது தெளிவாகவே தெரிகிறது. அர சியல், சமுதாயம், பொருளாதாரம் என்கிற துறைகளில் ஆரம்பித்து இந் திய மறுமலர்ச்சி இயக்கம் கலைத் துறை களுக்கு எட்டியபோது இந்தியா எவ் வளவுதான் மதச் சார்பற்ற நாடாக மாறினாலும் அதன் புராதனக் கலைகளை மதச் சம்பந்தப்பட்ட விக்ரகங்களிலி ருந்து பிரித்துவிட முடியாது என்ப

தைக் கண்டது. இது மிகவும் சமீப காலத்தில்தான் சில பேருக்கேனும் தெரிய வந்திருக்கிறது. விக்ரகங்களும் அவற்றைச் சுற்றி எழுந்த கோவில்களும் இல்லாவிட்டால் இந்தியாவில் இசையும் இல்லை, நாட்டியமும் இல்லை, மற்றும் எந்தச் சின்ன, பெரிய கலைகளும் இல்லை என்று ஏற்பட்டுவிடும். இந்திய மறுமலர்ச்சியில் கலைகளின் ஆதாரமான இந்த அம்சம் சில பேருக்கேனும் சமீப காலத்தில்தான் மனதில் தோன்ற ஆரம்பித்திருக்கிறது என்று சொல்ல வேண்டும். ராம்மோகன் ராயின் மறுமலர்ச்சிச் சிந்தனைகளில் இந்தியக் கலைகளைப் பற்றிய நினைப்பு அறவே இல்லாததை ஒரு குறையாகத்தான் கருத வேண்டும்.

ராம்மோகன் ராயின் மற்ற சமுதாய அரசியல் கல்வி சீர்திருத்தங்கள் பொதுவாக நம்மிடையே இன்னமும் செயல்பட்டுக் கொண்டிருப்பவை என்றுதான் சொல்ல வேண்டும். சின்ன வயதில் அவர் வீட்டிலேயே நடந்த ஒரு கோரமான சம்பவம் அவரை 'சதி' என்கிற பழக்கத்துக்கு ஆட்சேபம் சொல்லவைத்தது. பெண்களுக்கு கல்வியும், சுதந்திரமும், ஆண்களுடன் சமமான அந்தஸ்தும், ஆங்கிலேயர்கள், கிறிஸ்தவர்கள் போல தர வேண்டும் என்றும் அவர் ஆயுள் பூராவும் பாடுபட்டார். சட்டம் இயற்றி சீர்த்திருத்தம் செய்வதைவிட மக்களுக்கு எடுத்துச் சொல்லி, போதுமான கல்வி புகட்டி மாறுதல்கள் செய்ய வேண்டும் என்று அவர் எண்ணினார். ஆங்கிலேயர்களின் நியாய, அநியாய உணர்விலும் நீதிமுறைகளிலும், அரசியல், சமுதாய ஸ்தாபனங்களிலும் அவருக்கு அளவற்ற நம்பிக்கை இருந்தது. இதில் அவர் தாதாபாய் நௌரோஜிக்கும், கோபாலகிருஷ்ண கோகலேக்கும், மகாத்மா காந்திக்கும் கூட வழிகாட்டி என்றுதான் சொல்ல வேண்டும்.

ராம்மோகன் ராய் தொடங்கிய பல சங்கங்கள், ஸ்தாபனங்களில் அவர் மதச் சீர்திருத்தம் அல்லது சமூகச் சீர்திருத்தம் முக்கியம் என்றும், அரசியல் சீர்த்திருத்தத்தை முழுவதும் நம்பியில்லை என்றும் தெரிகிறது. அவரவர் வாழ்க்கையில் சொந்த அறிவு கொண்டு, திருப்தி தரக்கூடிய அளவில் வாழலாம் என்று அவர் நம்பினார். 1815-ல் அவர் ஆரம்பித்த ஆத்மீக நண்பர்கள் சங்கம், விதவா விவாகம், பெண் கல்வி, பெண்கள் சுதந்திரம் முதலியவற்றை விவாதித்து இந்தியாவில் பல சங்கங்களுக்கும், பல சீர்திருத்தவாதிகளுக்கும் வழிகாட்டியது. ஆந்திர சீர்த்திருத்தக்காரரான வீரேசலிங்க பந்துலு ராம்மோகன் ராயை லக்ஷிய முன்மாதிரியாகக் கொண்டுதான் பல காரியங்களைச் செய்தார். இது மாதிரி ராம்மோகன் ராயைப் பின்பற்றியவர்கள் இந்திய மாகாணங்களில் பல பேர் பல இடங்களில் தோன்றினார்கள்.

ராம்மோகன் ராய் தொடங்கிய சில சங்கங்களால் இந்தியப் பத்திரிகைகளில் ஒரு புது வேகமும் ஒரு புதிய சுதந்திர உணர்ச்சியும் தோன்றியது என்று சொல்ல வேண்டும். இந்திய மொழிகளில் வெளி வருகிற பத்திரிகைகளில் அந்நிய அரசாங்கத்துக்கு நம்பிக்கை இல்லாததில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை. முன்கூட்டியே சர்க்கார் அதிகாரிகளிடமிருந்து அனுமதி பெறுமல் ஒரு பத்திரிகையும் வெளிக் கொணரக் கூடாது என்று சட்டம் இயற்றினார்கள். இந்தச் சட்டத்தை எதிர்த்து ராம்மோகன் ராய், துவாரகாநாத் தாகூர் போன்றவர்கள் கோர்ட்டில் வழக்குத் தொடுத்தார்கள். அவர்கள் வழக்கு தோற்றுவிட்டது. பிரிட்டிஷ் அரசருக்கு மனு எழுதினார்கள். இந்த மனுவை ராம்மோகன் ராய் எழுதியதாகச் சொல்லுவார்கள். இந்தச் சட்டத்தினால் இந்தியப் பிரஜைகளின் பேச்சு, அபிப்பிராய சுதந்திரங்கள் பறிக்கப்படுகின்றன என்றும் அதிகாரிகளின் அனுமதி இல்லாவிட்டால் இந்தியப் பிரஜைகள் எதையுமே புதிதாகக் கற்றுக் கொள்வது தடைப்படும் என்றும் ராம்மோகன் ராய் அந்த மனுவில் கூறினார். இந்திய தேசிய அரசியலில் பேச்சுச்

சுதந்திரத்தைக் காப்பாற்ற என்று எழுதப்பட்ட இந்த மனுவை முதல் இந்திய தேசிய தஸ்தாவேஜாகக் கருதவேண்டும்.

இதே மாதிரி இந்தியருடைய சுதந்திரத்தைக் கட்டுப்படுத்துகிற பல சட்டங்களை எதிர்த்து அவர் பொதுஜன அபிப்பிராயத்தைத் திரட்டினர். இந்திய, மற்ற கிறிஸ்தவர்களை ஹிந்து, முஸ்லிம், நீதிபதிகள் விசாரணை செய்யக்கூடாது என்று இருந்த சட்டத்தை எதிர்த்துப் போராடினர். பல அநீதியான வழக்கிலிருந்த சட்ட திட்டங்களை அகற்ற அவர் முயன்றார். வழக்குகளில் ஆங்கில ஜூரி முறையில் நியாயம் வழங்கப்பட வேண்டும் என்று பாடுபட்டார். கோர்ட்டுகளில் பர்ஷியன் மொழி உபயோகப்படுவதை எதிர்த்து ஆங்கில மொழியில் நடவடிக்கைகள் இருக்க வேண்டுமென்று வற்புறுத்தினர். இந்தியாவில் பெரிய உத்தியோகங்களில் ஆங்கிலேயர்களுடன் இந்தியர்களும் நியமிக்கப்பட வேண்டும் என்று வற்புறுத்தினர்.

ராம்மோகன் ராயின் மேதை அவர் எதிர்காலத்தில் இந்தியா எப்படி இருக்க வேண்டும் என்று செயல்பட்டதில், சொல்லியதில் காணக்கிடக்கிறது. 1833-ல் அவர் இறந்த பிறகு அவர் சுட்டிக்காட்டிய வழியில் தங்களாலானதைப் பின்பற்றிச் சென்று இந்திய தேசியவாதிகள் இந்திய சுதந்திரத்துக்கு அடிகோலினர்கள். அரசியல் சுதந்திரமும் தேசிய உணர்வும் இந்திய மறுமலர்ச்சி சிந்தனைகளில் அடிப்படையானது என்றால் ராம்மோகன் ராயை இந்திய மறுமலர்ச்சியில் முதல்வராகக் கருதுவதனல் தவறு ஒன்றும் இல்லை; மற்றவர்களுடன் அவரையும் ஒரு முதல்வராக ஏற்றுக் கொள்ளலாம். அவரை முழு முதல் அரசியல் தேசியவாதி என்று சொல்லலாம் என்று தோன்றுகிறது.

"சுதந்திரத்தின் விரோதிகளும், கொடுங்கோலின் நண்பர்களும் ஒரு நாளும் வெற்றி பெற முடியாது என்பது சரித்திரத்தில் நாம் காண்கிற உண்மை" என்று ராய் சொன்னர். கடைசிக் காலத்தில் மொகலாய வம்சத்தினரின் அன்றைய வாரிசின் சார்பாக பிரிட்டிஷ்காரர்களுக்கு எடுத்துச்சொல்ல அவர் இங்கிலாந்து சென்றார். இதை அவருடைய அரசியல் கொள்கைகளுக்கு முரணான செயலாகத்தான் சொல்ல வேண்டும். இங்கிலாந்தின் சீதோஷ்ணம் அவருக்கு ஒத்துக் கொள்ளவில்லை. அங்கேயே இறந்துவிட்டார். இங்கிலாந்தின் பார்லிமெண்டரி முறை ஆட்சியில் அவருக்கு அளவற்ற நம்பிக்கை இருந்தது. சுதந்திர இந்தியாவில் கூடிய மக்கள் சபை இங்கிலாந்தின் பார்லிமெண்டரி முறையைப் பெருமளவில் ஏற்றுக் கொண்டது என்பது அவர் தீர்க்கதரிசனத்துக்கு ஒரு சிறந்த சான்று என்றுதான் சொல்லவேண்டும்.



**கடைசி வேண்டுகோள்...**

டால்ஸ்டாய் ஒரு ரயில் நிலையத்தில் அனாதையாக இறந்தார். அவரது பாக்கெட்டில் ஒரு காகிதம் இருந்தது. அந்தக் காகிதத்தில் ஒரு குறிப்பு இருந்தது. அந்தக் குறிப்பு அவர் கையாலேயே எழுதப்பட்டிருந்தது. அது என்ன தெரியுமா? "தயவு செய்து என் பிணத்தை என் மனைவியிடம் ஒப்படைக்காதீர்கள்!"

—கே. நரசிம்மன்

**தில்லி முல்லு டில்லி ராஜா**

கமலாபதி திரிபாடியின் விவகா ரத்தை ஆளும் கட்சியில் ''பதவிச் சண்டை''யால் உருவான விஷயம் என்று வெறுமனே ஒதுக்கிவிட முடி யாது. 1979ல் ஜனதா அரசுக்கு ஏற் பட்ட சோதனை போன்றது இது. ரா ஜீவ் காந்தி அரசு இதுபோன்ற உட் கட்சி விவகாரங்களில் அகப்பட்டுக் கொண்டு முழிக்கிறது.

அதிருப்தியாளர்களை அடையாளம் கண்டுகொண்டு அதற்கு ஏற்ப ராஜீவ் காந்தி செயல்பட்டார். ஆனுல், முக்ய ''ஹீரோ''வாக இருந்தவரே பிரதம ருக்கு எதிராக மாறப்போய், இப் போது மூன்ருவது குரூப் உருவாகிவிட் டது.

1986ல் ஆளுங்கட்சி சண்டையில் குளிர் காய்ந்த சீனியர் எதிர்க் கட்சித் —



பிரணப் முகர்ஜி

# பிரணப் முகர்ஜியின் ஆயுதங்கள்....



தலைவர்கள், 1987ல் ராஜீவ் காந்தி என்ன செய்வார் என்று யூகித்து அதற்கு எதிரான ''ஆட்களை'' ஆளும் கட்சியிலிருந்தே உருவாக்க முயல்கின்ற னர். 'மாஸ்டர் மைன்ட்' உள்ள இந்த எதிர்க் கட்சித் தலைவர்கள் செய்தியாள ருக்குத் தரும் 'செவிக்கினிய' செய்தி களை, எழுதக் கூட கூசுகிறது.

"நான் ராஜ்யசபைக்குப் போக மாட் டேன்! மக்கள் மூலம் லோக்சபைக்குத் தான் போவேன். இல்லையெனில் மக்க ளிடையே அரசியல் நிலைகளை விளக்கு வேன்'' என்று மார் தட்டும் ஹேமவதி நந்தன் பகுகுணு, ஆளும் கட்சிக்குப் பேரிடியைத் தர தயாராகிவிட்டார்.

கமலாபதி எப்படி ஆளும் கட்சி யின் செயல் முறைத் தலைவரோ அதே

அடுத்த இதழில்....

இந்திரா பார்த்தசாரதி

எழுதும்

# ஏசுவின் தோழர்கள்

புதிய தொடர்கதை

'புஞ்ஜாய்' வழங்கும்

# மீண்டும் பைரவன்

- சித்திரத் தொடர் -

மற்றும் வாரந்தோறும் சிறுவர்களுக்கான பல்சுவைப் பகுதி

இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனையாளர்கள் 5

# சுவாமி தயானந்த சரஸ்வதி

## — க.நா. சுப்ரமண்யம்

இந்திய சமுதாயத்தில் ஆரம்ப காலம் முதலே மக்களிடையே துறவிகளுக்கு அளவற்ற செல்வாக்கு இருந்து வந்திருக்கிறது என்றுதான் சொல்ல வேண்டும். இந்தத் துறவு மனப்பான்மையும் துறவிகளுக்கு சமுதாயத்தில் உள்ள உயர்ந்த ஸ்தானமும் வேதகாலத்துக்கு முன்னாலேயே சமணச் சிந்தனைகளால் ஏற்பட்டது என்று ஆராய்ச்சியாளர்கள் சொல்கிறார்கள்.



அது எப்படியானாலும் ஐரோப்பாவில் பல பாகங்களிலிருந்து சுயநலம் இல்லாமல் இயேசுவைப் பின்பற்ற ஆன்மாக்களைத் தேடும் கிறிஸ்தவ மிஷனரிகளாக வந்த பாதிரிமார்களின் முன்மாதிரியும் இந்திய மறுமலர்ச்சியின் ஆரம்ப காலத்தில் மக்கள்கண்முன் இருந்தது.

மதமாற்றப் பேச்சுக்கு உறுதுணையாக கிறிஸ்துவப் பாதிரிமார்கள், இந்தியக் கலைகள், இலக்கிய மொழி, பழக்கவழக்கங்கள் இவற்றை ஆராய்ச்சி செய்து இந்திய மறுமலர்ச்சிக்கு அடிகோலினார்கள். டி. நொபிலி முதல் பிஷப் கால்டுவெல் வரையில் இதைக் காணலாம். இந்த மிஷனரிகளின் சேவையினால் இந்தியாவில் கல்வி ஸ்தாபனங்கள், மருத்துவ ஸ்தாபனங்கள் மற்றும் பொது நல சேவை ஸ்தாபனங்கள் உருவாகிக் கொண்டிருந்தன.

இதன்விளைவாக இந்தியர்களிடையே பலருக்கும் ஒரு பொதுச் சேவை மனப்பான்மை சிறிது சிறிதாக வளர்ந்து வந்து கொண்டிருந்தது என்றுதான் சொல்ல வேண்டும். கிறிஸ்துவர்கள் இந்து மதத்தை அழிப்பதை, அழித்து மக்களை நவீனமாக்குவதை நோக்கமாகக் கொண்டிருந்தார்கள். ராஜா சரபோஜியை கிறிஸ்துவனாக்கி விடுவது என்று பலரும் முயன்றார்கள். 'என் தாயாரோ, என் ராணியோ அதை விரும்பமாட்டார்கள்'' என்று சொல்லித் தப்பித்து வந்தார் சரபோஜி. பிஷப் ஹெபர் என்பவர் பின்

னர் அவர் மூத்த மகன் சிவாஜியையாவது தன்னிடம் ஒப்புவிக்க வேண்டும் என்று கேட்டபோது, "அவன் தாயார் சம்மதிக்க மாட்டாள்" என்று சொல்லி நட்புரிமையுடன் அதைத் தவிர்த்து விட்டார்.

இதே மாதிரி ராஜாராம் மோகன் ராயுடைய ஹிந்து மத இந்திய சமூக சீர்திருத்த அம்சங்கள் பலவும் கிறிஸ்தவர்களிடமிருந்து வந்தவைதான். பிரம்ம சமாஜ இயக்கத்தையே இந்து மதத்திற்குள் ஒருகிறிஸ்துவ இயக்கமாகக் கருதலாம். அப்படிப் பல வங்காளிகள் விரோதத்துடன் கருதியதாகவும் தெரிகிறது.

ராமலிங்க ஸ்வாமிகள் நிர்மாணிக்க முயன்ற "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்ற இயக்கம் எவ்வவு தூரம் கிறிஸ்துவ மதத்தின் தாக்கத்தினுல் விளைந்தது என்று ஆராய்ந்து யாரும் சொல்லவில்லே. ஆனுல் அதை ஓரளவுக்கேனும்கிறிஸ்துவ மதப் பிரச்சாரத்தின் தூர எதிரொலியாக நாம் கருதமுடியும்.

ராமகிருஷ்ணர் பெயரால் ஸ்வாமி விவேகானந்தர் நிர்மாணித்த சேவா கேந்திரங்கள் அமைப்பு அளவில் மட்டுமாவது கிறிஸ்துவ மிஷனரிகளின் போக்கை உணர்ந்து அவற்றைப் பின் பற்றின. அவைபோலவே பலன் தருபவையாகவும் இருந்தன.

**1824-ல் பிறந்து 1883-ல்** காலமான ஸ்வாமி தயானந்த சரஸ்வதி கிறிஸ்துவ மதப் பிரச்சார ஸ்தாபனங்களேப் பின் பற்றியே தன் ஆரிய சமாஜத்தை ஸ்தாபித்தார் என்று சொல்ல ஓரளவுக்கு இடமிருக்கிறது. பிரசாரம் செய்து ஆட்களை மதவிஷயங்களில் ஸ்திரமாக நிலேத்துவிடச் செய்வது என்பது அவசியமாகவும் அந்தக் காலக் கட்டத்தில் இருந்தது. ஏனென்ருல் புதிதாக வந்து நாட்டில் பரவிக் கொண்டிருந்த கல்வி முறைகளும், மதிப்பீடு நசிவுகளும் இந்து மதத்தின் பிடியைத் தளர்த்துவதாக இருந்தன.இத்தனைக்கும் அப்பால் கடல் கடந்து போனவர்கள் என்ன பிராயச்சித்தம் செய்து கொண்டாலும், இந்து மதத்தில் மீண்டும் சேர்த்துக் கொள்ளப்படமாட்டார்கள் என்று ஒரு விதி அப்போது அமுலில் இருந்தது.தவிரவும் வைதிகர்களும் பண்டிதர்களும் அறிவு அதிகம் இல்லாதவர்களாக பலதரப்பட்ட அசட்டுக் காரியங்களுக்குக் காரணமாகி இருந்தார்கள். பொதுவாக மதமும், மத நம்பிக்கைகளும்,மதப் பழக்கவழக்கங்களும் வியாபாரப் பொருளாகவே ஆகிக் கொண்டிருந்தன. மதத்தின் பெயரால் செய்யப்பட்ட காரியங்கள் எல்லாம் மக்களிடையே மௌட்டிகத்தை அதிகரித்துக் கொண்டிருந்தன.



"அந்தக் கம்பவுண்டர் போலின்னு எப்படிக் கண்டுபிடிச்சீங்க...?"
"மிக்ஸர் கொடுங்கய்யான்னு, அவல் போட்டதா, கடலேப்பருப்பு போட்டதான்னுர்...!"

—தனபாலன்

ராம் மோகன் ராயைப் போலவே சிவமூல சங்கர என்கிற பூர்வாசிரமப் பெயர் கொண்ட ஸ்வாமி தயானந்த சரஸ்வதி கத்தியவாரில் செல்வமும் அந்தஸ்தும் மிகுந்த ஒரு குடும்பத்தில் பிறந்தவர். வீட்டில் நடந்த பூஜை புனஸ்காரங்களில் எல்லாம் சிவாவும் முழுப் பங்கேற்று ஈடுபாடு கொண்டவனுக ஆரம்பத்தில் இருந்தான். ஆனுல் ஒவ்வொன்றையும் இது எதற்கு, ஏன், என்று கேட்டுத் தெரிந்து கொண்டிருந்தான். பதினெட்டு, இருபது வயது ஆகும்போது ஒரு இரவு ஒரு சிவராத்

திரி அன்று கோவிலில் படுத்து உறங்கி யபோது ஒரு சுண்டெலி சிவலிங்கத்தின் மேல் ஏறி விளையாடிக் கும்மாளம் அடிப்பதைப் பார்த்தான். சர்வ வல்ல மை உள்ளவனுகவும் ஜகத்ரக்ஷகனுக வும் எல்லோராலும் வர்ணிக்கப்படு கின்ற அந்தச் சிவனுக்கு (லிங்கத்துக்கு) சுண்டெலியை விரட்டக்கூடச் சக்தி இல்லையே, நான் இந்தச் சிவலிங்கத்தி டம் நம்பிக்கை வைப்பது சரிதானு என்கிற கேள்வி அவனுள் விசுவரூபம் எடுத்தது. இந்தக் கேள்விக்கு விடை காணும் முன் குடும்பத்தில் அவனுக்கு மிகவும் பிரியமான ஒரு தங்கையும் ஒரு மாமாவும் அசாதாரணமாக அநாவசிய மாக அல்பாயுசிலே இறந்து விட்டார் கள். இந்தக் காரணங்கள் எல்லாம் சேர்ந்து மூல சங்கர் என்கிற சிவாவை வீட்டை விட்டுக் கிளப்பி விடுவதற்கு போதுமானவையாக இருந்தன. அப் போது அவனுக்கு வயது இருபது என்று சொல்லுகிறார்கள்.

அடுத்த இருபது ஆண்டுகள் தனக்கு உகந்த ஞானத்தைத் தேடி இமயமலைச் சாரல், கங்கை நதித் தீரம், மதுரா, துவாரகா, பண்டரிபூர் என்று தயா னந்த சரஸ்வதி ஆகப் போகிற ஸ்வா மிஜி அலைந்திருப்பதாகத் தெரிகிறது. ஏற்கனவே தாய்மொழியிலும் சமஸ்கி ருதம் போன்ற பல மொழிகளிலும் பரிச்சயம் இருந்தது. வேதகாலத்து இந்து மதந்தான் பரிசுத்தமானது. புராண காலத்து அசுத்தங்களையும், விக் ரஹ ஆராதனைகளையும் நீக்கி விட்டு வேத காலத்திய சுத்தத்துடன் சடங்குக ளைத் திரும்பவும் அமலில் கொண்டு வந்தால் இந்து மதத்திற்கு புதுச் சக்தி பிறக்கும். அதனால் இந்து சமுதாயத்தில் ஆட்சி செலுத்திய தீய அம்சங்கள் நீங்கி விடும். இந்தியாவில் புதுயுகம் பிறக்கும் என்று தயானந்த சரஸ்வதி நம்பினர்.

தான் பெற்ற ஞானத்தை உலகுக் கெல்லாம் எடுத்துச் சொல்ல வேண்டு மென்று வட இந்தியாவில் பல இடங்க ளிலும் பிரசங்கங்கள் செய்தும், சா மான்யர்களையும் முக்கியமானவர்களை யும் சந்தித்தும் மத விஷயமாகப் பொது விவாதங்கள் நடத்தியும் ஆரிய சமாஜம் என்கிற தன் ஸ்தாபனத்தைப் பரவலாக உருவாக்க முயன்றார் அவர். அன்றிருந்த நிலைமையில் அந்த ஸ்தாப னம் உருவாக பத்துப் பதினைந்து ஆண் டுகள் பிடித்தன என்பதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. பம்பாயில் 1875-ல் ஏப் ரல் 10-ந் தேதி ஆரிய சமாஜம் உருவா யிற்று. அதே ஆண்டு வாரணசியிலி ருந்து தயானந்த சரஸ்வதியின் சத் யார்த்த பிரகாசா என்கிற நூலும் வெளியாயிற்று. அதற்குப் பிறகு தயா னந்த சரஸ்வதி ஏழெட்டு வருஷங்கள் தான் உயிருடன் இருந்தார். ஆனால் அந்த ஏழெட்டு வருஷங்களில் ஆரிய சமாஜம் பல பிரதேசங்களிலும் ஆழ்ந்து படர்ந்து வேரூன்றுவதை அவ ரால் காண முடிந்தது. அதற்குக் கால கட்டத்தின் தேவை உதவியது என்று சொல்ல வேண்டும்.

இதில் ஒரு விசேஷம் என்னவென் றால் தயானந்த சரஸ்வதி அவர் தேடல் களில் தென்னிந்தியாவுக்கு வந்ததாகத் தெரியவில்லை. குருநானக், சைதன்யர், சங்கர் தேவ் போல அவர் தென்னிந் திய ஸ்தாபனங்களையோ, குருமார்களை யோ சந்தித்தாகத் தெரியவில்லை. இத னலேயும்கூட அவர் கருத்துக்களில் மற் றவர்களிடம் இல்லாத ஒரு தனித்துவம் இருப்பதுபோலத் தெரிகிறது.

அவருடைய சத்யார்த்த பிரகாசத் தில் சொல்லியுள்ளபடி அவருடைய தத்துவத்தை பின்வருமாறு சுருக்கமாகச் சொல்லலாம். மனித ஞானத்தின் ஆரம் பம் வேதங்கள்தான். ஆதிபகவன் சொன்ன வாக்கு அவை. அவற்றிற்கு அப்பால் வேறு எந்த ஆதாரமும் தே வையில்லை. கடவுள், பிரும்மன், பர மாத்மன் எல்லாம் சத்சித் ஆனந்தத்தின் எல்லையாக இருக்கிறது. உலகத்தை அழிப்பதும் ஆக்குவதும் ஆன்மாக்களை ஆள்வதும் இதுதான். வேதங்களில் சொல்லியிருப்பதைப் பின்பற்றுவது தான் தர்மம். உலக நியதிகளும் உண் மைகளும் இந்தத் தர்மத்துக்கு அனுச ரணை. கடவுளை அடைய சாதனங்கள்

என்று, அருவமான பரப்பிரும்மத்தை மதிப்பது தர்மத்தை அனுசரிப்பது, பிரும்மசரியத்தை அனுஷ்டிப்பது ஞானத்தைத் தேடுவது இவைதான் மனிதனுக்குள்ள சாதனங்கள். வேதத்தில் சொல்லியிருக்கிற சம்ஸ்காரங்கள் எந்த இந்துவாலும் தவிர்க்க முடியாதவை.

அக்னி ஹோத்திரங்கள் செய்வதால் மனிதன் சுவாசிக்கும் காற்று சுத்தமாக்கப்படுகிறது. அதனுல் அக்னி ஹோத்திரம் என்பது அவசியமான ஒரு கிரியை. எல்லோரும் செய்ய வேண்டியது.

முதலில் இருபத்தெட்டு கொள்கைகளை சொன்ன தயானந்த சரஸ்வதி அதை இரண்டு ஆண்டுகளில் பத்து கொள்கைகளாக மாற்றினுர். அவற்றில் முக்கியமான இரண்டு- வேதத்தை மனித அறிவின் ஞானத்தின் ஆரம்பமும் முடிவுமாக ஏற்றுக் கொள்ள வேண்டுமென்பதும், கடவுள் ஒன்றே என்று வற்புறுத்த ஏற்பதும்.

தன் ஆரிய சமாஜத்தின் நோக்கமாக சுவாமி தயானந்த சரஸ்வதி மக்களின் சுகாதார, சமூக, ஆன்மீக மேம்பாட்டை வற்புறுத்தினுர். இந்த மேம்பாடு காரணமாக அரசியல் சுதந்திரமும், நாட்டுக்கு விடுதலையும் வந்துவிடும் என்கிற நினைப்பு அவர் இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனையில் தொக்கி நிற்கிறது. தயானந்த சரஸ்வதியின் இந்து மதச் சீர்திருத்தத்தில் அரசியல் சுதந்திரமும் அடங்கியதுதான். பின்னர் வந்த ஸ்வாமி விவேகானந்தர் ஓரளவுக்கு இந்தச் சிந்தனையைத் தெளிவுப்படுத்த இருந்தார்.

சுவாமி தயானந்த சரஸ்வதியின் இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளில் இன்னும் இரண்டு முக்கியமான அம்சங்கள் உண்டு. ஒன்று கல்வி பற்றியது. ஒவ்வொருவரும் சிறுசிறு அளவிலேனும் தங்களைச் சுற்றியுள்ள அஞ்ஞானங்களை அகற்ற முற்பட உழைக்க வேண்டும். அதே போல குடும்பத்தில், தெருவில், ஊரில், பிராந்தியத்தில், தேசத்தில் பிற மனிதர்களுடன் உறவு கொள்ளும்பொழுது, அந்த உறவு தர்மத்தின் அடிப்படையில், கருணையின் அடிப்ப

## பாரதி வாசகம்

- ஊக்கமில்லாமல் ஏதேனுமொன்றை நினைத்துக்கொண்டு மனம் சோர்ந்து தலைகவிழ்ந்து உட்கார்ந்திருப்பவன் தேவாங்கு.
- மறைந்திருந்து பிறருக்குத் தீங்கு செய்பவன் பாம்பு.
- தர்மத்திலும், புகழிலும் விருப்பமில்லாமல், அற்ப சுகத்திலே மூழ்கிக் கிடப்பவன் பன்றி.
- பிறருக்குப் பிரியமாக நடந்துகொண்டு, அவர்கள் கொடுத்ததை வாங்கி வயிறு வளர்ப்பவன் நாய்.
- கண்ட விஷயங்களிலெல்லாம் திடீர் திடீரென்று கோபம் அடைகிறவன் வேட்டை நாய்.
- அறிவுத் துணிவால் பெரும் பொருள்களைத் தேர்ந்தெடுக்காமல் முன்னேர் கூறியதையே திரும்பத் திரும்ப வாயினுல் சொல்லிக் கொண்டிருப்பவன் கிளிப் பிள்ளை.
- பிறர் தன்னை எவ்வளவு அவமதிப்பாக நடத்தியபோதிலும் அவன் அக்ரமத்தை நிறுத்த முயலாமல் தனது மந்த குணத்தால் பொறுத்துக் கொண்டிருப்பவன் கழுதை.
- வீண் மினுக்கு மினுக்கி டம்பம் பாராட்டுகிறவன் வான் கோழி.
- தாம் சிரமப்படாமல் பிறர் சொத்தை அபகரித்தவன் கழுகு.
- ஒரு புது உண்மை வரும்போது அதை ஆவலோடு வரவேற்காமல், வெறுப்படைகிறவன் (வெளிச்சத்தைக் கண்டு அஞ்சும்) ஆந்தை.

—'பாரதி வாழ்வில் சுவையான நிகழ்ச்சிகள்' என்ற நூலிலிருந்து

—முக்கிமலை நஞ்சன்.

டையில், நியாயத்தின் அடிப்படையில் அமையும்படிப் பார்த்துக் கொள்ள வேண்டும்.

ஆரிய சமாஜத்தைச் சேர்ந்தவர்கள் சுயநலத்துக்காக உழைக்கக் கூடாது என்றும், பிறருடைய நலனில் தன் நலனைக் காண வேண்டும் என்றும் தயானந்த சரஸ்வதி வற்புறுத்தினர்.

இந்த மாதிரி சற்று விரிவாக தயானந்த சரஸ்வதியின் சிந்தனைகளை, லட்சியங்களைச் சொல்லுவதற்கு இங்கு காரணம் இருக்கிறது. அது வரையில் இருந்த இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனையாளர்கள் இந்திய மறுமலர்ச்சியின் எல்லாப் பூரண அம்சங்களையும் மனதில் வாங்கிக் கொண்டு செயல்பட்டார்கள் என்று சொல்ல முடியாது. ராஜா சரபோஜி பல மறுமலர்ச்சித் துறைகளில் ஈடுபாடு கொண்டு உழைத்தார் என்றாலும், மறுமலர்ச்சி என்கிற பூரண பிரக்ஞை அவருக்கு இருந்ததாகச் சொல்லவே முடியாது. ஜோதி ராமலிங்கமும் தான் அறிந்த அளவில் செயல்பட்டாரே தவிர, தேசிய உணர்வு என்று இன்று நாம் ஏற்றுக் கொள்ளக்கூடிய விரிவான நினைவு பெற்றவர் அல்ல. தியாகப் பிரும்மத்தைப் பற்றிச் சொல்லவே வேண்டாம். சங்கீதம், ஞானம் தான் ஏற்றுக் கொண்ட வாழ்க்கை வழிகள் என்பதைத் தவிர அவருக்கு வேறு நினைப்புகள் கிடையாது.

ராம்மோகன் ராய்க்கு மட்டும் மறுமலர்ச்சி என்கிற நினைப்பு இல்லாவிட்டாலும் அரசியல், சமுதாயம், மதம் என்கிற அளவில் ஒரு பூரணமான விழிப்பு இருந்தது என்று சொல்லலாம். அதற்கு மேல் பரவலான ஒரு இந்திய அளவில் தேசிய தளம் அமைத்துக் கொடுத்தவர் என்று ஸ்வாமி தயானந்த சரஸ்வதியைச் சொல்ல வேண்டும். அந்த தளத்தின் மேல்தான் இன்று இந்திய மறுமலர்ச்சி என்று நாம் சொல்லுகிற மாடமாளிகை எழும்பியிருக்கிறது. ராம்மோகன் ராயைப் போலவே தயானந்த சரஸ்வதியிடமும் ஒரு பெருங்குறை. இந்தியக் கலைகளுக்கு, அவர் எழுப்பிய கட்டிடத்தில் போதுமான இடம் தராதது பெரிய குறை. இந்தக் குறை மகாத்மா காந்தி வரையில் (காந்தியும் உள்பட) நீடிக்கவே செய்தது.

பத்தொன்பதாம் நூற்றுண்டில் எழுந்த சக்திகளில் மகத்தான ஒன்றுக தயானந்த சரஸ்வதியை நினைப்பது என்பது ஆரிய சமாஜம் தோன்றிய காலத்திலேயே ஏற்பட்டுவிட்ட விஷயம். இத்தனைக்கும் அவர் மரபு பூர்வமாக தனக்குக் கிடைக்கக் கூடிய குரு ஸ்தானத்தை எப்போதுமே ஏற்றுக் கொள்ள மறுத்தார். ஒருவிதத்தில் பார்த்தால் குரு, சிஷ்ய உறவு மூலம் ஸ்தாபன ரீதியாக அறிவு வளர்ந்திருக்கிறது என்றாலும் இந்தியாவில் பரவலான சுய சிந்தனை முயற்சிகள் குன்றி வந்திருக்கின்றன என்றுதான் சொல்ல வேண்டும். ஆரிய சமாஜத்தை ஸ்தாபித்த தயானந்த சரஸ்வதி எக்காரணம் கொண்டும் குரு பீடத்தை ஏற்றுக் கொள்ள மறுத்து விட்டார் என்பது சரித்திர உண்மை. இதை ஒரு முக்கியமான விஷயமாகக் கருத வேண்டும்.

தயானந்த சரஸ்வதியும், ஆரிய சமாஜமும் எத்தனை மத மாற்றங்களைத் தடுத்தன. எத்தனை இந்துக்களைத் திருப்பி இந்து மதத்துக்குக் கொணர்ந்தன என்பது இன்று முக்கியமல்ல. அவர் தந்த லட்சிய வேகமும், சிந்தனை ஆழமும்தான் இன்று முக்கியமாகக் கருதப்பட வேண்டும். அவை இந்திய மறுமலர்ச்சியைப் பூரணமாக்க உதவின.

**விளம்பர 'உலகம்'**

● சுமார் 35 வருஷங்களுக்கு முன்பு வந்த 'உலகம்' என்ற தமிழ் படத்துக்கு செய்யப்பட்ட மாதிரி எந்தப் படத்துக்கும் விளம்பரம் செய்யப்பட்டதில்லை! ஆனால் அந்தப் படம் படுதோல்வியடைந்தது!

*அனிதா ராமச்சந்திரன்*

**அதிர்ஷ்ட எண்கள்:**

ஞாயிறு 2, திங்கள் 6, செவ்வாய் 4, புதன் 9, வியாழன் 3, வெள்ளி 8, சனி 5.

**நல்ல நாட்கள்:**

குடும்ப விவகாரங்களுக்கு: 18, 22
பொருட்களை வாங்க: 21
பொருட்களை விற்க: 17.

**ஆகஸ்ட் 18**

அனேகமாக இந்த ஆண்டு நெருங்கிய உறவினர்களைச் சார்ந்தே அமையும். தோழர்களின் ஒத்துழைப்போடு, அவர்களது நற்பெயரைப் பயன்படுத்திச் செய்யும் செயல்களில் நல்ல முன்னேற்றம் இருக்கும். உங்களுக்கு சக்தியும், ஊக்கமும் கிடைக்கும். இது உங்கள் தன்னம்பிக்கையை வளர்க்கும். உங்களுக்குள் ஒளிந்துள்ள திறமைகள் வெளிப்படும். போட்டியுள்ள விஷயங்களில் 'பிடி' உங்கள் கையில் இருக்கும்.

**ஆகஸ்ட் 19**

வியாபார மற்றும் சொந்த வாழ்க்கையில் கூட்டு முயற்சிகள் முக்கியத்துவம் பெறும். புதிய கூட்டாளிகள் அமைவார்கள். அதே நேரத்தில் இப்போது உங்களோடு தொடர்பு வைத்திருப்பவர்களின் ஒத்துழைப்பும் அதிகரிக்கும். இந்த ஆண்டு வாய்ப்புகள் அதிகம். உங்களது நடவடிக்கைகள் எப்படி அமையுமென்று கணிப்பது அவ்வளவு சுலபமல்ல! ஏப்ரலில் இருந்து ஆகஸ்ட் வரை அதிக தன்னம்பிக்கை இருக்குமென்பதால், சரியான முடிவுக்கு வரமுடியும்.



"தியானம் செய்ய ஏற்ற நேரம் எது...?"
"மத்தியானம் தான்!"

—தனபாலன்

**ஆகஸ்ட் 20**

கடந்த ஆண்டு மேற்கொண்ட கடின உழைப்பு, சந்தித்தப் போராட்டங்கள் ஆகியவற்றுக்குரிய பலன் இந்த ஆண்டு கிடைக்கும். வீட்டிலோ, வேலையிலோ உள்ள பணப்பிரச்னைகளில் இருந்து விடுபடுவீர்கள். எனினும், அது உடனடியாய் நடந்து விடும் என்று எதிர்பார்க்காதீர்கள். 'பிஸி'யாய் இருப்பீர்கள். ஓய்வு நேரம் கிடைப்பது சிரமமாய் இருக்கும். அதற்கு, எதிர்பாராத விதத்தில் கூடுதல் பொறுப்புகளை ஏற்பதும், வீட்டில் மற்றும் வேலையில் மாற்றங்கள் நிகழ்வதும் காரணமாய் இருக்கலாம்.

**ஆகஸ்ட் 21**

நெருக்கமான தோழர்களின் நற்பெயர் மூலம் லாபம் சம்பாதிக்க முடியும். பணி வாழ்க்கையில் சமீபத்தில் ஏற்பட்ட இருள் அகன்று, பிரகாசமான எதிர்காலம் தெரியத் தொடங்கும். எனினும், அவ்வளவு சுலபமாய்ப் போய்விடக் கூடிய ஆண்டில்லை இது. புதிய வாய்ப்புகள் உங்களுக்கு ஓய்வொழிச்சல் இல்லாமல் ஆக்கிவிடும்.

**ஆகஸ்ட் 22**

எதிர்காலத் திட்டங்கள் முக்கியத்துவம் பெறும். கடல் கடந்த அக்கறைகள் மற்றும் தொடர்புகள் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெறக் கூடும். நீண்ட கால அடிப்படையிலான வியாபார ஏற்பாடுகளும் குறிப்பிடத்தக்கவையே! நிதி விவகாரங்களில், அளவுக்கதிகமான நம்பிக்கை மற்றும் எக்கச்சக்கமான எதிர்பார்ப்பு ஆகியவற்றைத் தவிருங்கள்.

**ஆகஸ்ட் 23**

வீட்டு மற்றும் குடும்ப வாழ்க்கையிலும், உத்யோக ரீதியாகவும் மாற்றங்களை நெருங்கிக் கொண்டிருக்கிறீர்கள். உறவினர் அல்லது வியாபார சகா அல்லது கூட்டாளி ஒருவரின் அலுவல்களில் நிகழ்பவை உங்களது எதிர்காலத்துக்கான நிதித் திட்டங்களையும் பாதிக்கலாம். எனினும், அவை உடனடியாக நிகழும் என்று சொல்வதற்கில்லை. ●

இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனையாளர்கள்-6

# தாதாபாய் நௌரோஜி

– க.நா. சுப்ரமண்யம்

பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் இந்தியாவைக் கைப்பற்றி பல சிறு சிறு பகுதிகளில் தன்னை ஸ்தாபித்துக் கொண்டு செயல்படத் தொடங்கிய காலத்திலேயே தேசிய அளவில் இல்லாவிட்டாலும் பிராந்தியங்களின் அளவில் சுதேசிகள் தங்கள் எதிர்ப்புகளைத் தெரிவித்துக் கொண்டிருந்தார்கள். வங்கத்தில் நடந்த சன்னியாசிக் கலகம், மருது பாண்டியன், கட்டபொம்மன் சண்டைகள் (இவை தமிழ்நாட்டின் தென்பகுதிகளில்) 18ஆம் நூற்றூண்டின் கடைசி இருபது ஆண்டுகளில் ஹைதர் திப்புவின் பிடிவாதமான பிரிட்டிஷ் எதிர்ப்பு-இதெல்லாம் சுதந்திரம் விரும்பி இந்தியர்கள், ஒற்றுமையும் பலமும் இல்லாமல், பிரிட்டிஷாரை எதிர்த்து இந்தியாவிலிருந்து விரட்டி விடச் செய்த முயற்சிகள் என்று சொல்லலாம்.

ஆனால் வியாபாரத்துக்காக, லாபம் தேடி, இந்தியாவுக்கு வந்த கம்பெனிக்காரர்கள் நாடு பிடிப்பதை இரண்டாம் பட்சமாகவும், வியாபார கொள்ளை லாபத்தை முதல் லட்சியமாகவும் கொண்டிருந்தார்கள். வியாபார லாபம் அடிபட்டுப் போய்விடக் கூடாது என்பதற்காகத் தான் நாடு பிடித்துக் காப்பாற்றிக் கொள்வதில் கவனம் செலுத்தினர்கள் என்று சொல்லலாம். நாட்டில் அதிகாரம் செலுத்தி வியாபாரத்தில் தங்களுக்கு லாபம் வரக்கூடிய வகையில் லாபகரமாகவும் சிறப்பாகவும் நடந்து வந்து கொண்டிருந்த இந்தியக் கைவினைத் தொழில்களையும் புராதன கலைத் தொழில்களையும் சந்தை முதலியவற்றையும் அடக்கி அழித்துத் தங்கள் அதிகாரத்துக்கு உட்பட்டதாக ஆக்கிக் கொள்வது ஆங்கிலேயர்களுக்கு அவசியமாக இருந்தது. ஆரம்பம் முதலே இப்படித்தான் என்றாலும் 19ஆம் நூற்றூண்டின் முதல் இருபது முப்பது ஆண்டுகளில் கும்பினியார் தவிர வேறு யாரும் பிரிட்டிஷ் பிராந்தியங்களில் லாபகரமாக வியாபாரம் செய்ய முடியாத நிலை ஏற்பட்டுக் கொண்டிருந்தது.

கைப்பற்றிய பிரதேசங்களிலிருந்து வரி வசூலிப்பதும் வியாபார லாபத்தோடு ஒரு பெரிய லாபமாக இருந்தது. எங்கள் மண்ணில் விளைந்த விளைச்சலுக்கு நீ என்ன வரி விதிப்பது என்கிற கோஷத்துடன் தான் கட்டபொம்மன் கும்பினியாருடன் சண்டைக்குப் போனதாகத் தெரிகிறது. பிரிட்டிஷாரை நேரில் எதிர்த்து நிற்க தைரியமில்லாத பல சிறு சிறு அரசர்களும் ஜமீன்தார்களும் பிரிட்டிஷ் வரி வசூலிப்பவர்கள் வசூலித்த வரிப்பணத்துடன் திரும்பும் போது அவர்களை வளைத்துக் கொண்டு கொள்ளையடித்து இந்தியப் பணத்தை இந்தியாவிலேயே தங்க வைத்துக் கொள்ள முயன்றிருப்பதாகத் தெரிகிறது. தென்னிந்தியாவில் தஞ்சை, ராமநாதபுரம், சிவகங்கை போன்ற ஸ்தலங்களில் கொள்ளைக்காரர்களை ஊக்குவித்த

ஒரு ராஜசபை கோஷ்டியே 1810-20களில் இருந்ததாகத் தெரிகிறது. கொள்ளைக் கூட்டங்களை ராணுவ உதவியுடன் பிரிட்டிஷார் அடக்கி விட்டனர். இது அவ்வளவாக இந்திய சரித்திர வரலாறுகளில் ஆராய்ந்து சொல்லப்படாத விஷயம் என்று சொல்லலாம்.

முதல் இந்திய சுதந்திர யுத்தம் என்று சாவர்காரால் அழைக்கப்பட்டு இந்தியர்களால் ஏற்றுக் கொள்ளப் பட்ட வட இந்தியா பூராவும் ஏற்பட்ட கலகத்தை அடக்கியதும் கும்பினியார் ஆட்சி நீங்கி காருண்ய விக்டோரியா மகாராணியாரின் ஆட்சி தொடங்கியது. வியாபார நஷ்டம் ராணுவப் பராமரிப்பு என்பதுடன் உயர் அதிகார வர்க்கத்தை சம்ரட்சிப்பது என்பதும் இந்தியச் சுமையாக சேர்ந்து கொண்டது. தொழில், வியாபாரம், அரசியல் அதிகாரம் என்று எதுவும் செய்ய முடியாத இந்தியர்கள் தங்கள் ஐசுவரியத்தில் பெரும்பகுதியும் இங்கிலாந்து நோக்கி வடிந்து கொண்டிருந்ததை தடுக்கச் சக்தியற்றவர்களாக இருந்தார்கள். இப்படி வடிவதை DRAIN என்று முதலில் சுட்டிக் கட்டியவர் தாதாபாய் நௌரோஜி தான்.

சுவாமி தயானந்தசரஸ்வதியும் ஜோதி ராமலிங்கமும் இந்தக் காலத்தில்தான் இந்தியாவில் ஆட்சி செலுத்திய மதச் சிந்தனைகளுக்கு ஒரு புது நோக்கமும் உள்ளடக்கமும் தந்து இந்தியர்களை விழித்துக் கொள்ளச் செய்யமுயன்றார்கள். ராஜா சர்போஜியும், ராம்மோகன்ராயும் கல்விக்கு ஒரு புது வேகம் தந்து மறுமலர்ச்சி ஏற்படுத்த முயன்றார்கள். ராம்மோகன்ராயின் கல்வி நோக்கம் ஆங்கிலேயர்களைப் பின்பற்றுவதுதான் என்று மக்களை நினைக்கச் செய்வதாக இருந்தது. பிராம்மோ சமாஜம் மூலம் வங்கத்தில் பெரும்பகுதியினரை- பெரும் கல்வி கற்றவர்களை ஆங்கிலப் பழக்கவழக்கங்களில் ஈடுபாடுகொள்ளச் செய்தார் அவர். அவருடைய மறுமலர்ச்சிச் சிந்தனையில் அரசியல் அம்சமும் இருந்தது. சுதந்திரம் என்பது இந்தியனுக்கும்



பிறப்புரிமை என்பது அவர் சிந்தனையில் அடிப்படையான ஒரு அம்சம். ஆங்கில நீதி அரசியல் ஸ்தாபனங்களில் அவருக்கு ஈடுபாடும் உற்சாகமும் அதிகம் இருந்தது. ராஜா சரபோஜியின் கல்விச் சிந்தனையில் பழைய கலைகள், புது விஞ்ஞானங்கள் முதலியவற்றிற்கு இடம் உண்டு. அதற்கு மேல் அரசியல், சுதந்திரம் என்றெல்லாம் அவர் சிந்திக்கவில்லை.

இவர்களில் ஒருவர்கூட இந்தியப் பொருளாதாரம் பற்றிய சிந்தனையில் ஈடுபட்டவர்கள் இல்லை. இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளில் இந்தியப் பொருளாதாரச் சிந்தனைகள் மிகவும் முக்கியமானவை என்று உணர்ந்து அவற்றை முதலில் வற்புறுத்திச் சொன்னவர் தாதாபாய் நௌரோஜி தான். இந்தியாவின் ஐசுவர்யம் கொஞ்சங் கொஞ்சமாக வடிந்து இங்கிலாந்துக்குப் போய்க்கொண்டிருக்கிறது என்றும், இந்தியா படிப்படியாகப் பொருளாதாரத்தில் தாழ்ந்துக்கொண்டிருக்கிறது என்றும் எடுத்துச் சொல்ல 1870

முதல் அவர் தொடங்கினர். இந்தியாவின் ஏழ்மை பிரிட்டிஷாருடைய சுபாவமான நீதிக்கு எதிர்மறையான அரசாங்கத்தின் விளைவு என்று சுட்டிக் காட்டினர். அவர் எழுதிய ஒரு நூலுக்கு **POVERTY AND UN BRITISH RULE IN INDIA** என்று பெயர்கூட வைத்தார்.

தாதாபாய் நௌரோஜி நவசாரி என்ற குஜராத் பிராந்தியக் கிராமத்தில் 1825ல் ஒரு ஏழைப் பார்சி குடும்பத்தில் பிறந்தவர். ஆங்கிலக்கல்வி வேரூன்றத் தொடங்குமுன் பம்பாயில் ஆங்கிலக் கல்வி பெற்று எல்ஃபின்ஸ்டன் ஸ்தாபனத்தில் பேராசிரியராகப் பணியாற்றினர். ஆரம்பம் முதலே நேர்மையான வழிகளில் நடப்பவர் என்று பெரும்பெயர் பெற்றார். இங்கிலாந்தில் ஸ்தாபிதமான முதல் இந்திய வியாபாரக் கம்பெனியின் டைரக்டராகச் செயலாற்றி நியாயமான வழிகளில் பணம் சம்பாதிக்க முடியும் என்று செய்துகாட்டினர். இந்தியாவின் ஏழ்மையும் சுதந்திரமின்மையும் பற்றிய நினைப்பு அவருக்கு ஆரம்பம் முதலே இருந்துவந்திருப்பதாகத் தெரிகிறது. பொருளாதாரக் காரணங்களுக்காக மட்டுமின்றி அரசியல் காரணங்களுக்காகவும் இந்தியாவில் அதிகாரம் செலுத்துகிற உயர் பதவியாளர்கள் எல்லோரும் இந்தியர்களாகவே இருக்கவேண்டும் என்று அவர் 1870 முதலே வற்புறுத்திவந்திருக்கிறார். வைஸ்ராய் மட்டும் வேண்டுமானல் ஆங்கிலேயராய் இருக்கலாம்; மற்றபடி நிர்வாகம் பூராவும் இந்தியர்கள் கையில் இருந்தால்தான் இந்தியர்களின் பிரச்சினைகளை அவர்களால் புரிந்து கொண்டு செயல்பட முடியும் என்று அவர் அழுத்தந்திருத்தமாக சொன்னர்.

ஆங்கிலேயர்களின் நீதி உணர்விலும் நாணயத்திலும் ராம் மோகன்ராயைப் போலவே அவருக்கும் அபார நம்பிக்கை. ஆயுதம் தாங்கி, கலகம் விளைவித்து சுதந்திரம் பெறுவதைவிட ஆங்கிலேயனின் நியாய தர்ம உணர்வுகளைத் தூண்டி கானடா, ஆஸ்டிரேலியா முதலிய பிரதேசங்களில் இருந்த சுதந்திரம், பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்கு உட்பட்ட சுதந்திரம், இந்தியாவுக்கும் போதும் என்று அவர் எண்ணினர்.

இதைச் சாதிக்க அவருக்கு அதுவரை கையாளப்படாத ஒரு யோசனை தோன்றியது. பிரிட்டிஷ் அரசாங்கம் பொது மக்களின் பிரதிநிதியாகச் செயல்பட்டது என்பதை அவர் நேரில் கண்டார். பிரிட்டிஷ் பொது மக்களுக்கு இந்தியப் பொருளாதார அரசியல் அதிகார வர்க்க பிரச்னைகளை எடுத்துச் சொல்லி அவர்களுக்கு இந்திய விஷயங்களில் ஈடுபாடு ஏற்படச் செய்ய வேண்டும் என்று எண்ணினர். இதற்காக அவர் ஐரிஷ் ஹோம்ரூல் அனுதாபியாக கிளாட்ஸ்டன் கட்சியில் சேர்ந்து பிரிட்டிஷ் பார்லிமென்ட்டுக்கு எலெக்ஷனில் நின்று முதல் தடவை தோற்றாலும் இரண்டாவது தடவை ஜெயித்து பிரிட்டிஷ் பார்லிமென்ட் அங்கத்தினரானர். பிரிட்டிஷ் பார்லிமென்ட் அங்கத்தினரான முதல் இந்தியர் அவர்தான். இது 1887-ல். இரண்டாவது தடவையும் அவர் பிரிட்டிஷ் பார்லிமென்ட் அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஒரு இருபது முப்பது வருஷங்களுக்கு அதிகமாகவே வேறொரு நினைப்பில்லாமல் இந்தியப் பிரச்னைகளை ஆங்கிலேயர்களுக்கு, பொது மக்களுக்கு இடைவிடாமல் எடுத்துச் சொன்னவர் தாதாபாய் நௌரோஜி. இவர் போட்டுத் தந்த அஸ்திவாரத்தின் மேல்தான் கோபாலகிருஷ்ண கோகலே, பாலகங்காதர திலகர், மகாத்மா காந்தி போன்றவர்கள் சுதந்திர மாளிகையை நிர்மாணித்தனர்.

1825-ல் பிறந்த தாதாபாய் நௌரோஜி 1917-ல் தனது 92-வது வயதில் காலமானர். அவர் உயிருடன் இருக்கும்போதே கடைசி இருபது ஆண்டுகளில் அவரை **THE GRAND OLD MAN OF INDIA** என்று அழைப்பது வழக்கமாயிற்று. அவர் பிறந்த சமயத்தில் நாலாவது ஜார்ஜ் இங்கிலாந்தில் அரசாட்சி செய்து கொண்டிருந்தார். மான்ட் ஸ்டு

வர்டு எல்ஃபின்ஸ்டன் என்பவர் பம்பாய் கவர்னராகத் தனது புதுக் கல்விச் சோதனைகளை அப்போது செய்து கொண்டிருந்தார். தஞ்சையில் ராஜா சரபோஜி ஆளாமல் ஆண்டு கொண்டு தன் கலை, விஞ்ஞானச் சோதனைகளைச் செய்து கொண்டிருந்தார். கல்கத்தாவில் ராம் மோகன்ராய் வங்கமொழிப் பத்திரிகைகளில் எழுத்துச் சுதந்திரத்திற்காகப் போராடிக் கொண்டிருந்தார். இந்தியாவில் ஆங்கிலேயர்களின் வசம் இருந்த பகுதிகளை ஈஸ்ட் இந்தியா கம்பெனி ஆண்டு கொண்டிருந்தது. எல்ஃபின்ஸ்டன் தொடங்கி பல ஆங்கிலேயர்களும் இந்தியர்கள் ஆங்கிலக் கல்வி பெற்று தங்களை தாங்களே ஆண்டு கொள்வதற்குத் தகுதி பெறுவார்கள் என்று நம்பினார்கள். ஆனால் மெக்காலேயின் ஆங்கிலக் கல்வி முறை இந்தியாவில் செயல்பட ஆரம்பித்தது தாதாபாய் நெளரோஜிக்கு ஒன்பது வயது ஆன பிறகுதான்.

ராணி விக்டோரியாவின் சாம்ராஜ்யத்தில் இந்தியா தேசம் ஒரு பகுதியாக ஆனபோது தாதாபாய் லண்டனில் ஸ்தாபிக்கப்பட்ட முதல் இந்திய வியாபார ஸ்தாபனத்தில் பங்குதாரராக வியாபாரங்களையும் தர்ம நியாயத்துடன் செய்யலாம் என்று நிரூபிக்கச் செயல்பட்டுக் கொண்டிருந்தார். பொருளாதார வளமும், இந்திய அரசியல் சூழ்நிலையை மீறி முன்னேறுவதும் சமுதாயச் சீர்த்திருத்தங்களும் அவருக்கு முக்கியமாகத் தோன்றின. பார்லிமென்ட்டில் கிளாட்ஸ்டன் ஐரிஷ் ஹோம்ரூல் பற்றித் தன் பிரச்சாரத்தைத் தொடங்கிய சமயம் தாதாபாய் நெளரோஜியும் ஆங்கிலேயர்களுக்கு இந்தியாவின் கட்சியை எடுத்துச் சொல்ல ஆரம்பித்தார். புள்ளி விவரங்களை ஏராளமாக அள்ளி வீசி இப்படி ஏழ்மை ஆண்டுக்காண்டு அதிகரித்துக் கொண்டிருக்கிறது என்று நிரூபித்தார். லார்டு ரிப்பன் தலைமையில் இந்தியா




நண்பருக்குக் கொடுத்துவிட்டு அதை நீங்களே வைத்துக் காப்பாற்றவும் கூடியது எது?

— முத்து

வில் பஞ்சாயத்து முனிசிபல் சீர்த்திருத்தங்கள் அமலுக்கு வந்தபோது தாதாபாயை இந்தியப் பொருளாதார அரசியல் விஷயங்கள் பற்றி ஒரு நிபுணராகக் கருதும் பழக்கம் ஏற்பட்டுவிட்டது. லார்டு கர்சன் இந்தியர்களை அடக்கி சர்வாதிகாரம் செலுத்த முயன்ற போது, உலகுக்கு தாதாபாய் நௌரோஜி இந்தியாவின் கட்சியை ஆணித்தரமாக எடுத்துச் சொல்லிக் கொண்டிருந்தார். தீங்குகள் ஒய வேண்டும் என்றும் அதற்கு ஒரே வழி இந்தியாவிற்கு சுய ஆட்சி தருவதுதான் என்றும் அவர் முழங்கினார். உலகின் காதில் விழும்படியாக முழங்கினார்.

விக்டோரியா மகாராணியின் கடைசி ஆண்டுகளில் அவர் கிளாட்ஸ்டனின் ஆதரவாளராகச் செயல்பட்டார். ஆங்கிலேயர்கள் ஏற்றுக்கொள்கிற விதிமுறைகள்படி நியாய தர்மப்படி இந்தியாவிலும் ஆட்சி நடைபெற வேண்டுமென்று பார்லிமெண்ட்டிலும் பொது மேடைகளிலும் ஓயாமல் பிரசங்கங்கள் செய்தார்.

மகாராணி விக்டோரியா இறந்து ஏழாவது எட்வெர்டு ஆட்சிக்கு வந்து அவரும் இறந்து விக்டோரியாவின் பேரன் ஐந்தாம் ஜார்ஜ் 1911ல் இந்தியாவிற்கு வந்தபோது அவரை பம்பாயில் வரவேற்கும் பெருமை தாதாபாய்க்குக் கிடைத்தது. கடைசி வரையில் அவர் பிரிட்டிஷாரின் நியாய உணர்விலே நம்பிக்கை இழக்கவில்லை.

ஆரம்ப காலத்தில் இந்திய தேசிய காங்கிரஸில் ஈடுபட்டிருந்த பல ஆங்கிலேய லிபரல்களுக்கும் வேண்டியவராக இருந்தார் தாதாபாய் நௌரோஜி. கோபாலகிருஷ்ண கோகலே, பால கங்காதர திலகர் போன்ற பின்னர் வந்த இந்திய சுதந்திர வீரர்கள் அவரைத் தங்கள் முன்னோடியாகக் கருதினர். பின்னர் பிரிட்டிஷ் அரசாங்கத்துடன் ஒத்துழையாமை இயக்கத்தைத் தொடங்கிய மகாத்மா காந்தி ஒருதரம் "இப்போது இந்தியாவின் மேன்மையான கிழவர் உயிருடன் இருந்தால் நான் செய்வது சரி என்று தான் சொல்லுவார். அவரைப் போலவே நானும் பிரிட்டிஷாரின் நண்பர்தான். எனக்கும் அவர்கள் நியாய உணர்வில் நம்பிக்கை உண்டு" என்று சொன்னதாகச் சொல்வார்கள்.

பொது வாழ்வில் நேர்மைக்கும் நாணயத்துக்கும் பின்னர் வந்தவர்களுக்கெல்லாம் வழிகாட்டினார் தாதாபாய் நௌரோஜி என்று சொல்வார்கள்.

இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளில் பொருளாதாரச் சிந்தனைகளுக்கு ஒரு முக்கியமான இடம் உண்டு. அரசியல் சமூகச் சீர்திருத்தம், விஞ்ஞானம், கலைகள், இலக்கியம், கல்வி, மதம் என்பவை பற்றி உள்ள சிந்தனைகள் போலவே, பொருளாதாரச் சிந்தனைகளுக்கும் தவிர்க்க முடியாத அவசியமான இடம் உண்டு. மற்ற சிந்தனைகள் இந்தியாவுக்கு சுதந்திரம் வந்து நாற்பது ஆண்டுகளுக்குப் பிறகும் பூரணம் பெறாதது போலவே இந்த பொருளாதாரச் சிந்தனைகளும் பூரணத்துவம் பெறவில்லை என்பதைப் பற்றி நாம் பெருமை கொள்ள முடியாது. ஆனால் இதை ஆரம்பித்து வைத்தவர் தாதாபாய் நௌரோஜி என்று நாம் பெருமைப்படலாம்.



"பிக் பாக்கெட் கேஸ், புண்ணிய கோடியைக் கூப்பிடுப்பா"

"புண்ணிய கேடி!
புண்ணிய கேடி!!
புண்ணிய கேடி!!!"

—சுதர்ஸன்

ணங்களும் நடந்தன. இதுதான் போலந்து.''

''நான் சொன்னதைத்தான் இது நிரூபிக்கிறது. உங்கள் அத்தையின் கணவர் நல்ல சோஷலிஸ்ட், நல்ல கணவர், நல்ல மாமனுர். முரண்பாடே இல்லை. அரசியல், உங்கள் அத்தைக்கும் அவருடைய கணவருக்குமிடையே குறுக்கே நிற்கவில்லை.''

''என் அத்தைக்கு அரசியல் பிரக்ஞையே கிடையாது.''

''பாக்யசாலி.''

''உங்களுக்குக் கணவனுக இருந்து அநுபவமில்லை என்கிறீர்கள். அரசியல் பிரக்ஞை இல்லாத பெண்கள் பாக்யசாலிகள் என்கிறீர்கள்... ஒருவேளை...''

''சொல்லுங்கள்...''

''பெண்களைக் கண்டாலே உங்களுக்குப் பிடிக்காதோ என்று எனக்குச் சந்தேகம்...''

''பெண்களைக் கண்டால் பிடிக்குமென்ற காரணத்தினுல்தான் நான் திருமணம் செய்து கொள்ளவில்லை. இரண்டு பேருக்குமே ஏமாற்றமில்லை.''

அவள் மனத்தடையின்றி, மிகச் சுலபமாகச் சிரித்தாள். இங்கு வரும்போது அவள் முகத்தில் தெரிந்த பயம் இப்பொழுது இல்லை.

''ஒருவரையொருவர் நன்கு தெரிந்து கொள்ள ஆரம்பித்தால், ஏமாற்றந்தான் மிஞ்சும் என்கிறீர்களா?''

''எதிர்பார்ப்பு இருந்தால்...பெரும்பான்மையான கல்யாணங்கள் தோல்வி அடைவது இந்தக் காரணத்தினுல்தான்.''

''உங்கள் நாட்டில் விவாகரத்து மிகவும் குறைவு என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அப்படியானுல், கணவனே மனைவியோ ஒருவரிடமிருந்து ஒருவர் அதிகமாக எதிர்பார்க்கவில்லை என்று அர்த்தமா?''

''இல்லை என்றுதான் சொல்ல வேண்டும், உணர்ச்சி வகையாக. கணவன் ஒரு ஸ்தாபனம். மனைவி ஒரு ஸ்தாபனம். இந்த ஸ்தாபனங்களுக்கென்று மரபு வழியாக வந்த விதிமுறைகள் உண்டு. இவற்றை அநுசரிக்கப் பழகிக் கொண்டு விட்டால், எதிர்பார்ப்புக்கோ ஏமாற்றத்துக்கோ இடமேயில்லை. ஆனுல் மணவாழ்க்கைதான் 'போர'டிக்கும். 'போர'டிக்கின்றது என்று உணர்கின்றவர்களுடைய சதவிகிதமும் மிகக் குறைவு.''

''உணர்ச்சி வகையாக எதிர்பார்ப்பு இல்லை என்றுல் என்ன அர்த்தம்? நான் தேர்ந்தெடுக்கும் என் கணவன், என்னை அவனை நான் விரும்பும் அளவுக்கு விரும்ப வேண்டுமென்று எதிர்பார்ப்பது தவறு?''

''நான் தேர்ந்தெடுத்திருக்கிறேன், என் தேர்வு தவருகப் போய், என்னையே எனக்கு முட்டாளாக்க் காட்டிவிடக் கூடாது என்ற அடி மனத்து அச்சமே, சின்னச்சின்ன பிரச்னைகளையும் பெரிதாகக் காட்டும் ஆபத்து காதல் திருமணங்களில் உண்டு. எங்கள் நாட்டில் பெரும்பான்மையானவை, ஏற்பாட்டுக் கல்யாணங்கள்தாம். ஆகவே திருமண வாழ்க்கையில் கணவன்-மனைவி உறவு முறை பற்றிய எங்கள் பார்வையும், அணுகுமுறையும் முற்றிலும் வித்தியாசமானவையாய்த் தெரிகின்றன. எது சரி, எது தப்பு, நான் தீர்ப்பு வழங்கவில்லை. நடைமுறையைச் சொன்னேன், அவ்வளவுதான்.''

நான் சொன்னது அவளை யோசிக்கத் தூண்டியது என்று எனக்குத் தோன்றியது. அவள் மேலுதட்டைக் கீழுதட்டின் மீது குவித்துக் கொண்டு சிந்தனையிலாழ்ந்திருந்தாள்.

''எனக்குத் தேநீர் வேண்டும்... உங்களுக்கு?'' என்று சொல்லிக்கொண்டே நான் எழுந்தேன்.

''தாங்க் யூ... ஓ.கே...''

தொடரும்

---

கோயம்புத்தூர் ராஜா டாக்கீஸில் பால்கனி கிளாசுக்கு 'கிளைமாக்ஸ்' கிளாஸ் என்று பெயர் வைத்திருக்கிருர்கள்.

—எம்.எஸ். வைத்யநாதன்.

# ஈஸ்வர சந்திர வித்யாசாகர்

## க.நா. சுப்ரமண்யம்

**ப**த்தொன்பதாம் நூற்றாண்டின் முதல் பாதியை சகல விதங்களிலும் இருண்டதாகவும், பலவிதங்களில் பாலைவனமாகவும் நினைப்பது நமக்கு வழக்கமாகிப் போய்விட்டது. அரசியல் சுதந்தரமோ உள்நாட்டு அமைதியோ பெரும்பகுதியினருக்கு சுபிட்சமோ அன்றாடத் தேவைப் பூர்த்திகளோ இல்லை என்றாலும் மக்களின் மனம் ஆயாசம் கொள்ளாமல் செயல்பட்டுக்கொண்டுதான் இருந்தது. எந்த லட்சியத்தை நோக்கிச் செயல்பட்டுக் கொண்டிருந்தது என்று நமக்கும் புரியவில்லை. அவர்களுக்கும் தெளிவாக இருந்ததாகச் சொல்ல முடியாது.

ஒரு குறுகிய அளவில் சோழ நாடு என்று மட்டும் எடுத்துக்கொண்டால் அந்தக் காலக்கட்டத்தில் சில கலைகளாவது மகோன்னதமான நிலையில் இருந்தன. அவரவர் அளவில் மதிப்புடன் சங்கித மும்மூர்த்திகள் செயல்பட்டுக் கொண்டிருந்தார்கள். பரதநாட்டியமும் தஞ்சை சகோதரர்கள் மூலம் சீர்பட்டு மேன்மை அடைந்துகொண்டிருந்தது; எப்படி எந்த வழிகளில் என்று தஞ்சை சகோதரர்களின் விஷயங்களை யாரும் ஆராய்ந்து நமக்கு இன்னமும் சொல்லிவிடவில்லை. பொதுவாகத் தெரிவது சொல்பம்தான். தஞ்சாவூர் மகாராஜாவுக்கு ஆளும் சுதந்திரம் போய்விட்டது. அது குறைதான். ஆனால் அதற்குப் பதிலாக அவருக்குப் பழைய கலைகள், புதிய விஞ்ஞானத் துறைகள், அறிவு, கல்வித் துறைகளில் ஈடுபாடு, மருத்துவ அறிவு விஸ்தரிப்பு எல்லாம் ஏற்பட்டுக்கொண்டிருந்தன. இத்தனையும் தவிர ஜோதிராமலிங்கம் "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்று நாடெங்கும் முழங்கிக் கொண்டிருந்தார். பழைய சிதம்பரத்துக்குப் பதில் புதிய சிதம்பரத்தை உருவாக்கினார். பழைய சிதம்பரம் கோவிலுக்குள் போவதற்கு தீண்டத்தகாத தனக்கும் உரிமையும் ஆசையும் உண்டு என்று நந்தன் கொண்டாடியதை அந்தக் காலத்து சமுதாய அளவில் கோபால கிருஷ்ண பாரதியார் இசைத்துக் கொண்டிருந்தார்; எல்லோரையும் எட்டியும் கொண்டிருந்தார்.

ஒரு குறுகிய பிரதேசத்தில் இத்தனை ஐஸ்வர்யங்களும் காணக்கிடைக்கிற போது, அந்தக் காலத்தை எப்படி இருட்டு, வறட்சி, பாலைவனம் என்று சொல்லுவது? இன்று 1986-ல் ஏற்பட்டுள்ள அனுபவங்களை வைத்துக் கொண்டு பார்க்கும்போது, இந்திய சரித்திர ஆசிரியர்கள் அரசியல் சுதந்திரம் ஒன்றுதான் முக்கியம் என்கிற நினைப்பில் நமது மறுமலர்ச்சி சரித்திரத்தை தப்பான வழிகளில் புரிந்து கொள்ள நம்மைத் தூண்டிவிட்டார்கள் என்று சொல்ல வேண்டியதாக இருக்கிறது. அரசியல், பொருளாதாரம் இவை முக்கியமல்ல என்று சொல்ல முடியாது. ஆனால் அவற்றுக்கு எவ்வளவு முக்கியம் உண்டோ அவ்வளவு முக்கி

யம் கலை, கல்வி, விஞ்ஞானம், மதம், பழக்க வழக்கங்கள் இவற்றுக்கும் உண்டு. மறுமலர்ச்சிச் சரித்திரத்தை எழுதுகிறவர்கள் இதை நினைவில் வைக்க மறந்துவிட்டார்கள்.

மறுமலர்ச்சி என்பது எங்கேயோ அரசியல் சமுதாயக் காரணங்களால் ஒரு குறுகிய பிரதேசத்திலிருந்து ஈரம் பரவுவதுபோல் எல்லாப் பக்கங்களிலும் ஒரே சீராகப் பரவும் என்று சொல்ல முடியாது. மறுமலர்ச்சியில் சமுதாய சக்திகளைவிட தனிமனித வீரியம் அதிகம். பொதுவாக வங்கத்தில் ஆங்கிலேயர்களின் தலைமையகம் அப்போது அமைந்திருந்ததாலும் ஆங்கிலேய அதிகார வர்க்கத்தினருக்கு வங்கத்தினர் தாற்காலிக செல்லப்பிள்ளையாக இருந்ததாலும் மேலைநாட்டுத் தாக்கம் கல்கத்தாவில் அதிகமாக இருந்தது. உண்மையில் சென்னையிலும், தஞ்சை, மதுரையிலும், மகாராஷ்டிரத்திலும், குஜராத்திலும் இந்தத் தாக்கம் இல்லாமல் இல்லை. அதே அளவுக்கு இருந்ததாகச் சொல்லலாம். பஞ்சாப், டெல்லி, லக்னௌ பிரதேசங்களில் சற்று தாமதமாக ஆரம்பித்தது என்று வேண்டுமானால் சொல்லலாம். இந்திய மறுமலர்ச்சியைப் பற்றி எழுதுகிறவர்கள் வங்கத்துக்குத் தருகிற அளவு முக்கியத்துவம் இந்தியாவில் மற்றப் பகுதிகளுக்குத் தருவதில்லை என்பது நன்றாகவே தெரிகிறது. அது தவறு என்பதை உணர்ந்துகொள்ள வேண்டிய காலம் வந்துவிட்டது.

இதனால் வங்கத்துக்கு முக்கியம் இல்லை என்று ஏற்படாது. மற்றப் பகுதிகளிலும் ஏற்பட்ட இயக்கங்களுக்கு ஈடான அதே அளவுக்கு முக்கியத்துவம் உண்டு. ராம்மோகன்ராய் காலம் தொடங்கி பல பேர் பலவிதங்களில் வங்கத்தில் இந்திய மறுமலர்ச்சிக்காக உழைத்தார்கள். அவர்களில் முக்கியமானவர் என்று கேசப்சந்திரசென், ஈசுவர சந்திர வித்யாசாகர், துவாரகாநாத், தேவேந்திரநாத் தாகூர், சற்றுப் பிற்காலத்தில் ராமகிருஷ்ணர், விவேகானந்தர் போன்றவர்களைச் சொல்லலாம். கேசப்சந்திர



சென், இரண்டு தாகூர்கள் இவர்கள் பிரம்ம சமாஜ இயக்கத்துடன் சம்பந்தப்பட்டவர்கள். நேரடியாக அரசியல் செய்கைகளில் ஈடுபடாமல் மத சமுதாய சீர்த்திருத்தமும், பெண் கல்வியும், விடுதலையும் புது இந்தியாவை நிர்மாணிக்கப் போதுமானது என்று எண்ணியவர்கள். பல பிரதேசங்களில் பல மறுமலர்ச்சியாளர்களுக்கு வழிகாட்டியவர்கள் இவர்கள். மதத்தையும், குடும்ப உறவுகளையும் ஒழுங்குபடுத்த இவர்கள் முயன்றார்கள். இவர்களையும் விட அதிகமாக இந்தியா பூராவையும் பாதித்தவர் என்று ராமகிருஷ்ண பரமஹம்சரைச் சொல்லவேண்டும். அவர் சிஷ்யர் சுவாமி விவேகானந்தர் தற்காலத்து இந்தியாவைப் பெருமளவுக்குப் பாதித்தவர். ராமகிருஷ்ணரை மதவாதி என்று சொல்லுவதைவிட மனிதவாதி என்று சொல்லுவது நிச்சயமாக தகும். ஆன்மீகவாதி என்றும் சொல்லலாம். ஆனால் ஆன்மீகம் என்பதற்கு ஒரு புது அர்த்தம் தந்து அதைச் சொல்ல வேண்டும். ராமகிருஷ்ணரின் ஆன்மீகத்தில் அன்றாட அரசியல் முதல் அன்றாட பூஜை முறைகள், உணவு வரை எல்லாம் அடக்கம். மனித வாழ்க்கைக்கு உரியதெல்லாம் அடக்கம்.

முன்னால் சொன்ன வங்க மறுமலர்ச்சிக்காரர்களில் எஞ்சி நிற்பவர் ஈஸ்வர சந்திரர். இவர் பட்டாச்சாரியா என்கிற பிராமண குலத்தில், வைதீகக் குடும்பத்தில் பிறந்தவர். ஆனால் அவர் மற்ற மறுமலர்ச்சிக்காரர்களைப் போல மதம் முக்கியம் என்றோ பூஜை புனஸ்காரங்கள் முக்கியம் என்றோ எண்ணியதாகத் தெரியவில்லை. விக்ரக ஆராதனையில் தனக்கு நம்பிக்கை இருந்ததாகவோ, நம்பிக்கை இல்லாததாகவோ அவர் காட்டிக்கொள்ளவில்லை. சம்ஸ்கிருதம் நன்றாகப் படித்திருந்ததனால் விதவா விவாகத்துக்கு இந்திய சாஸ்திரங்கள் சம்மதம் அளிக்கின்றன எனவும், சதி என்கிற தீய பழக்கத்துக்கு சாஸ்திர சம்மதம் இல்லை என்றும் அவரால் நிரூபிக்க முடிந்தது. பின்னர் அவர் எழுதி வெளியிட்ட வங்கமொழிப் பாடப் புஸ்தகங்களில்கூட அவர் மத 'சம்மந்தப்பட்ட தலைவர்கள் பற்றியோ, யுத்தத்தில் கொடும்போர் புரிந்த வீரர்கள் பற்றியோ எழுதாமல் விட்டுவிட்டார் என்பது இங்கு கவனிக்கத்தக்கது.

ஈஸ்வர சந்திரரும் ராமகிருஷ்ண பரமஹம்சரும் 1870 வாக்கில் சந்தித்தது பற்றி ஒரு கதை சொல்வார்கள். ராமகிருஷ்ணரின் சிஷ்யர் ஒருவர் எழுதியிருப்பதால் அதை உண்மையாக வைத்துக்கொள்ளலாம். ராமகிருஷ்ணரைவிட ஈஸ்வர சந்திரர் 16 வயது மூத்தவர். வங்கத்தில் உண்மைக்கும், தைரியத்துக்கும், அதே சமயத்தில் பவ்யத்துக்கும், விட்டுக்கொடாமைக்கும், வங்க உரைநடை அழகுக்கும் என்று பல விஷயங்களில் பெரும்பெயர் பெற்றிருந்தார், ஈஸ்வர சந்திரர், ராமகிருஷ்ணருக்கு அவரைச் சந்திக்க ஆசை. அதை அறிந்த பல சிஷ்யர்கள் போய்ச் சொல்லியும் ஈஸ்வர சந்திரர் தக்ஷிணேஸ்வரம் வரவில்லை. ஒரு நாள் ராமகிருஷ்ணரே ஈசுவரசந்திரரைத் தேடிக் கொண்டு கிளம்பிப் போய்ப் பார்த்தார். போனவுடன் "எல்லா நதிகளும் கடலைத் தேடிப் போகின்றன. அதே போல கடலாகிய உங்களைத் தேடி நான் வந்திருக்கிறேன்" என்று சிலேடையாகச் சொன்னார் ராமகிருஷ்ணர். ஈஸ்வர சந்திரரை எல்லோருமே ஈசுவர சந்திர வித்யாசாகர் என்று அழைத்தனர். சமஸ்கிருதக் கல்வியில் வித்யாசாகர் என்பது ஒரு பட்டம். ஈஸ்வர சந்திர வித்யாசாகர் என்கிற பெயர் நிலைத்து விட்டது, அவர் கல்விக் கடலாக விளங்கினார் என்பதனால். இதைப் போலத்தான் ராம் மோகன் ராய்க்கு, ராஜா என்பது பட்டம். அது காரணமாக ராஜாராம் மோகன்ராய் என்ற பெயர் நிலைத்துவிட்டது.

ராமகிருஷ்ண பரமஹம்சருக்கு ஈசுவரசந்திரர் உடனே பதில் சொல்லவில்லை. ராமகிருஷ்ணர் தொடர்ந்து "கடல் என்றால் சாதாரணக் கடல் அல்ல. வித்யாசாகரம் - கல்விக் கடல்" என்றார்.

இதற்கு ஈசுவரசந்திரர் சிரித்துக் கொண்டே "எல்லாக் கடலிலும் ஒரு உவர்ப்பு இருக்கும். நீங்களும் இந்தக் கடலிலிருந்து கொஞ்சம் உப்பு அள்ளிக் கொண்டு போகலாம்" என்று பதில் சொன்னாராம்.

ஈசுவர சந்திரரின் இந்திய மறுமலர்ச்சிப் பங்கு, அன்றும் சரி இன்றும் சரி பூர்ணமாகத் தெரிந்துகொள்ளப்படவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். மேலைநாட்டுக் கல்வி, ஆங்கிலக் கல்வி, வைதீக முறை அல்லது நவீன சம்ஸ்கிருதக் கல்வி, இஸ்லாமிய, பாரசீக, அரபிக் கல்வி என்றெல்லாம் விவாதங்களும், குயுக்தி வாதங்களும் அடிபட்டுக் கொண்டிருக்கும்போது ஈசுவர சந்திர வித்யாசாகர் எந்தக் கல்வி ஆனாலும் இந்திய மொழியில் தரப்பட்டால் ஒழிய பயன் தராது என்பதை உணர்ந்து ஆணித்தரமாக எடுத்துச் சொன்னார். ஆங்கிலத்தின் மூலம் எவ்வளவுதான் புது அறிவைப் பெற்றாலும் இந்தியர்கள் ஆகாமல் அவர்கள் அன்னியர்களாகத்தான் இருப்பார்கள் என்பதை அவர் தீர்க்கதரிசனத்துடன் சொன்னார். ஆங்கிலம் அறிந்த அன்னிய வர்க்கம் இன்றும்கூட நமக்குத் தெரிந்த ஒரு விஷயம்தானே! ஈசுவர சந்திரரின் "வெர்னகுலர்" கல்வி இயக்

சத்தை அதிகாரப்பூர்வமாகச் சில கா லம் அமல்படுத்தினுலும் கூட பல பிராந்தியங்களில் ஏற்கப்பட்டு செயல் பட நூறு ஆண்டுகள் ஆகி இருந்தது. இன்னமும் ஒருசில பகுதிகளில் தவிர சரியாகச் செயல்படுவதாகச் சொல்ல முடியாது. தமிழ்நாட்டில் நம்மிடையே நிச்சயமாகச் சரிவரச் செயல்படவில்லை என்பது தெளிவு. ஆங்கில அழிப்பு, சம்ஸ்கிருத ஒழிப்பு, இந்தி எதிர்ப்பு எல்லாம் யாருக்கோ லாபம் தரப் பயன்படுகின்றனவே தவிர தமிழுக்குப் பலன் சேர்ப்பதாக இல்லை.

ஈசுவர சந்திரரின் வெர்ஞுகுலர் கல்வி முறையைப் பின்பற்றி ஒரியா, தெலுங்கு, கன்னடம், மராட்டி, குஜ ராத்தி முதலிய மொழிகள் பேசும் மாகாணங்களில் முன்னேற்றம் ஏற்பட் டதை அந்தந்த மாகாணங்களைச் சேர்ந்த பல மறுமலர்ச்சிக்காரர்களைப் பற்றிச் சொல்லும்போது விவரமாகச் சொல்லுகிறேன்.

ஈசுவர சந்திரர் எழுபத்தியொரு ஆண்டுகள் உயிருடன் இருந்தார். (1820-1891) அவர் ஆரம்ப காலத்துக் கவனம் எல்லாம் கல்வித்துறையில் தான் இருந்தது. சம்ஸ்கிருதக் காலேஜ் அதிகாரியாகவும் பல கல்லூரிகளில் சம்ஸ்கிருதத் துறைத் தலைவராகவும் சில வருஷங்கள் இருந்தார். இந்திய வேர் கள் அற்றுவிடக்கூடாது என்றும், புதிய மேற்கத்திய ஞானங்கள் சொந்த பா ஷையில் சொல்லித்தரப்பட வேண்டும் என்றும் அவர் எண்ணினுர். 1847-ல் எழுதிய ஒரு கடிதத்தில் வங்கத்தில் கல்வியின் முதல் நோக்கம் அறிவார்த்த மான ஒரு நவீன வங்க இலக்கியத்தை உருவாக்குவதாக இருக்க வேண்டும் என்றும் ஆங்கிலம் நன்கு அறிந்த சம்ஸ் கிருத நிபுணர்கள் ஒரு நல்ல வங்கமொ ழியை மக்கள் கையாளுவதற்கு வழி வகுத்துத் தர வேண்டும் என்றும் சம்ஸ் கிருதக் கல்லூரி மாணவர்களுக்கும் ஆங்கிலம் கற்றுத் தரப்பட வேண்டும் என்றும் எழுதுகிருர். இவர் சிபார்சுகள் கல்வி இலாகாவினரால் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. வேலையை



காலில் விழத் தயார்!

''கட்டபொம்மன்'', 'கப்ப லோட்டிய தமிழன்' படங்களில் நான் நடித்த பாத்திரங்களை வேறு எந்த நடிகராவது ஏற்று என்னை விட நன்ருக நடித்தால் நான் அவருடைய கால்களில் விழத் தயார்!

இப்போதைய படங்களில் நடிப்பு முக்கியம் இல்லை 'மாடர்ன் டெக்னிக்'குகளும் பிரமாதமான இசையும் எந்தப் படத்தையும் ஓட வைத்து விடுகின்றன, அதில் நடிப்பு மிக மோசமாக இருந்தாலும்!''

(பிலிம்ஃபேர் பேட்டியில் சிவாஜி கணேசன் கூறியது)

அனிதா ராமச்சந்திரன்

காலையில் எழுந்தவுடன் சிலருக்கு மயக்கம் தோன்றும். தலைசுற்று வது போல் இருக்கும். இது பித்தத்தி ஞல் ஏற்படும் மயக்கம் என்று சொல்வார்கள். இந்த மயக்கத்தைப் போக்க காலையில் ஒரு கரண்டி இஞ்சிச் சாறு எடுத்துச் சிறிது சர்க்க ரை கலந்து சாப்பிட்டு வந்தால் மயக்கம் வராது. தலைச்சுற்றல் இருக் காது.

—ஏ.கே.நாசர்

விட்டு விலகினர். ஆனால் கல்வி இலாகா அவரை வங்கவெர்னகுலர் பள்ளிகள் ஆரம்பித்து நடத்த அதிகாரியாக நியமித்தது. முப்பத்தைந்து பள்ளிகளை அவர் நிர்மாணித்தார். ஆனல் அதற்கெல்லாம் சர்க்கார் செலவு செய்ய மறுத்தது. கல்வி இலாகா அதிகாரத்துக்காகக் காத்திராமல் அதிகார அனுமதி இல்லாமல் அவர் அவசரப்பட்டு அவற்றை ஆரம்பித்துவிட்டதாகச் சொன்னர்கள். செலவுகளை ஈசுவரசந்திரரே தன் கைவிட்டுச் செலவு செய்ய வேண்டிவந்தது. அதற்குப் பிறகு அவர் வேலைக்குப் போகவில்லை. 1858 முதல் தன் வங்க மொழிப் பாடப்புத்தகங்களை எழுதுவதில் கவனம் செலுத்தினர். வங்க இலக்கியத்தில் ஏற்பட்ட மறுமலர்ச்சிக்கு ஈசுவரசந்திரரை ஒரு முக்கியக் காரணமாகச் சொல்ல வேண்டும். வங்காளிகள் நவீன வங்க மொழியின் தந்தை என்று அவரைக் குறிப்பிடுவது வழக்கமாக இருந்தது. "அதுவரை வெளிப்படாதிருந்த வங்க உரைநடையின் இசை ஆத்மா ஈசுவர சந்திரர் மூலம் முதல் முதலில் வெளிப்பட்டது" என்று ரபீந்தரநாத் தாகூர் குறிப்பிடுகிறர்.

விதவா விவாகத்தில் ஈடுபாடு கொண்ட ஈசுவர சந்திரர் தானே கைக்காசு செலவழித்து, பல பேருக்கு வரதட்சணையும் கொடுத்து கல்யாணங்கள் செய்து வைத்ததாகத் தெரிகிறது. பெண் கல்விக்கூடங்கள் பல நிறுவி அவருடைய மாணவி ஒருத்தி முதல் கல்கத்தா மெடிகல் பட்டதாரியாக வந்தபோது மிகவும் சந்தோஷப்பட்டார். அவரை அடிக்க வந்தவர்களும், வைது திருப்தி அடைந்தவர்களும் கணக்கில் அடங்காது என்று சொல்கிறர்கள். இந்திய விதவாவிவாகச் சட்டம் நிறைவேறுவதற்கு ஈசுவர சந்திரர் வெகுவாகப் பாடுபட்டார்.

அவர் எழுதிய பாடப்புத்தகங்களிலிருந்தும் மற்றும் அவர் எழுதிய கட்டுரைகள் முதலியவற்றிலிருந்தும் நிறையவே பணம் வந்துகொண்டிருந்தது. கருணையுடன் யாருக்கும் உதவுவதையே வழக்கமாக வைத்துக்கொண்டு சாந்தால் வனவாசிகளின் நலத்தில் பழக்கவழக்கங்களில் மனம் பறிகொடுத்தவராக அவர் தனது கடைசி இருபது வருஷங்களைக் கழித்தார்.

***

---

## ஒரு ஃப்ளாஷ் இது......

வறுமையில் வாடிய அந்த இளைஞர், சர்தார் வல்லபபாய் படேலைப் பார்க்க ஒரு பழைய குதிரை வண்டியில் சென்றர். குதிரை வயதானதால் மெதுவாகவே சென்றது. எனவே குறிப்பிட்ட நேரத்திற்குச் செல்ல முடியவில்லை. படேலின் வீட்டிற்குத் தாமதமாகச் சென்றபோது வாசற்படியில் அவர் மகள், "படேலைப் பார்க்க வந்தீர்களா? அல்லது ஆடு மேய்க்கும் இடையனைப் பார்க்க வந்தீர்களா? என்று கேட்டை மூடிவிட்டார். கடைசியில் அந்த இளைஞர் படேலை பார்க்காமலேயே திரும்பினர். அவர் யார் தெரியுமா? நம்முடைய ஜனதிபதி ஜயில்சிங்தான்!...

-சி. கணேஷ்.

# ஷிர்டி ஸாயிபாபா

க.நா. சுப்ரமண்யம்

பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஆன்மிகத் துறைகளில் இந்திய மக்கள் அதலபாதாளத்தில் இருந்தார்கள் என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது. ஆனால் ஆன்மிக விஷயங்களையும் தனி மனிதர்களுடைய போக்குகளாகப் பார்க்காமல் சமுதாய அரசியல் மற்றும் பொது நோக்கிலே பார்ப்பதென்பது அதிகமாக வழக்கில் வந்து கொண்டிருந்தது.

இதையும் அப்படியொன்றும் புது விஷயமாக, மரபிலிருந்து மாறிய விஷயமாகக் கருத முடியாது.

துறவு மனப்பான்மை பூண்டு காட்டில் வசிப்பதை விரும்பிய ஆதிகாலத்து மகரிஷிகள்கூட தங்கள், தங்கள் ஆன்மிக முற்போக்கை சொந்த விஷயமாகக் கருதினாலும், குருகுலங்கள் ஸ்தாபித்தும் ஊர் ஊராகப்போய் மதப் பிரசங்கங்கள் செய்தும், சமுதாய அளவில் பயன்காண முயன்றிருக்கிறார்கள் என்று சொல்ல வேண்டும். இந்தச் சமுதாய வேகம் என்கிற காரணம் புத்தரின் வருகையால் அதிகரித்தது என்று சொல்லலாம். சங்கரர் காலம், பின்னர் ராமானுஜர், குருநானக், சைதன்யர் வரையிலும், அதற்கு அப்பாலும்கூட, இந்து மத விஷயங்களில் சமுதாயத்தாக்கம் செயற் பட்டுக் கொண்டிருந்தது என்று கூறலாம்.

மத விஷயங்களையும் ஆன்மிகப் பாடல்களையும் சொந்த ரகசியமான தனிப்பட்ட காரியங்களாக வைத்துக் கொள்ள வேண்டும் என்பது புராதன காலத்தில் இந்துக்களிடையே சற்று அதிகமாக இருந்தது என்று கூறலாம். இது காரணமாகவே கூட ஜாதிக் கட்டுமானமும் கெடுபிடிகளும் சற்று அதிகமாக இருந்தன என்று சொல்லலாம். சமணத்தாக்கத்தினாலும் புத்தரின் வருகையாலும் பௌத்தஜைன சங்கக் கொள்கைகளாலும் இந்திய சமுதாயத்தில் கெடுபிடிகளும் கட்டுப்பாடுகளும் தளர்ந்து கொண்டு வந்தன.

இதை மேலும் சாத்தியமாக ஆக்குகிறவகையில் இந்தியாவுக்குள் இஸ்லாத்தின் வருகை பயன்பட்டது. இஸ்லாத்தின் ஷூஃபிக் கொள்கைகள் அப்படியொன்றும் இந்துமத உயர் மட்டக் கொள்கைகளுக்கு விரோதமானதல்ல என்கிற நினைப்பு பலருக்கும் ஏற்பட்டது. தவிரவும் நாடெங்கும் அரசியலின் ஒரு அம்சமாக கோயில்கள் தோன்றிக்கொண்டிருந்தன. இந்தக் கோயில்களை ஒன்றுக்குப்பின் ஒன்றாகத் தேடி அலைந்து பக்திக் கவிகள் பாடிப் பரவிக் கொண்டிருந்தார்கள். மதமும் ஆன்மிக வழிகளும் ஒரு விசாலமான பொதுத் தன்மை பெற்றுக்கொண்டிருந்தன. அந்த அளவுக்கு ஜாதி மதப்பிடிப்புகள் தளர்ந்து கொண்டிருந்தன. பதின்மூன்றாவது நூற்றாண்டைச் சேர்ந்த க்வாஜா மொய்னுடன் சிஷ்டி, க்வாஜா பக்தியார் காக்கி, பாபா ஃபரீத், நிஜா

## தந்தையின் நிழலில்...

தந்தை எந்தத் துறையில் இருக்கிருரோ, அதில் மகனும் விருப்பம் காட்டுவது சகஜம். இயற்கை. சன்தீப், சத்யஜித்ரேயின் மகன். ''சத்யஜித்ரே அளிக்கும்'' என்னும் டி. வி. நிகழ்ச்சி தற்போது பிரபலமாகி, சந்தீப்பிற்குப் பாராட்டுதல்களைத் தந்திருக்கிறது.

சந்தீப், தன்து தயாரிப்பிற்கு ''சத்யஜித்ரே அளிக்கும்'' என்று ஏன் பெயர் வைத்தார்......?

சன்தீப்பே சொல்கிருர்.

''ஹிட்ச்'சாக் அளிக்கும்'' என்று சொல்வதுபோல்தான் இதுவும். இதற்குக் குறிப்பிட்ட காரணங்களைச்

---

ூடின் ஔலியா முதலியவர்களுடைய ாட்சிகளையும், சிந்தனைகளையும் இந்திய சமுதாயத்தில் ஏற்றுக்கொள்வது லபமாகவே சாத்தியமாயிற்று. பதினைந்தாவது நூற்ருண்டில் கபீர் தோன்றியபோது ராம்ரஹிம் சிந்தனை இந்திய மறுமலர்ச்சியின் ஒரு ஆணிவேராகவே அமையத் தொடங்கிவிட்டது என்று சொல்லலாம். இந்த ராம்ரஹிம் சிந்தனை இருபதாம் நூற்ருண்டில் ஓரளவுக்கு அரசியல் வாதிகளின் குறுகிய மனப்போக்கினுல் உடைய இருந்தது என்று சொல்ல வேண்டும்.

ஒரு ஆயிரம் வருஷங்களில் இந்து சமுதாயத்தில் பலவிதமான அடிப்படையான மாற்றங்களுக்கு இஸ்லாத்தின் தாக்கம் காரணமாக இருந்திருக்கிறது என்று சொல்லலாம். சமுதாயத்தில் குறிப்பிட்ட குழுக்களுக்கும் கும்பல்களுக்கும்தான் முக்கியம் இருந்ததே தவிர இந்து மதத்தில் தனிப்பட்ட மனிதர்களுக்கு முக்கியத்துவம் எதுவும் இல்லை. இஸ்லாத்தில் தனிப்பட்ட மனிதர்களின் முக்கியத்துவம் வற்புறுத்தப்பட்டது. பின்னர் வந்த கிறிஸ்தவச் சிந்தனைகளும் தனிப்பட்ட மனிதர்களின் முக்கியத்துவத்தை வற்புறுத்தி ஆழ்ந்து ஊன்றச் செய்தன. இன்று இந்தியாவில் ஜனநாயகச் சிந்தனை வேரூன்றி இருக்கிறது என்ருல் அதற்கு இதுதான் காரணம்.

அதேபோல பெண்களை எவ்வளவு உயர்வாகக் கருதினுலும் அவர்கள் பொதுக் காரியங்களுக்கு லாயக்கு இல்லை என்கிற நினைப்பும் இந்தியச் சமுதாயத்தில் இஸ்லாத்தின் தாக்கத்தினுல் ஏற்பட்டதுதான் என்று சொல்லலாம்.

மதங்களாக ஒன்றுக்கொன்று முரண்பட்டதாக இஸ்லாமும், இந்து மதமும் கருதப்பட்டாலும் அவற்றின் போக்குகளும் தாக்கங்களும் ஒன்றுக்கொன்று பிணைந்து பிரிக்க முடியாதபடி இருந்தன. இருபதாம் நூற்ருண்டில் மகாத்மா காந்தி ரகுபதி ராகவ ராஜா ராம் என்கிற பாட்டில் ஈசுவர அல்லா தேரே நாம் என்று நாலாவதாக ஒரு அடியைச் சேர்த்ததற்கு இதுதான் காரணம் என்று சொல்லலாம். தமிழகத்து ஜோதி ராமலிங்கம் அல்லாவைப் பற்றி எதையுமே சொல்லியிருப்பதாகத் தெரியவில்லை. ஆனுல் அவருக்கும் இஸ்லாமிய அடிப்படை உண்டு என்றுதான் தோன்றுகிறது. ஆனுல் வங்கத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் அல்லாவைத் தேடுகின்ற ஆன்மிக வழி

சொல்ல இயலாது. இந்தத் தலைப்பு வித்தியாசமானது என்ற பெருமை யையும் தாங்கி நிற்கிறது''

''என் தந்தையின் நிழலிலேயே நான் நிற்பேன். அது தவிர்க்க முடியாதது......... இந்த நிகழ்ச்சியில் ஒன்பது கதைகளை எனது தந்தை எழுதியுள்ளார்''

''இந்த டி.வி. நிகழ்ச்சியைப் படம் எடுப்பதில், வீடியோ முறையை நான் ஏற்கவில்லை. 35 எம். எம். படமாகவே எடுத்துள்ளேன். இதை சினிமா ஆகவும், டிவி படம் ஆகவும் பயன்படுத்தலாமே...... நிகழ்ச்சியை நீட்ட அனுமதி கிடைத்திருக்கிறது. ஆனால் நான் தொடரப்போவதில்லை.''

''சத்யஜித்ரே அளிக்கும்'' நிகழ்ச்சி ''விஷயம் தெரிந்தவர்களுக்காக'' என்று சொல்லப்படுகிறது. ஒத்துக்கொள்கிறேன். அதனால்தான் தலைப்பை அப்படி வைத்தோம்.''

சன்தீப், குறுநாவல்களையும் படமாக எடுக்கவிருக்கிறார். இரண்டு படங்களைச் சேர்த்து திரைப்படமாக, திரையரங்குகளில் திரையிடும் திட்டமும் உண்டு. ''சத்யஜித்ரே அளிக்கும்'' டிவி தொடரை ''இங்கிலாந்தின் சானல் ஏ'', வாங்க உத்தேசித்திருக்கிறது.

சன்தீப், தந்தை சத்யஜித்ரேயின் பெயரை, பெருமையைக் காப்பாற்றுவார் என்றே தோன்றுகிறது.

-அங்கவை

---

யும் ராமர், கிருஷ்ணர், காளி என்று தேடுகிற ஆன்மிக வழிகளும், இந்து ஆன்மிக வழிகளும் ஒரு முடிவான கட்டத்தில் ஒன்றுதான் என்று தன் சிஷ்யர்களுக்கு வற்புறுத்திச் சொல்ல வேண்டியிருந்தது.

இந்து முஸ்லீம் ஆன்மீக ஒற்றுமையை ராமகிருஷ்ண பரமஹம்ஸர் வற்புறுத்திச் சொல்ல வேண்டியிருந்தது. ஆனால் ஸாயிபாபா இந்து முஸ்லீம் ஒற்றுமையை அவருக்கு முன் கபீர் போல, வாழ்ந்து காட்டினார். ''நானிருக்க பயம் ஏன்?'' என்கிற ஸ்லோகம் ஷிர்டி ஸாயிபாபாவின் உருவமாகவே ஒரு நூறு நூற்றைம்பது வருஷங்களாக இந்தியா பூராவும் தெரிய வந்துவிட்ட ஒரு ஸ்லோகம். ஷிர்டி என்கிற ஊர் இந்தியாவில் எந்தப் பக்கத்தில் இருக்கிறது என்று தெரியாதவர்கள் கூட ஷிர்டி ஸாயிபாபாவின் பக்தர்களாக ஏதோ ஒரு மாயத்தினால் கட்டுப்பட்டவர்களாக இருப்பதை நாம் காண முடிந்திருக்கிறது. அறிவுப்பூர்வமாக ''நானிருக்க பயம் ஏன்?'' என்கிற ஸ்லோகத்தை பகவத்கீதையில் கிருஷ்ணன் சொன்னதிலிருந்து தோன்றியதாகக் காரணம் கண்டு திருப்திப்பட்டவர்களையும் நான் பார்த்திருக்கிறேன்.

ஷிர்டி ஸாயிபாபா பிறந்த தேதி நிச்சயமாகத் தெரியவில்லை. 1838 என்று அனுமானிக்கிறார்கள். எங்கே பிறந்தார் என்பதும் தெரியவில்லை. அவர் பிறப்பினால் இஸ்லாமியரா, இந்துவா என்றும் யாருக்கும் நிச்சயமாகத் தெரியாது. அவரையே கேட்டதற்கு ஒருதரம், ''நான் அல்லாமாலிக், கடவுளின் சேவகன், ஏழைப் பக்கிரி'' என்று சொன்னதாகவும், மறுநாள் வேறொருவர் கேட்டதற்கு, ''நான்தான் கணபதி லக்ஷ்மி, நாராயணி'' என்று சொன்னதாகவும் சொல்லுவார்கள். அவருக்கே முடிவாகாத ஒரு விஷயம் இது என்று சொல்லத் தோன்றுகிறது. எங்கே பிறந்து, எப்படி அவர் ஷிரிடி வந்து சேர்ந்தார் என்பது ஒருவருக்கும் தெரியாத மர்மமாகத்தான் இருக்கிறது. வந்து பல வருஷங்கள் அவர் ஷிர்டியில் முஸ்லிம் மசூதியிலும், இந்துக் கோவிலிலும் மாறிமாறி அவர் இஷ்டப்படி வசித்துக் கொண்டிருந்ததாகத் தெரிகிறது. எத்தனையோ பிச்சைக்காரர்களைப்போல ஒரு பிச்சைக்காரராகத் தன் உணவை யாசித்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்திருக்கிறார். சில காலத்துக்குப் பிறகு அவர் பேசுவதில் ஏதோ விசேஷமும், கவர்ச்சியும் இரு

கிறது என்று அவர் வாயைக் கிளறி வம்புக்கு இழுத்து ஆனந்தப்பட்டவர்கள் நாளடைவில் அவர் சிஷ்யராக தங்களைக் கருதத் தொடங்கியதாகத் தெரிகிறது. வழக்கமாகக் கோயிலில் விளக்குகள் ஏற்றுவதற்கு எண்ணெய் தருகிற வாணியன் ஒரு நாள் மாலை அவருக்கு எண்ணெய் தர மறுத்துவிட்டான். கோவிலில் கூடிய கூட்டம் அன்றிரவு கோவிலில் விளக்குகள் எரியாது என்று எண்ணினார்கள். வேறு யாரிடமும் அவர் எண்ணெய் யாசிக்கவில்லை. ஆனால் மாலையில் விளக்குகள் ஏற்றும் நேரம் வந்தபோது, குடிதண்ணீர் பானையிலிருந்து ஒவ்வொரு விளக்கிலும் தண்ணீரை விட்டு விளக்குகளை ஏற்றியதாகவும், விளக்குகள் எல்லாம் வழக்கம் போல நள்ளிரவு வரையில் எரிந்தன எனவும் சொல்லுகிறார்கள். இந்த அதிசயம் நிகழ்ந்தபோது அவருக்கே வயது நாற்பது இருக்கும் என்று சொல்லுகிறார்கள். அன்று முதலே ஏராளமான பலர் அவரை நாடி வந்ததாகவும், வந்தவர்கள் எவரையும் திருப்திப்படுத்தாமல் வெறுங்கையோடு அவர் அனுப்பியதில்லை என்றும் சொல்லுகிறார்கள்.

அதிசயங்கள், மந்திரங்கள், மாயா ஜாலங்கள் இவைகளுக்கெல்லாம் அர்த்தம் என்ன என்று நம்பிக்கை இல்லாவிட்டாலும் சிந்திக்கத்தானே வேண்டியதாகயிருக்கிறது! தீராத நோயை எதிரிலிருந்த சாம்பலை எடுத்துக் கொடுத்து தீர வைப்பது, எதிரிலில்லாதவர் தவறுதலாகவோ, தெரிந்தோ சாப்பிட்டுவிட்ட விஷத்தைத் தான் செரித்துக் கொள்வது, எங்கேயோ வெகு தூரத்துக்கு அப்பால் நடந்த ஒரு பயங்கர விபத்தில் தன்னை நம்பியவனைச் சாகாமல் காப்பது என்றெல்லாம் பல அதிசயித்துப்போன விஷயங்களை அவர் நடத்தியதாகப் பலர் சொல்லுகிற போது, ஒன்று எல்லோரும் பொய் சொல்லுகிறார்கள் என்று வைத்துக் கொள்ள வேண்டும் அல்லது முழுவதும் நம்ப மறுத்துவிட வேண்டும். இந்த இரண்டுமே நமக்குப் பூரணமாகச் செய்ய முடியாமலிருப்பதை இந்திய மறுமலர்ச்சியின் ஒரு அம்சமாக ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். புத்தர் முதல் ரமண மகரிஷி வரையில் இந்த மாதிரி அதிசயங்கள் நிகழ்த்தியிருப்பதாகச் சொல்லுகிறார்கள். நம்புவது சாத்தியமில்லாவிட்டாலும், நம்பாததாக ஒரு மனப்பான்மையை வளர்த்துக் கொள்ள வேண்டியதாக இருக்கிறது. இதை இந்திய மறுமலர்ச்சியில் ஒரு அம்சமாகவே சொல்லலாம். நம்பாததற்குக் காரணங்கள் ஆயிரம் உண்டு. நம்புவதற்கு அது அப்படித்தான் என்பதைத் தவிரக் காரணம் இல்லை. நம்மால் நம்ப முடிகிறது என்பதையே நம்முடைய ஆன்மிகப் பரிமாணங்களில் ஒன்றாகக் கருதலாம்.

சுவாமி தயானந்த சரஸ்வதியைப் போல இந்து மதத்தின் வேதகாலப் பெருமைகளைத் திருப்பிக்கூறிவர ஷிர்டி ஸாயிபாபா முயலவில்லை. இந்துவோ, இஸ்லாமியனோ, கிறிஸ்துவனோ, பார்சியோ, சீக்கியனோ, சமணனோ, தாழ்த்தப்பட்டவனோ யார் தன்னை அணுகினாலும் அவனுக்குக் கருணையுடன் உதவி செய்யத் தயாராக இருந்தார். ஜாதி, மதம், நம்பிக்கைகள் என்று எதைப் பற்றியும் ஷிர்டிஸாயிபாபா யாரையும் விசாரித்ததாகத் தெரியவில்லை. உதவி தேவை என்று நாடி வந்தவர்களுக்கு உதவி செய்ய அவருக்கு மனமும் சக்தியும் இருந்தது என்பதுதான் பிரதானமான விஷயம். மற்றபடி சமுதாயம் என்பதில் அவர் சிரத்தையோ, சிந்தனையோ சென்றதாகத் தெரியவில்லை. யாரையும் திருத்தவேண்டும் என்றோ தான் சொல்வதைப் பின்பற்றக் கட்டாயப்படுத்தவேண்டும் என்றோ அவருக்கு நினைப்பு இருந்ததாகத் தெரியவில்லை. இந்த விஷயத்தில் ஸாயிபாபா அவர் காலத்திய அல்லது பிற்காலத்திய மகான்களிடமிருந்து அடிப்படையில் வெகுவாக வித்தியாசப்பட்டவர்.

ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர் மாதிரி ஷிர்டி ஸாயிபாபா தியான மார்க்கத்தை, ஞானமார்க்கத்தைத் தெளிவுறுத்தும் கதைகள் சொன்னதில்லை. மனி

தர்களுக்குச் சேவை செய்வதுதான் தெய்வத்திற்கு சேவை செய்வது என்ற ராமகிருஷ்ணர் தன் சிஷ்யர்களுக்கு வற்புறுத்திச் சொன்னதுபோல ஷிர்டி ஸாயிபாபா வற்புறுத்திச் சொன்னதாகத் தெரியவில்லை. ஒருவிதத்தில் மற்றவர்கள் கடவுளின் தூதர்களாகச் செயல்பட்டார்கள் என்றும் ஷிர்டி ஸாயிபாபா கடவுளாகவே செயல்பட்டார் என்றும் சொல்லத் தோன்றுகிறது. இதில் உயர்வு, தாழ்வு கற்பிக்கவேண்டும் என்கிற அவசியமே இல்லை. இந்தத் தளத்தில் உயர்வு தாழ்வுக்கு இடம் இல்லைதானே!

தமிழகத்தில் ஷிர்டிஸாயிபாபாவின் ஆரம்ப ஆண்டுகளில் நடமாடிக் கொண்டு "ஒன்றே குலம் ஒருவனே தேவன்'' என்று பிரச்சாரம் செய்துகொண்டிருந்த ஜோதி ராமலிங்கத்திடமும் ஷிர்டி ஸாயிபாபா வெகுவாக மாறுபட்டவர்தான் என்று தோன்றுகிறது. அவர் மசூதிக்கும், கோயிலுக்கும் இடையே ஊசலாடிக்கொண்டிருந்தாரே தவிர, எதையும் புதிதாக ஸ்தாபிக்க முயலவில்லை. ராமலிங்க அடிகளைப் போல அவர் ஜோதி தரிசனம்கூட வற்புறுத்தவில்லை. தன்னையும் தன்னை தேடி வந்தவர்களையும் தரிசிப்பது தரிசனம் அளிப்பது அவருக்குப் போதுமானதாக இருந்தது. ஜோதி ராமலிங்கம் பழைய ஸ்தாபனங்களை ஒதுக்கிவிட்டு ஒரு புது ஸ்தாபனத்தின் மூலம் தான் எண்ணியதை நிலை நிறுத்த விரும்பினார். இந்த முயற்சியைக்கூட ஷிர்டி ஸாயிபாபா மேற்கொண்டதாகத் தெரியவில்லை. எது நல்ல வழி என்பதை அவரவர் இஷ்டத்துக்குத் தீர்மானித்துக்கொள்ள வேண்டியதுதான்.

முதலாவது இந்திய சுதந்திரப் போராட்டத்துக்கு அடுத்த வருஷம் தன்னுடைய இருபதாவது வயதில் நைஜாம் ராஜ்ய தெலுங்குப் பகுதிகளிலிருந்து வந்து ஷிர்டியில் தங்கிவிட்டார், ஸாயிபாபா. சமாதி அடைகிற வரையில் ஒரு 61 வருடங்கள் அவர் ஷிர்டியை விட்டு எங்கேயும் போனதாகத் தெரியவில்லை. இதில் கடைசி முப்பது, நாற்பது வரு



வெற்றியின் சூட்சுமம்

விவேகானந்தர் அமெரிக்காவில் இருந்த சமயம் ஒரு நாள் திறந்த வெளி ஒன்றில் நடந்து கொண்டு இருந்தார்.

அங்கே சில இளைஞர்கள் சிறிய கைத்துப்பாக்கி ஒன்றை வைத்துக்கொண்டு குறி ஒன்றைச் சுட்டு வீழ்த்த திரும்பத் திரும்ப முயன்று தோல்வியுறுவதைக் கண்டார்.

அவர் அந்த இளைஞர்கள் அருகே சென்று அந்தத் துப்பாக்கியை வாங்கி அடுத்த கணத்தில் அந்தக் குறியைச் சுட்டு வீழ்த்தினார். இவ்வளவுக்கும் இதற்கு முன் அவர் துப்பாக்கியை கையில் எடுத்ததே கிடையாது. இளைஞர்கள் விவேகானந்தரை ஆச்சரியமாகப் பார்த்தனர்.

''எந்த விஷயத்திலுமே மனதை ஒரு நிலைப்படுத்துவதில்தான் வெற்றியின் சூட்சுமம் இருக்கிறது'' என்று அவர் இளைஞர்களுக்கு போதித்தார்.

எஸ்.முகம்மது யூசுப்.

ஷங்களில் அகமட் நகர் ஜில்லாவில் உள்ள ஷிர்டி என்கிற சிறு கிராமத்தின் பெயர் இந்தியா பூராவும் பரவிவிட்டது. ஆரம்பத்தில் மகாராஷ்டிரத்திலிருந்தும், ஆந்திரப்பிரதேசத்திலிருந்தும், குஜராத்திலிருந்தும் மருந்து வாங்கி வைத்தியம் செய்துகொள்ள முடியாத நோயாளிகள் ஸாயிபாபாவின் புகழைக் கேள்விப்பட்டு வர ஆரம்பித்தார்கள். அவர் புகழ் பரவப்பரவ பணக்காரர்களும் வர ஆரம்பித்தார்கள். அவர்கள் கொடுத்த உணவையும் பொருள்களையும் ஏழைகளுக்காக அவ்வப்போது செலவிட ஆரம்பித்தார் ஸாயிபாபா. இருபதாம் நூற்றுண்டின் ஆரம்பத்தில் அரசியல் அளவில் இந்தியத் தலைவர்கள் சுதந்திரம் சுதேசி என்பதையும் சீர்திருத்தவாதிகள் ஆண் கல்வி விஸ்தரிப்பு, பெண் கல்வி, பொது நலம் என்பதையெல்லாம் பற்றி என்னென்ன எப்படிச் செய்யலாம் என்று யோசித்துக்கொண்டிருந்தபோது ஸாயிபாபா போலவும் அவரைப் போன்ற புகழ் அதிகம் பெருத எத்தனையோ லோகல் சாமிகளின் துணையும், கடவுளின் பரவலான சிந்தனையும், மனிதனுடைய சக்திக்கு அப்பாற்பட்ட ஏதோ ஒரு சக்தி பற்றிய சிந்தனையும் வளம் அடைந்துகொண்டிருந்தது. ஜாதி மத வித்தியாசம் பாராமல் வளம் பெற்றுக் கொண்டிருந்ததுதான் விசேஷம்.

ஸாயிபாபாவின் நகைச்சுவை பற்றிப் பல கதைகள் சொல்லுகிருர்கள். உதவி தேடுகின்றவனை வாயால் திட்டிக் கொண்டே உதவி செய்து அனுப்பிவிடுவாராம். "நான் ஷிர்டியில் மட்டும் தான் இருக்கிறேன் என்று நீ எண்ணிஞல் உன்னை ஒரு முட்டாள் என்றுதான் நான் கருதுவேன்" என்று ஒருவனிடம் சொன்ஞராம். ●

---

ஆ.வானொலிதாசன்,
மதுக்கூர்.

'அணு ஆயுத அபாயத்தில் இருந்து-அகில உலக நாடுகளை இரு பெரும் வல்லரசு நாடுகளின் இரும்புப் பிடியிலிருந்து காப்பாற்ற, அமரர் நேருஜிக்கு நிகரான ''சமாதானப் பறவை''யாம் தும்பியார்- சம்பந்தப்பட்ட வல்லரசு நாடுகளுக்குத் தர இருக்கும் 'உருப்படியான' யோசனைதான் என்ன?

அமரர் நேருஜியைக் கேட்டுத்தான் சொல்ல வேண்டும்.

தே.இராதாதேவன்,
வேலூர்.

பூண்டு கிலோ 20-00, கடலெண்ணெய் 23-00 என்று உணவுப் பொருள்களின் விலை ஏறிக்கொண்டே போகிறது; விலைக் கட்டுப்பாடு இல்லாமல் போகிறது. உணவு இலாக்கா மற்றும் மத்திய, மாநில அரசுகள் என்ன செய்துகொண்டிருக்கின்றன? நாம் என்ன செய்ய வேண்டும்?

பூண்டு வடை சாப்பிடுவதை நிறுத்திக்கொள்ளலாம்.




ஆர்.கே. லிங்கேசன்,
மேலகிருஷ்ணன்புதூர்.

பெரியாரின் கொள்கைகளை முதல்வர் எம்.ஜி.ஆர்.தான் கடைப்பிடிக்கிறார் எனத் திருவாரூர் தங்கராசு சொல்கிறாரே?

இவருக்குப் பெரியாரையும் தெரியாது. எம்.ஜி.ஆரையும் தெரியவில்லை.

17-8-86 இதழில் பெரும்பான்மை வாசகர் தீர்ப்புப்படி ரூ. 10 பரிசுக்கான கேள்வியைக் கேட்டவர்: அ. ஜமால்மொய்தீன், C/o ஒய்.யூனஸ்டெய்லர், திரு.வி.க. தெரு, செங்குன்றம், சென்னை-52

## பரிசுக்குரிய கேள்வி

பீகாரில் பாட்னா மருத்துவக் கல்லூரி மருத்துவமனை டாக்டர்களின் ''வன்முறை மற்றும் காட்டுமிராண்டித்தனமான'' வேலை நிறுத்தத்தின் பாதிப்பு மிகவும் கொடுமையானது, அந்த டாக்டர்களைப் பற்றி......?

அந்த மருத்துவமனையிலேயே இவர்கள் நோயாளிகளாகிக் கிடக்கவேண்டும்.

ஆ.சம்சுதீன்,
நாவினிப்பட்டி.

தி.மு.க.வினர் போராட்டம் போராட்டமென அலைகிறார்கள், அவர்களுக்கு வேறு வேலை இல்லையா? இல்லை, அவர்களுக்கு பந்த், உண்ணாவிரதத்தைத் தவிர வேறு வேலை தெரியாதா?

அங்கேயும் வேலையில்லாத் திண்டாட்டம் இருக்கிறது.

பி.வி.சீனிவாசன்,
பின்னத்தூர்.

எங்கள் ஊரில் 'தும்பியார் அறக்கட்டளை' என்ற பெயரில் சுயநிதி ஆசிரியர் பயிற்சிப் பள்ளிகள், பாலிடெக்னிக்குகள் மற்றும் தொழிற்பயிற்சி நிலையங்கள் ஆகியவற்றைத் திறக்க உள்ளோம்! மற்றும் பல ஊர்களிலும் நர்சரி ஸ்கூல்கள் முதல் பொறியியல் கல்லூரிகள் வரை திறக்க உள்ளோம். தாங்கள் தலைமையேற்று ஆதரவு தருவீர்களா?

ஒரு நிபந்தனை. எல்லோருக்கும் டொனேஷன் வாங்காமல் அட்மிஷன் கொடுக்க வேண்டும்.

எஸ்.டி.ராஜன்,
ஆறுமுகனேரி.

எங்கள் தொகுதி எம்.பி.யைப் பார்க்கவும் முடியவில்லை. லெட்டர் எழுதினாலும் பதில் இல்லை. என்ன செய்யலாம்?

காணோம் என்று டி.வி.யில் ஓர் அறிவிப்பு கொடுத்துப் பார்க்கலாம்.

# ஜம்ஷெட்ஜி டாடா

க.நா.சுப்ரமண்யம்

**டா**டா என்கிற பெயர் இந்தியாவில் அநேகமாக எல்லோருக்கும் தெரிந்த ஒரு பெயர். இந்தப் பெயர் இந்தியா பூராவும் பரவுவதற்குக் காரணமாயிருந்த ஆதிபுருஷர் ஜம்ஷெட்ஜி டாடா என்பதும் தெரியும். பொதுவாக இவர் பார்ஸிக்காரரர் என்பதும், பத்தொன்பதாம் நூற்றுண்டில் வாழ்ந்தவர் என்பதும் பெரும் பொருள் ஈட்டினர் என்பதும், ஹைதராபாத் நிஜாமுக்குச் சமமாகச் சொல்லக்கூடிய கோடீசுவரர் ஆனர் என்பதும் ஓரளவுக்கு எல்லோருக்கும் தெரியும் என்று சொல்லலாம்.



1878-79ல் அவர் மான்செஸ்டரில் ஒரு சிந்தனையாளர் செய்த பிரசங்கத்தைக் கேட்டு தன் தொழில் லட்சியத்தை அமைத்து வளர்த்துக் கொண்டார். அது நடைமுறையில் சாத்தியமாக வர வழி செய்து கொண்டார் என்பது பொதுவாக பலருக்கும் தெரியாது. அந்தப் பிரசங்கியார் சொன்னதின் சுருக்கம் இதுதான்: ''எந்தத் தேசம் தனது இரும்பைச் சரியாக கவனித்துக் கொள்கிறதோ அந்த தேசத்தில் பொன் தாராளமாக விளையும்.'' இந்த விஷயத்தை டாடாவின் மனதில் பதியும்படியாகச் சொன்னவர் தாமஸ்காலீலல் என்கிற ஆங்கிலப் பிரசங்கியார். தொழில் யுகத்தில் முதல் தத்துவதரிசி. ஒரு காலத்தில் இந்திய ஆங்கிலக் கல்வி மூலம் பரவலாக தெரிந்திருந்த பெயர் இது.

இதுபோல இன்னும் சில விஷயங்கள் டாட்டாவைப் பற்றிப் பலருக்கும் தெரியாமல் இருக்கலாம். 1839 முதல் 1904 வரையில் இருந்தவர். பம்பாய் நகரத்தை இந்தியாவின் முக்கியமான முதல்தரமான நகரமாக நிர்மாணிக்கப் பாடுபட்டவர். அவ்வளவு நாள் ஆங்கிலேயர்கள் மட்டும் அனுபவித்துக் கொண்டிருந்த கிளப் வாழ்க்கை என்கிற சிறப்பான சமுதாய அம்சம் இந்தியர்கள் சிலருக்கேனும் கிடைக்க வேண்டுமென்று முன்நின்று உழைத்தவர். பல சமூக கிளப்களை நிர்ணயித்தவர். இந்தியாவில் மிகச் சிறந்த ஓட்டல் எனப் பெயர் பெற்ற பம்பாய் தாஜ்மஹால் ஓட்டலை நிறுவியவர் அவர்தான். பருத்தி, இரும்பு இரண்டு தொழில்க

ளும் இந்தியாவில் வேரூன்றி நிலைப்பதற்கு ஆவன செய்தவர், மூலகாரணமானவர்.

தொழில் வளத்துக்கு அடிப்படையாக வேண்டிய மின்சக்தி உற்பத்திக்காக ஹைட்ரோ எலக்ட்ரிக் திட்டம் ஒன்றை உருவாக்கினர். இரண்டாவதாக தொழில் வளத்துக்கு அடிப்படையான அறிவை நாட்டில் வளர்ப்பதற்கு மேல் படிப்பு படிக்கவும், ஆராய்ச்சி செய்யவும் ஒரு சர்வகலா சாலையை உருவாக்க முயன்ருர். இந்த இரண்டு முயற்சிகளும் அவர் வாழ்நாளில் பூர்த்தி ஆகவில்லை. ஆனல் அவர் நிர்மாணித்த அஸ்திவாரத்தின்மேல் ஹைட்ரோ எலக்ட்ரிக் ஸ்கீமாகவும், பெங்களூர் இந்தியன் இன்ஸ்டிட்யூட் ஆப் சையன்ஸ் ஆகவும் உருவாகின.

இன்னும் இரண்டு மூன்று விஷயங்கள் அவரைப் பற்றிச் சொல்லிவிட்டால், அவரைப் பற்றிய வர்ணனை பூர்த்தியாகிவிடும். அவர் ஒரு சாப்பாட்டுப் பிரியர். டாக்டர்கள் சாப்பிடாதே என்று சொன்னுலும்கூட பெரியவராகிய பின்னரும் அவர் குழந்தைத்தனமாக தனக்குப் பிடித்ததையே விரும்பி உண்பாராம். தன் குடும்பத்தினர்களின் அங்கத்தினர்கள்பேரில் அளவற்ற அன்பு உள்ளவர். தன் குடும்பத்தின் கீர்த்திக்குக் குந்தகம் விளையக்கூடாது என்று எண்ணியவர். தான தர்மம் செய்வதில் விருப்பம் உள்ளவர் என்ருலும் ஒரு ஸ்தாபனத்தின் மூலம் அந்த தானதர்மத்தை நடத்துவது சமுதாயத்துக்கு லாபகரமானதாக இருக்கும் என்று எண்ணியவர். Trustship of Wealth என்று மகாத்மா காந்தி பின்னர் ஸ்தாபிக்க முயன்ற ஒரு சித்தாந்தத்தை அவர் ஜம்ஷட்ஜி டாட்டாவிடமிருந்துதான் புரிந்துகொண்டார் என்று சிலர் சொல்லக் கேட்டிருக்கிறேன்.

இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளில் வாழ்க்கையின் எல்லாவிதமான அம்சங்களும் அடங்கியிருக்கின்றன. ஒரு தேசத்தின் வளத்துக்கு லோகாயதம் மட்டும் போதுமானதில்லை என்பதற்கு உதாரணமாக பாபிலோன், மிசிரம் என்கிற எகிப்த் இவைகளைச் சுலபமாகச் சொல்லி விடலாம். ரோமாபுரி சாம்ராஜ்யத்தையும், பைஸண்டைன் சாம்ராஜ்யத்தையும் சொல்லலாம். அதே போல ஆன்மீகம் என்பது மட்டும் ஒரு தேசத்துக்குப் போதியதாக இருப்பதில்லை. பொருளாதாரமும், ஆன்மீகமும், சமுதாயக் கட்டுப்பாடும் ஒருங்கே தேவையாக இருக்கிறது. ஒரு கோவிலை எழுப்புவதற்கு என்னென்ன வேண்டியதாக உள்ளன? தஞ்சாவூர் பெரிய கோவிலை எழுப்ப ராஜராஜ சோழன் மட்டும் போதாது. ஒரு பெயர் தெரியாத, கைதேர்ந்த சிற்பியும், ஒரு பெயர் மட்டும் தெரிந்த கருவூர்ச் சித்தரும் கூடவே தேவையாக இருக்கிறது. அதே போல மறுமலர்ச்சி என்கிற விஷயத்தில் பலவிதமான சரடுகள், சிந்தனைகள், வாழ்க்கை வழிகள், போக்குகள், முறைகள் முதலியவை பின்னிக் கிடக்கின்றன. இவற்றில் ஒவ்வொன்றையும் பின்னல் வருபவர்கள் பிரித்துத் தரம் காண இயலுமே தவிர, அப்போது வாழ்ந்தவர்களுக்குத் தாங்கள் இந்திய மறுமலர்ச்சிக்கு உதவுகிறோம் என்கிற எண்ணமே இல்லாமல் இருந்திருக்கலாம். உதாரணமாக ராஜா சரபோஜிக்கோ, தியாகப்பிரும்மத்துக்கோ தங்களைச் சுற்றியிருந்தவர்களைத் தவிர தூர இருந்தவர்கள்



பற்றிய நினைப்போ, தேசம் என்பதன் நினைப்போ இருந்திருக்கும் என்று எதிர் பார்க்க முடியாது. தங்கள் தங்கள் குறுகிய பார்வையில் உள்ள நிலப் பரப்பிலோ ஜனக் கும்பலிலோதான் அவர்கள் பார்வை பதிந்திருக்க வேண்டும்.

இதற்கு மாறாக தயானந்த சரஸ்வதியிடமும், ராம்மோகன் ராயிடமும், வேதநாயகம் பிள்ளையிடமும் மற்றும் பலரிடமும் நாம் ஒரு பரவலான தேசிய உணர்வைக் காண முடிகிறது. வேதநாயகம் பிள்ளைக்குத் தமிழ் இன வளத்தில் ஆசையிருந்தது. ஆரிய வர்க்கத்தினர் மேம்பாட்டில் மதமூலமாக ஒரு புது மலர்ச்சியை ஏற்படுத்த முடியும் என்று தயானந்த சரஸ்வதி நம்பினார். இந்து ராஷ்டிரம் ஆக இந்தியா உருப்பெற்று விட்டால் நாட்டைப் பிடித்த துரதிர்ஷ்டங்கள் நீங்கிவிடும் என்று பங்கிம் சந்திரர் எண்ணினார்.

இப்படியெல்லாம் இவர்களைப் பற்றிச் சொல்லும்போது ஒன்றை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். அவர்கள் லட்சியங்கள், சித்தாந்தங்களைச் சொல்லுவதற்காக, அப்படிச் சொல்ல வேண்டியிருக்கிறது. அவர்கள் கொள்கைகள், சித்தாந்தங்கள் எல்லாம் மற்ற கொள்கைகள், சித்தாந்தங்கள் போலவே சிக்கலானவை. ஒரே வாக்கியத்தில் இப்படிச் சொல்லி முடித்துவிட முடியாதவை. ஆனால் அவை எல்லாமே இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளில் இடம் பெறுபவை.

தாதாபாய் நௌரோஜி என்கிற பார்ஸிக்காரர் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கீழ் இந்தியப் பொருளாதாரம் அடைந்திருந்த சீர்கேட்டை இந்தியர்களுக்கும் பிரிட்டிஷாருக்கும் எடுத்துரைக்க முற்பட்டார். ஜம்ஷெட்ஜி டாடா என்கிற இன்னொரு பார்ஸிக்காரர் அந்தச் சீர்கேடுகளை தன்னால் நிவர்த்திக்க முடிந்த அளவில் நிவர்த்திக்க முற்பட்டார். அவருடைய சாதனைகளில் முக்கியமான ஒன்று என்று இந்தியாவில் பருத்தி பட்டு நூல் வளத்தைப் புதிதாக ஏற்படுத்தியது என்று சொல்ல வேண்டும். பருத்தி, பட்டு நூல் இரண்டையும் ஆதாரமாகக் கொண்டு நாடெங்கும் இருந்த தொழில் மையங்களை பிரிட்டிஷ் ஈஸ்ட் இந்தியா கம்பெனியார் அழித்து விட்டனர். இந்தியாவில் உற்பத்தியாகிற பருத்தியை இங்கிலாந்துக்கு ஏற்றுமதி செய்து, மான்செஸ்டர் முதலிய புதிய தொழில் மையங்களிலிருந்து துணிகளாக இறக்குமதி செய்து உபயோகப்படுத்திக் கொள்ள இந்தியர்களைப் பழக்கி இந்தியாவைத் தங்களுக்கு லாபம் தரும் சந்தையாக்கிக் களித்தனர். புராதன இந்தியத் தொழில் முறைகள் நவீன ஆங்கிலத் தொழில் முறைகளுடன் போட்டியிட்டு வெல்ல முடியாது என்று இங்கிலாந்துக்குப் பருத்தி அனுப்பும் வியாபாரத்தில் ஈடுபட்டிருந்த டாடாவுக்கு நன்றாகவே தெரிந்தது. அமெரிக்காவில் உள்நாட்டு யுத்தம் ஆரம்பித்தபோது அமெரிக்கப் பருத்தி இங்கிலாந்துக்கு வருவது பெரு




"இட்லி சூடு ஆறிப் போவதற்குள் இதை பெங்களூரில் உள்ள என் அத்தானுக்கு அனுப்பணும்."

"சுதர்ஸன்"

மளவு நின்றுவிடவே இங்கிலாந்தின் எந்திரங்களுக்கு இந்தியப் பருத்தி மிகவும் தேவையாக இருந்தது. அந்த நாலு வருஷங்களில் (1861-65) ஏற்றுமதியான இந்தியப் பருத்தியின் மதிப்பு பதினேரு கோடி பவுன்கள் என்று கணக்கெடுத்துச் சொல்லுகிறுர்கள். இந்த வளமும் வியாபாரமும் நீடிக்கும் என்று எண்ணிய பம்பாய் பெரும் வியாபாரிகள் ஏமாற்றத்துக்குள்ளானுர்கள். பருத்தியை மையமாகக் கொண்ட தொழில்கள் இந்தியாவில் வளர்வதற்கு இது பெரும் உந்து சக்தியாக இருந்தது. அதைப் பயன்படுத்திக் கொள்ள அந்தக் காலக் கட்டத்தில் நல்லவேளையாக ஒரு டாடா இருந்ததை விசேஷமாகச் சொல்ல வேண்டும். சுதேசி துணிகளை இந்தியர்கள் கட்ட வேண்டும் என்கிற இயக்கம் சிறிய அளவிலேனும் படித்தவர்களிடையே 1885லேயே உண்டாகிவிட்டது. இது நாளடைவில் பெருகி, தொழில் வளத்திலும் பொருளாதாரத்திலும் நாட்டுக்கு நன்மை பயக்க இருந்த ஒரு இயக்கம். இந்திய சர்க்கார் தஸ்தாவேஜ்களில் ஜம்ஷெட்ஜி டாடா நேரடியாக அரசியல் இயக்கங்களில் பங்கு கொள்ளாவிட்டாலும், சுதேசி இயக்கத்தை ஆதரிப்பவர். அவரை முழுவதும் நம்பி விடக்கூடாது என்று அதிகாரிகள் குறிப்பு எழுதியிருப்பதாக டாடாவின் ஜீவிய சரித்திரத்தை எழுதியவர்கள் குறிப்பிடுகிறுர்கள்.

தன் தகப்பனுரின் பிரதிநிதியாக சீனுவிலும் ஹாங்காங்கிலும் வியாபாரத்தில் இளம் வயதில் ஈடுபட்டிருந்த ஜம்ஷெட்ஜி டாடா அங்கு பட்டுப் பூச்சிகள் வளர்ப்பது பற்றியும் பட்டு நூல் எடுப்பதைப் பற்றியும் அறிந்து கொண்டு வந்து நவீனப் பட்டு உற்பத்தித் தொழிலுக்கு ஏற்பாடு செய்தார் என்றும் தெரிகிறது.

மேற்கத்திய நாடுகளில், முக்கியமாக இங்கிலாந்தில் நடந்த தொழிலாளி முதலாளி உறவு சோதனைகளும் போட்டிகளும் ஜான் ப்ரைட், ரிச்சர்டு காப்டன் முதலிய பல தலைவர்களை



"நான் என் மனைவிக்குப் பயப்படுவேன். நீங்க?"
"நான் ஏன் உங்க மனைவிக்குப் பயப்படணும்!"
கடுவை கோபால்சாமி.

ஆங்கிலம் அறிந்த இந்தியர்களுக்கு அறிமுகப்படுத்தின. மார்க்ஸ் என்கிற, பின்னர் தொழிலாளரின் தனித் தலைவராகக் கருதப்பட்ட சிந்தனையாளர் போல் அல்லாமல், இவர்கள் எப்படி எப்போது இந்தியா கம்யூனிஸ்ட் தேசம் ஆகும் என்று கருதாமல், இந்தியாவின் நண்பர்களாக இந்தியா முன்னேறி தன்மானம் உள்ள மனிதர்களாக வாழ வேண்டும் என்று யோசித்துச் சொல்ல விரும்பினுர்கள்; உதவினுர்கள். நல்ல கல்வி அறிவு உள்ள டாடாவுக்கு இவர்களின் சிந்தனைகள் தன் தொழிற்சாலைகளை நடத்த மிகவும் உபயோகமாய் இருந்தன. டாடா உயிருடன் இருந்த வரையில் அவர் தொழிற்சாலைகளில் தொழிலாளி முதலாளி உறவு மிகவும் சுமுகமாக இருந்தது என்று சொன்னுர்கள். இது சற்றே மிகைப்படுத்தப்பட்ட அபிப்பிராயமாக இருக்கலாம். ஆனுலும் எந்தத் தொழிலாளியும் டாடாவை எக்காரணத்துக்காக சந்திக்க வேண்டும் என்று விரும்பினுலும் சந்திக்க முடியாமல் போனதில்லை என்று சொல்லுகிறுர்கள்.

டாடா சம்பந்தப்பட்ட பருத்தி மற்றும் பல தொழிற்சாலைகளிலும் யந்திரங்கள் எல்லாம் இரும்பினுல் ஆனவை. இங்கிலாந்திலிருந்து வந்தவை. இங்கிலாந்தில் தொழிற் புரட்சிக்குப்பின் ஏற்

பட்ட வளத்தில் ஒரு பகுதியாவது அவர்களுடைய சாம்ராஜ்யத்தினுல், பொருளாதாரச் சுரண்டலால் ஏற்பட்டது என்று சொல்லலாம். ஆனுல் நிச்சயமாக ஒரு பகுதி அவர்களுடைய புதிய புதிய கண்டுபிடிப்புகளாலும், தொழில் வளத்துக்குத் தேவையான யந்திர சாதனங்களாலும் ஏற்பட்டது. பரந்த பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் ஒரு பகுதியாக தந்தி, தபால், ரெயில்வேக்கள் இந்தியாவுக்கும் வந்துவிட்டன. இந்திய மக்களை அடக்கி ஆளுவதற்குத்தான் பெருமளவு உபயோகப்பட்டது என்றுலும், பஞ்சம் வெள்ளம் என்று வந்தபோது, சிறிதளவு சாதாரண மக்களுக்கும் உபயோகப்பட்டது. ஆங்கிலக் கல்வி என்பது பெருமளவுக்கு வேகமாகப் பரவவில்லை என்றுலும் பரவிய வரையில் ஒரு புதிய சிந்தனை வேகத்தையும் ஆங்கிலேயர்களின் ஸ்தாபனங்களை அறிவதற்கு ஒரு தாகத்தையும் அவர்கள் அனுபவிக்கிற சுதந்தரத்தைத் தாங்களும் அனுபவிக்க வேண்டும் என்கிற நினைப்பையும் இந்தியர்களிடையே ஏற்படுத்தின. ஆங்கிலேயர்கள் உயர்வு, கறுப்பர்கள் தாழ்வு, வெள்ளையர்கள் ஆளப் பிறந்தவர்கள், பழுப்பு நிற வர்க்கத்தினர் அடிமையாகப் பிறந்தவர்கள் என்கிற ஒரு ஸ்லோகத்தை குறுகிய நோக்கமும் பார்வையும் கொண்ட ஒரு அதிகார வர்க்கம் ஸ்தாபிக்க முயன்றது. இது நியாயம் அல்ல, இந்தியர்கள் எந்தக் காரியத்திலும் யாருக்கும் பின் தங்கியவர்கள் அல்ல என்று பல ஆங்கிலேயர்களுக்கு எடுத்துச் சொன்னவர்கள் சிலர். இப்படி ஓயாமல் எடுத்துச் சொன்னவர்களில் முக்கியமானவர்கள் என்று இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளுக்கு விதை ஊன்றியவர்கள் எல்லோரையுமே சொல்ல வேண்டும். இங்கிலாந்தில் வளர்ந்து கொண்டிருந்த புதுத் துறையான வியாபார, தொழில், கலைகளில்கூட இந்தியர்கள் பின்தங்கியவர்கள் அல்ல என்று டாடா செய்து காட்டினர். இது மேலும் சாத்தியமாவதற்காக மின் உற்பத்தித் துறை மற்றும் இரும்பு எஃகு உற்பத்தித் துறை இரண்டிலும் கவனம் செலுத்தினர்; சாதனை காட்ட முடிந்தது அவரால்.

தொழில் வளம் என்றெல்லாம் இப்போது நாம் சுலபமாகப் பேசமுடிகிறது. ஆனுல், அதற்கு அடிப்படையான தொழில் விஞ்ஞானமும், பொருளாதார நினைப்பும் அரசியல் ஆதரவும் பொதுஜன ஆதரவும் எதுவும் இல்லாத பத்தொன்பதாம் நூற்ருண்டின் பிற்பகுதியில் ஜம்ஷெட்ஜி டாடாவின் அற்புதமான சாதனைகள் மகத்தானவை என்று தான் சொல்ல வேண்டும். இறக்கும் தறுவாயிலும் நாட்டு நலனில் கண்ணுக தாம் வகுத்த வழிகளிலே தான் நிர்மாணித்த ஸ்தாபனங்களும் தொழில்களும் இயங்க வேண்டும் என்று தெரிவித்தாராம். டாடா பெயருக்குக் களங்கம் ஏற்படாமல் பார்த்துக் கொள்ளுங்கள் என்று அவர் கடைசி மூச்சுடன் சொல்லிவிட்டு, இறந்ததாகத் தெரிகிறது. ●




"உரிய நேரத்துலே தபாலை பட்டுவாடா செய்யாத பணத்தை பத்து நாள் பொறுத்துத் திருப்பித் தரியே! அந்த பத்து நாட்களுக்கான வட்டி பணம் எங்கே?"

சுதர்ஸன்

## புதிய இருபதம்சத் திட்டம்

1. கிராமப்புற வறுமையை நீக்குதல்
2. மானுவாரி விவசாயப் பாதுகாப்பு
3. பாசன நீரை முறைப்படுத்தல்
4. விளைச்சலைப் பெருக்குதல்
5. நிலச் சீர்திருத்தங்களை அமல் செய்தல்
6. கிராமத் தொழிலாளருக்கு விசேஷ திட்டங்கள்
7. சுத்தமான குடிநீர் வழங்குதல்
8. அனைவருக்கும் மருத்துவ வசதி
9. குடும்பத்திற்கு இரண்டே குழந்தைகள்
10. கல்வித் திட்டத்தை விரிவுபடுத்துதல்
11. தாழ்த்தப்பட்டோருக்கு நியாயம்
12. பெண்களுக்கு சம உரிமை
13. இளைஞர்களுக்குப் புதிய வாய்ப்புகள்
14. வீட்டு வசதி
15. குடிசைப் பகுதிகளைச் சீர் செய்தல்
16. வனப்பாதுகாப்புக்குப் புதிய திட்டம்
17. சுற்றுப்புறச் சூழ்நிலையைப் பாதுகாத்தல்
18. உபயோகிப்போர் நலனைக் காத்தல்
19. கிராமங்களுக்கு மின் வசதி
20. பயனுள்ள நிர்வாகம்.

புதிய இருபதம்சத் திட்டத்தின் கடைசி அம்சம்-'பயனுள்ள நிர்வாகம்' என்பது. அரசு நிர்வாகத்தின் நடைமுறை விதிகளை எளிதாக்க வேண்டும். அதன் மூலம் மக்களின் பிரச்னைகள் உடனடியாகத் தீர்க்கப்பட வேண்டும் என்பதெல்லாம் இதன் நோக்கங்கள். நல்ல அம்சங்களைத் தன்னுள் கொண்டுள்ள புதிய இருபதம்சத்திட்டம் நடைமுறையில் வெற்றி காண்பதும் 'பயனுள்ள நிர்வாகத்தை'ப் பொறுத்தே இருக்கிறது. ●

*இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனையாளர்கள்-10*

# கோபாலகிருஷ்ண பாரதியார்

## க.நா.சுப்ரமண்யம்

ஆங்கிலக் கல்வி இந்தியா பூராவும்ஒரே சீராக பத்தொன்பதாம் நூற்றாண்டின் மத்திய வருஷங்களில் பரவ ஆரம்பித்தது. இதன் பயன்களை இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளின் ஒரு பகுதியாக நாம் இன்னமும் அனுபவித்துக் கொண்டு இருக்கிறோம். இதன் தாக்கத்திலும் பயன்களிலும் கெட்ட அம்சங்களும் உண்டு. நல்ல அம்சங்களும் உண்டு. கெட்டதும் நல்லதும் கலந்த அம்சங்களும் உண்டு.

முந்திய நூற்றாண்டிலேயே பலவிதமான மாறுதல்களின் சின்னங்கள் காணக்கிடந்தன. ஆங்கிலேயர்களின் வியாபாரப் பழக்க வழக்கங்களுக்குத் தயார் செய்யப்பட்டு இந்திய மக்கள் பொருளாதாரத்தின் அசுரப் பிடிப்பை புதிதாக உணரத் தொடங்கினார்கள். இதற்கு அர்த்தம் முன்னால் பொருளாதாரப் பிடிப்பு இல்லை என்பதில்லை. முக்கியமான பல விஷயங்களையுங்கூட பொருளாதார நோக்கில் பார்ப்பது என்கிற வழக்கம் அதிகமாகிக் கொண்டிருந்தது. கல்வி, கலை, கலாச்சாரம் உள்ளூர்ப் பிரயாணங்கள், உறவுமுறை கொண்டாடுவது எல்லாமே ஒரு புது நோக்குடன் செயல்பட ஆரம்பித்தன. இரு வேறுபட்ட பண்பாடுகளின் மோதல் மக்கள் மனங்களில் ஒரு குழப்பத்தை ஏற்படுத்துவதாக இருந்தது. புது மதிப்பீடுகள் தோன்றத் தொடங்கியது போல இருந்தாலும் முழுவதும் ஆட்சி செலுத்தத் தொடங்கவில்லை. மதத்தின் பிடி தளர்ந்து கொண்டிருந்தது. அன்றாடப் பழக்க வழக்கங்களின் வேகம் இலக்கில்லாது வளர்ந்து கொண்டிருந்தது.

இந்திய மறுமலர்ச்சியின் முழு வேகமும் கிறிஸ்தவப் பாதிரிமார்கள் பதினாறு பதினேழாம் நூற்றாண்டுகளில் இந்தியப் பழக்க வழக்கங்கள் மத நம்பிக்கைகள் விக்ரக ஆராதனை இவற்றைக் கேலி செய்ததுடன் ஆரம்பித்தது என்று ஒருவிதத்தில் சொல்லலாம். இவர்களில் பலரும் தங்கள் கிறிஸ்தவக் காரியங்களுக்காகத்தான் இந்திய சாஸ்திரங்களையும், தத்துவங்களையும் கற்றுக் கொண்டார்கள் என்றாலும் அவர்களுடைய அறிவு முயற்சிகள் இந்திய அறிவாளிகள் சிலருக்கேனும் ஒரு புதுவிதப் பார்வையை ஏற்படுத்த வழி செய்து தந்தன. இந்திய மறுமலர்ச்சியில் இந்த அந்நியர்களின்–பங்கு குறைவாகவோ அதிகமாகவோ மதிப்பிட முடியாத ஒன்று. இவர்களுடன்தான் இந்திய மறுமலர்ச்சி ஆரம்பிக்கிறது என்று சொல்ல வேண்டும்.

தேசிய மொழி இலக்கியங்களில் வசன நடையின் பிரதானத்தை நமக்கு உணர்த்தியவர்கள் இந்தக் கிறிஸ்தவ மத போதகர்கள்தான். அதேபோல இந்திய இசையில் ஒரு புது மலர்ச்சியை ஏற்படுத்துவதற்கும் இவர்கள் காரணமாக இருந்திருக்கலாம் என்றுதான் தோன்றுகிறது. பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதி ஆண்டுகளில் சங்கீத மும்மூர்த்திகள் என்று சொல்லப்படுபவர்கள் தோன்றி இசையை வளப்படுத்தியதில் வாழ்க்கையில் மதப்பிடிப்புகள் தளராது இருக்கவும் விக்ரக ஆராதனையை வலுவாக வற்புறுத்துவதுமே முக்

கியமாகச் செயல்பட்டது என்று சொல்ல இடம் உண்டு. மக்கள் மொழியாக இலக்கியத்தை விட இசைக்கு நேரடித் தாக்கம் அதிகம் உண்டு என்பதில் சந்தேகம் இல்லை. வழக்கிலிருந்த எல்லா மொழிகளிலுமே இசை பரவலாயிற்று. இசை, பக்தி, தத்துவம் என்ற மூன்றின் வெளியீடாக தமிழில் செயல்பட்டவர்கள் என்று பதினெட்டாம் நூற்றுண்டில் தாயுமானவரையும் பத்தொன்பதாம் நூற்றுண்டில் ஜோதி ராமலிங்கத்தையும் சொல்லலாம். தாயுமானவர் பதினெட்டாம் நூற்றுண்டின் மத்தியில் வாழ்ந்தவர்.

வீரமா முனிவருடைய கடைசிக் காலத்துக்குச் சம காலத்தவர். ஜோதி ராமலிங்கம் 1822 முதல் 1874 வரையில் உயிர் வாழ்ந்தவர். இன்னொரு இசைத் தத்துவ மேதை கோபால கிருஷ்ண பாரதியார் என்பவர் பத்தொன்பதாம் நூற்றுண்டின் ஆரம்ப வருஷங்கள் முதல் தொண்ணூற்றிரண்டு வருஷங்கள் வாழ்ந்ததாகத் தெரிகிறது.

இவர்கள் எல்லோரும் புரட்சி செய்ய வேண்டும் என்று எண்ணியோ, இந்திய மறுமலர்ச்சியை சிருஷ்டிக்க வேண்டும் என்று எண்ணியோ செயல்பட்டவர்கள் அல்ல என்பது வெளிப்படை. சமுதாயச் சீர்திருத்தம், அரசியல் வேகம், எதிர்கால நோக்கு என்றெல்லாம் இவர்களுக்கு இருந்ததாகச் சொல்ல முடியாது. தயானந்த சரஸ்வதிக்கு இருந்தது போல ராமலிங்கருக்கு மதச் சீர்திருத்த நோக்கம் இருந்ததாகவே தெரிகிறது. ஆனால் அவர்களை எல்லாம் இந்திய மறுமலர்ச்சிக்காரர்களாக நாம் கருதும்போது அவர்கள் பிரக்ஞையில் தட்டாத ஒரு பெரிய இலக்கை அவர்கள் மேல் ஏற்றிவைத்துக் கணக்குப் போடுகிறோம். இது இன்றைய அறிவார்த்தமாக நமது சௌரியத்துக்காகத்தான் என்பது நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் நம் கணிப்பு பிசகிவிடும்.

கோபாலகிருஷ்ண பாரதியாரின் இந்திய மறுமலர்ச்சிப் பங்கு என்ன



"உன் ரிசல்ட் என்னுச்சு?"
லாட்டரி ஏஜண்ட் மகன்: "ரெண்டு நம்பர்ல போயிருச்சு?"

-பி.மோகன்

என்று யோசிக்கும்போது ஒரு விஷயம் தெளிவாகத் தெரிகிறது. அவரைப் பற்றிய வரையில் மாயூரம், திருவையாறு, திருவிடைமருதூர், நாகப்பட்டிணம், காரைக்கால், சிதம்பரம் என்கிற மத்திய தமிழ்நாட்டுப் பிரதேசங்களுக்கு அப்பால் அவர் போனதே இல்லையோ என்று கேட்கத் தோன்றுகிறது. யோகம், வேதாந்தம் என்று சமஸ்கிருதத்தில் ஏதோ கொஞ்சம் அறிவு உள்ளவர்தான் என்றாலும் அவர் இசை பாடியதெல்லாம் முழுக்க முழுக்கத் தமிழில்தான். அதனால் அவர் குரல் இந்தியா பூராவும் எட்டியிருக்க வாய்ப்பே இல்லை என்றும் சொல்லலாம். இருந்தாலும் இந்திய மறுமலர்ச்சி மாளிகையைத் தாங்கும் பல தூண்களில் முக்கியமான ஒன்றாக அவரைக் கருதுவதற்கு இரண்டு காரணங்கள் சொல்லலாம்.

(ஒன்று) க்ஷீணித்துக் கொண்டிருந்த விக்ரக ஆராதனையைத் தூக்கி நிறுத்தி மீண்டும் மக்களிடையே செயல்படுகிற வகையில் அவர் சிதம்பரம் கோயிலையும் நடராஜ மூர்த்தியையும் பாடியது.

(இரண்டு) அவர் நாடக கதாகாலக்ஷேபத்தின் முக்கிய நாயகன். பிற்காலத்தில், அதாவது இந்த நூற்றுண்டில், விசுவரூபம் எடுக்க இருந்த தாழ்த்தப்பட்ட வகுப்புக்குரிய ஹரிஜன நாயகன்.

இந்த இரண்டு விஷயங்களையுமே காலத்தின் பிரதிநிதியாக, ஆனால் ஒரு தனிக்கலைஞனின் மேதையுடன் கையாண்டு இருக்கிறார் அவர் என்பது கவனிக்க வேண்டிய விஷயம்.

சிதம்பரம் என்கிற இடமும் நடராஜா என்கிற மூர்த்தியும் சற்றேறக்குறைய ஒரு ஆயிரத்தி இருநூறு வருஷங்களுக்குக் குறையாமல் இந்திய இலக்கியத்தில் ஆட்சி செலுத்தி வந்திருக்கின்றன. மாணிக்கவாசகர் முதல் ஆனந்த குமாரசாமி வரையில், திருமூலர் முதல் ஜோதி ராமலிங்கம் வரையில் இந்தத் தத்துவத்தைப் பற்றி எழுதியிருக்கிறார்கள். இந்திய ஆன்மீக சரித்திரத்தில் பகவத் கீதைக்கு உள்ள இடம் சற்றும் குறையாத அளவு நடராஜாவுக்கும் உண்டு என்று சொன்னால் அது மிகைப்படுத்திச் சொல்லுவது அல்ல. நியாயமான கூற்று என்றே சொல்ல வேண்டும். நடராஜாவைப் பற்றிய வரையில் இன்னொரு விசேஷமும் உண்டு. பரதம் என்ற ஒரு கலையின் தலைவராக பரத நாட்டியத்தின் ஆரம்பமாக நடராஜாவைக் கருதுவது ஒரு சமீப காலத்திய மரபு என்று சொல்ல முடியாது. அந்த மரபு எட்டாவது நூற்றாண்டிலிருந்தேனும் இருந்து வந்திருக்கிறது என்பது நிச்சயமாகத் தெரிகிறது. மதமாகவும், கலையாகவும் இதனாலெல்லாம் சிதம்பரத்துக்கும் நடராஜாவுக்கும் ஒரு இந்திய முக்கியத்துவம் ஏற்பட்டிருப்பதாகவே கருதமுடியும்.

தீண்டத் தகாதவர்கள், தாழ்த்தப்பட்ட வர்க்கத்தினர் (பின்னர் அவர்களை மகாத்மா காந்தி கடவுளின் மக்கள் - ஹரிஜனர் என்று அழைக்க இருந்தார்) இந்திய மக்களிடையே ஒரு ஆயிரம் ஆண்டுகளுக்கும் அதிகமாக நடமாடிக்கொண்டு வந்திருக்கின்றனர். புத்தர், சமணத் தீர்த்தங்கரர்கள் காலத்திலேகூட இவர்கள் இருந்திருப்பதாகத் தெரிகிறது. ஆதிசங்கரர் கங்கையில் ஸ்நானம் செய்துவிட்டு வரும்போது காசியில் ஒரு தீண்டத்தகாதவர் அவரை அணுகி விட்டதாகவும் அவரை அவர் சிஷ்யர்கள் "தூரப்போ" என்று விரட்டியதாகவும், "யாரை தூரப் போகச் சொல்கிறாய்? என் உடலையா, என் ஆன்மாவையா?" என்று அவர் கேட்டதாகவும், சங்கராச்சாரியார் உடனே தன் சிஷ்யர்களைத் திருத்தியதாகவும் கதை சொல்லுகிறார்கள்.

ஹிந்தி பேசும் பிராந்தியங்களிலும் மகாராஷ்டிரத்திலும், வேறு பல பிராந்தியங்களிலும் பல தாழ்ந்த குலத்து பக்தர்கள் ஆன்மீக வழியில் ஈடுபட்டுக் கடவுளை அடையும் பக்தி மார்க்கத்தை மக்களுக்கு எடுத்து ஓதியிருப்பதாக ஸ்ரீமத் பக்தவிஜயம், ரவிதாஸ் சரித்திரம் முதலியவற்றிலிருந்து நமக்குத் தெரிகிறது. இவர்களுக்கெல்லாம் சின்னமாகவும் தமிழ் நந்தனைக் கருதமுடியும். அந்த அளவுக்கு சேக்கிழாரின் பெரிய புராணத்தில் உருவமற்ற உருவமாக லேசாக இருந்த நந்தனாரை நம்மோடு நடமாடுகிற மனிதனாக, சந்தேகத்துக்கு இடமில்லாமல் கடவுளை எட்டிய பக்தனாக, தனது மேதையினால் உருவாக்கிக் காட்டுகிறார் கோபாலகிருஷ்ண பாரதியார்.

இசையாகவும் நாடகமாகவும் உருவாக்கி நந்தன் சரித்திரத்தை நமக்கு பாரதியார் அளித்ததையே இலக்கிய மறுமலர்ச்சியில் ஒரு மைல் கல்லாகக் கருத வேண்டும். தமிழில் ஜனரஞ்சகமாக இருப்பது அவ்வளவாக இலக்கியத் தரமாக இருப்பதில்லை என்பது பல காலமாகவே செயல்பட்டு வருகிற விஷயம்தான். அந்த விதிக்கு கோபாலகிருஷ்ண பாரதியாரின் நந்தன் சரித்திரம் ஒரு அரிய விலக்கு. நந்தன் சரித்திரத்தைக் கேட்ட தமிழும் இசையும் அறிந்த ஒரு ஃபிரன்ச் காரைக்கால் அதிகாரி 1861-ல் அதை இரண்டணா விலையில் நூலாக பிரசுரித்ததாகவும், ஒரே ஆண்டில் முதற்பதிப்பு ஐம்பதினாயிரம் பிரதிகள் விற்றுப் போனதினால் இரண்டாம் பதிப்புக்கு அவசியம் ஏற்பட்டதாகவும் தெரிகிறது. 1856-ல் இப்ராஹிம் ஷா ராவுத்தர் என்பவர் எழுதிய விக்ரமாதித்தன் கதையும், 1862-ல் வெளிவந்த நந்தன் சரித்திரமும் புதுசாக இந்தியாவில் செயல்பட்டுக்

கொண்டிருந்த அச்சு யந்திர சாதனத்தின் உபயோகத்தை எடுத்துக் காட்ட உபயோகப்பட்டன என்று சொல்லலாம். புலவர்கள் போற்றும் சுந்தரம் பிள்ளையின் மனோன்மணீயம் நாடகத்தைவிட நாடகப் பாங்கிலும் மனித மன இயக்க அறிவு மேன்மையிலும் நந்தனார் சரித்திரம் மேன்மையுற்றுக் குறிப்பிட்டுச் சொல்லக்கூடிய ஒரு நூலாக இருக்கிறது.

நந்தனார் சரித்திரத்தின் இலக்கியத் தாக்கமும் பிற்காலத்தில் மிகவும் தீவிரமாகவே செயல்பட்டது என்று சொல்ல வேணடும். தன்னுடைய தேசிய கீதங்களில் பலவற்றை சுப்பிரமணிய பாரதியார் நந்தனார் சரித்திரத்தைப் பின்பற்றியே எழுதினார். இப்படிப் பின்பற்றி எழுதியது தேசியக் கவிக்கு கோபால கிருஷ்ண பாரதியாரிடம் இருந்த ஈடுபாட்டையே காட்டுகிறது. இன்னும் நமக்கு நெருங்கிய காலத்தில் என்.எஸ்.கிருஷ்ணன் நடராஜாவுக்குப் பதில் கல்வியையும், சிதம்பரம் கோவிலுக்குப் பதில் டவுன் பள்ளிக் கூடத்தையும் வைத்து எழுதிய கிந்தனார் நந்தனாருடைய இலக்கியத் தாக்கத்தைக் காட்டுவதாகத் தோன்றுகிறது. கிந்தனாரின் பாட்டுகளுக்கு உடுமலை நாராயண கவி பொறுப்பு என்கிறார்கள். அது எனக்கு நிச்சயமாகத் தெரியவில்லை. • ஆனால் அந்த விஷயம் என்.எஸ்.கிருஷ்ணனின் மேதையில் தோன்றியது.

கோபால கிருஷ்ண பாரதியாரின் பத்தொன்பதாம் நூற்றாண்டின் வாழ்க்கையைக் கவனிக்கும்போது அவர் அந்த நூற்றாண்டின் பெரும் பகுதியில் வாழ்ந்தவர் என்பதால் அந்த வாழ்க்கையின் வளம் தெளிவாகவே தெரிகிறது. கலை வளம், இலக்கிய வளம், அப்படி மட்டமாக இருந்ததாகச் சொல்ல முடியாது. பொருளாதார வளம் அவ்வளவாக இல்லாமல் இருந்திருக்கலாம். அதற்கு ஈடுகட்ட பக்திப் பரவசமும், தர்ம நியாய நினைப்பும் இருந்திருப்பது நன்றாகத் தெரிகிறது. இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளை முழு



அமிதாப் ஒரு படத்திற்கு வாங்கும் ஊதியம் 60 லட்சம் ரூபாய். ஒப்பந்தத்தில் 20 லட்சம் மட்டுமே குறிப்பிடப்படுகிறது. 'ரேட்' விஷயத்தில் அமிதாபின் செயலாளராக இருக்கும் அவரது சகோதரர் பண்டி பச்சன் ரொம்ப 'கறார்' என்கிறார்கள். அமிதாபுக்குப் பெயர் வாங்கித் தந்த யாஷ்சோப்ரா, பிரகாஷ் மெஹ்ரா ஆகியவர்களிடம் கூட தாட்சண்யம் காட்டுவதில்லை அவர்.

திலீப் குமார், ஜாக்கி ஷெராஃப், அனில்கபூர், நஸ்ருதீன் ஷா, ஸ்ரீ தேவி என்று ஒரு நட்சத்திரக் குவியலே இருக்கும் படம் 'கர்மா'! போதாக்குறைக்கு இது ஒரு 70 எம்.எம்.படம் வேறு!

இந்திப் படங்கள் ஓடும் பகுதிகளை ஐந்து ஏரியாக்களாகப் பிரித்து விநியோகிக்கிறார்கள். 'கர்மா' ஒரு ஏரியாவுக்கு 70 லட்சம் வீதம் விலை போனது. ஆனால் 'ஷா என் ஷா' என்ற படம் ஒரு ஏரியாவுக்கு ஒரு கோடி ரூபாய் வீதம் விலை போயிருக்கிறது. இத்தனைக்கும் அதில் நடித்திருக்கும் 'பெரிய' நடிகர் அமிதாப் மட்டுமே!

பாக்கியராஜ் இயக்கி, அமிதாப் நடித்த 'ஆக்ரி ராஸ்தா'வுக்கு ஆன மொத்த செலவு 3 கோடி ரூபாய்தான்! 'பிஸினஸ்' ஆனதோ ரூ. 8.5 கோடிக்கு. இது போன்ற வெற்றிகள் தான் அமிதாப் ரேட்டை ஏற்றிவிடுகின்றன.

—குமாரி

மையாக்க நமக்கு இன்னும் பயனுள்ளு வையாக தியாகப் பிரும்மம், கோபால கிருஷ்ண பாரதியார், வேதநாயகம் பிள்ளை போன்றவர்களுடைய சரித்திரங்கள் முழு அளவில் வரவேண்டும். தமிழில் மட்டும் அல்ல இந்தியாவிலுள்ள எல்லா மொழிப் பிரதேசங்களிலும் கூட ஏதோ ஒரு அளவில் நூற்றுண்டு விழா கொண்டாடுவதுடன் நிறுத்தி விடுகிருர்கள். பூரணமாக வாழ்க்கை வரலாறுகள் கிடைப்பதில்லே.

கோபால கிருஷ்ண பாரதியாரைப் பற்றி உ.வே.சாமிநாத அய்யர் எழுதிய ஒரு நூல் கிடைக்கிறது. கோபால கிருஷ்ண பாரதியார் பார்ப்பதற்கு அவ்வளவாக நன்ருக இருக்க மாட்டார். தெருத் தெருவாக, தியாகப் பிரும்மத்தைப் போல, உஞ்சவிருத்தி எடுத்தும் சங்கீத வினிகைகள் செய்து கொண்டும் வாழ்ந்தார். கல்யாணம் செய்து கொள்ளவில்லே. தியாகப் பிரும்மத்திடம் இல்லாத ஒரு குணம் அவருக்கு இருந்ததாகத் தெரிகிறது. அதாவது இன்று (Inferiority Complex) தாழ்வு மனப்பான்மை என்று சொல்வது அவருக்கு நிறைய இருந்ததாகத் தெரிகிறது. அது காரணமாகவே கூட அவர் தாழ்த்தப்பட்டவனுகக் கருதப்பட்ட நந்தனேப் பற்றி எழுதியிருக்கலாம். இது சிவ பக்தி, சிதம்பர பக்தி, வேதாந்த அறிவு எல்லாவற்றிற்கும் பின்னுல் அதிகமாக வெளிப்படாத ஒரு காரணமாக அமைந்திருக்கலாம்.

தாழ்வு மனப்பான்மையோ, இல்லேயோ, அவருக்கு இசை உலகிலும் இலக்கிய உலகிலும் நண்பர்கள் எராளமாக இருந்திருக்கிருர்கள் என்பதும் தெரிகிறது. மகா வித்வான் மீனுட்சி சுந்தரம் பிள்ளே, முன்சிப் வேதநாயகம் பிள்ளே சிதம்பரத்தில் இரண்டொரு தீட்சதர்கள், நாகப்பட்டினத்தில் பல வியாபாரிகள், காரைக்காலில் சில அதிகாரிகள் என்று அவருக்கு நண்பர்கள் வட்டம் பெரிதாக இருந்திருக்கிறது. இந்தக் காலத்தில் சுப்ரமண்ய பாரதியாரின் வறுமை என்று சொல்வது போல வறுமையால் வாடினுர் என்றும் அவரைச் சொல்ல முடியாது. அந்தக் காலத்துச் சமுதாயப் பண்பாடு அவரைப் போன்ற கலேஞர்களே வறுமையில் வாடவிட்டு வேடிக்கை பார்க்க இடம் தரவில்லே. உண்மையில் அவர் கடைசிக் காலத்தில் தன் கையில் சேர்ந்திருந்த மூவாயிரத்து ஐநூறு ரூபாய்களில் ஒரு பகுதியைத் தனக்கென்று வைத்துக் கொண்டு பெரும்பகுதியையும் திருவாவடுதுறை ஆதீனத்திடம் ஒப்படைத்து விட்டு வாரத்துக்கு ஒரு முறை குறிப்பிட்ட ஒரு கோயில் மூலம் யாத்ரிகர்களுக்குச் சாப்பாடு போட ஏற்பாடு செய்துள்ளார் என்று சாமிநாத அய்யர் எழுதியிருக்கிருர்.

உணவு எல்லோருக்கும் சாப்பிடக் கிடைத்திடல் வேண்டும் என்கிற சித்தாந்தத்தின் முக்கியத்துவத்தை காரல் மார்க்ஸ் வற்புறுத்துவதற்கு முன் வேறு யாரும் வற்புறுத்தவில்லே என்று நாம் நினேக்கிருேம். இந்திய சமுதாயச் சிந்தனேகளில் ஒரு முக்கிய சரடாக ஜகத்தில் எல்லோருக்கும் உணவு கிடைப்பது என்பது முக்கியமான விஷயம் என்று வற்புறுத்தப்பட்டு வந்திருக்கிறது. இசை மேதைகளான தியாகப் பிரும்மமும், கோபால கிருஷ்ண பாரதியாரும் இந்தச் சிந்தனேயை ஏற்றுக்கொண்டு செயல்பட்டிருக்கிருர்கள் என்பதை நாம் அவர்கள் ஜீவியத்தைப் பற்றிப் படிக்கும்போது காண்கிருேம். கோபால கிருஷ்ண பாரதியாருடைய ஒரே நரஸ்துதியான பாட்டு வேதநாயகம் பிள்ளே பற்றி என்பது பற்றியும், தாது வருஷப் பஞ்சத்தில் கஞ்சித் தொட்டிகள் வைத்து வேத நாயகம் பிள்ளே மக்களுக்கு உணவு அளித்தது பற்றி நீயே புருஷ மேரு என்று அவரைப் பாரதியார் பாராட்டியதாகவும் சாமிநாத அய்யர் எழுதுகிருர். டால்ஸ்டாய் ரஷ்யாவில் ஒரு பகுதியில் பஞ்சம் வந்தபோது மக்களுக்கு உணவளிக்கத் தான் செய்த முயற்சிகள் பற்றித் தன் அனுபவங்களே எழுதியிருக்கிருர். அந்த மாதிரிக் குறிப்புகள் இந்தியாவில் கிடைப்பதில்லே என்பது நமது துரதிர்ஷ்டம் தான். ●

ரில் வெற்றிகரமாக ஓடிய படத்தின் கதையே. சிவகுமார் தன்னுடைய ரேட்டை உயர்த்த ஆரம்பித்தது இந்தப் படத்திலிருந்துதான். அவருக்கு நான்கு லட்சமும், நதியாவுக்கு மூன்று லட்சமும் கொடுத்திருக்கிறார்கள். செந்திலுக்கு நாள் ஒன்று பத்தாயிரம் ரூபாய் கொடுத்து, இருபத்தாறு லட்சம் ரூபாய் செலவில் இப்படத்தை எடுத்து முடித்திருக்கிறார்கள்.

இதுவரை ரங்கராஜனுக்கு பெரிய அளவில் படங்கள் எதுவும் அமையவில்லை என்பதோடு, வேற்று மொழிப் படங்களை தமிழில் பண்ணும்போது கூட அவரால் நல்ல பெயரை சம்பாதிக்க முடிவதில்லை!

இப்பொழுது வருகிற படங்களில் சிறப்பான ஒளிப்பதிவு என்பது சர்வ சாதாரணமான விஷயம் என்பது போல் ஆகிவிட்டதால் இப்படத்தின் ஒளிப்பதிவாளர் தினேஷ் பாபுவைப் பாராட்டுவதில் அர்த்தமேதும் இல்லை!

இளையராஜாவின் இசையமைப்பில் உள்ள பாடல்கள் என்றாலே ஜனங்கள் இருக்கையை விட்டு எழுந்து, வெளியே ஓடிப்போய் சிகரெட் குடிப்பது என்பது இந்தப் படத்திலிருந்து ஆரம்பித்துவிட்டது போலும்.

ஆனாலும், ஏ சென்டர்களில் ஆறு வாரங்கள் ஓடக்கூடிய இப்படத்தினால் விநியோகஸ்தர்களுக்கு நஷ்டம் ஏதும் இருக்காது.

செல்வமுத்து

---

# "தைரியம் உயிரைக் காத்தது!"

கடந்த ஆகஸ்டு. 31ம் தேதி இரவு. ஆந்திராவில் உள்ள சுதாகர் ரெட்டி என்னும் வியாபாரி, ஹைதராபாத் நெடுஞ்சாலையில், ஸ்கூட்டரில் போய்க் கொண்டிருந்தபொழுது, அங்கே கோயில் வாயிலில் நின்றுகொண்டிருந்த ஒரு லாரியில் ஸ்கூட்டர் மோதியது. பின்புறம் இரும்புக் கம்பிகள் அடுக்கப்பட்ட அந்த லாரியில் மோதிய வேகத்தில், அதிலிருந்த நான்கு கம்பிகள் அடிவயிறு, கழுத்து, வலது தொடை, இடதுகை என்று நான்கு இடத்தில் துளைக்க, ரெட்டி அந்தக் கம்பிகளிடையே ஊஞ்சலாட, அவருக்குக் கீழே ஸ்கூட்டர் எந்த நிமிடமும் எப்படியும் விழலாம் என்ற நிச்சயமில்லாத ஒரு நிலை.

ரெட்டியைத் துளைத்த கம்பி, பின்னால் அமர்ந்திருந்த மஹேந்திர யாதவ் என்பவர் வயிற்றில் செருக, அதிலிருந்து அவரை மீட்டு காந்தி ஆஸ்பத்திரியில் சேர்த்தார்கள்.

ஆனால் ரெட்டியை அந்த இக்கட்டான நிலையிலிருந்து விடுவிக்க சூழ்ந்திருந்தவர்கள் செய்த முயற்சிகளால் பலனில்லை. அந்தச் சமயத்திலும் அவர் தைரியத்தையோ, நினைவையோ இழக்கவில்லை. இந்த ஊஞ்சலாட்டம் சுமார் 90 நிமிடங்கள் நீடித்தது. கடைசியில் ஒருவர் இரும்பு அறுக்கும் ரம்பம் கொண்டு வந்து அறுத்து, அவரை இந்த பயங்கர நிலையிலிருந்து விடுவித்தார். ஆனாலும் உடலின் உள்ளே இரும்புத் துண்டுகள் அப்படியே இருக்க, அவரை உடனே காந்தி ஆஸ்பத்திரியில் சேர்த்தனர். டாக்டர்கள் அவருக்கு மயக்கம் கொடுத்து உடலிலிருந்த கம்பித் துண்டுகளை எடுத்தனர்.

ஆபத்தான நிலையைக் கடந்து, தன்னைக் காண வருவோரிடம் அவர் உரையாடியதாக செய்தி.

நிர்மலா மாத்ருபூதம்

# பங்கிம் சந்திர சட்டர்ஜி

11

க.நா.சுப்ரமண்யம்-

இந்திய இலக்கிய மறுமலர்ச்சியின் முதல்வராக பங்கிம் சந்திர சாட்டர்ஜியைக் கருதுவது ஒரு நூறு நூற்றியிருபது வருஷங்களாகவே நமக்கு வழக்கமாகிவிட்டது. இந்தியச் சிந்தனைகளில் புது உணர்ச்சியின் சின்னமாக பங்கிமை ஏற்றுக் கொள்வதில் தவறில்லை. இந்திய இலக்கியத்தில் அவருக்கும் முன் நாவல் உருவத்தைக் கொண்டு வர முயன்றவர்கள் பலரும் இருக்கலாம். ஆனால் 1865-ல் துர்கேசன் நந்தினியில் தொடங்கி 1893-ல் ராஜசிம்மன் வரையில் பதினொரு நாவல்கள் எழுதினார். அவை பெருமளவில் மக்களை எட்டிய நூல்கள் என்றும் சொல்லலாம். இந்திய நாவல் என்கிற உருவம் பங்கிமுடன் தொடங்குகிறது என்று சொல்வதில் எவ்விதத்திலும் தவறில்லை.

பங்கிமுக்கு முந்தி வங்க மொழியிலேயே நாவல் முயற்சிகள் நடந்திருக்கின்றன என்று தெரிகிறது. ஆனால் அவ்வளவாக இலக்கியத் தரமாக அவை வெற்றி பெறவில்லை. மற்ற சில இந்திய மொழிகளிலும் நாவல் அல்லது நீளமான கதையை உரைநடையில் எழுதுவது என்கிற காரியத்தைப் பலர் செய்து பார்த்திருக்கிறார்கள். உதாரணமாக பதினெட்டாம் நூற்றாண்டின் கடைசி வருஷங்களில் சிவகங்கையில் வசன் சம்பிரதாயக் கதை என்று ஒன்றை முத்துக்குட்டிப் புலவர் என்பவர் சமஸ்தானபதிக்கு சிவராத்திரியில் கண் விழிப்பதற்காகச் சொன்னதாகவும், அது ஒரு நூற்றாண்டுகளுக்குப் பிறகு நூலாக வெளி வந்ததாகவும் தகவல் கிடைக்கிறது. இதை இந்தியாவின் முதல் நாவலாகக் கருதுவதற்குப் போதுமான சரித்திர ஆதாரம் இருப்பதாகச் சொல்லலாம். அதற்கும் முந்தி 1941-ல் இத்தாலிய கிறிஸ்துவப் பாதிரியான வீரமாமுனிவர் தமிழில் பல கதைகள் அடங்கிய ஒரு நீண்ட வசனத் தொடரை எழுதினார். பரமார்த்த குரு கதை என்று பெயர் அதற்கு. அதையும் இந்தியாவின் முதல் நாவலாகக் கருத இடம் இருக்கிறது.

தமிழில் போலவே வேறு சில மொழிகளிலேனும் காலத்தால் பங்கிமுக்கு முந்தி எழுதப்பட்ட நீண்ட வசன நூல்கள் இருக்கக்கூடும். குஜராத்தியில் 1860 அளவில் கிறிஸ்துவ மத மாற்றம் பற்றி ஒரு நாவல் வெளி வந்ததாகத் தெரிகிறது. அதைப் பற்றிய முழு விவரங்கள் எனக்குத் தெரியவில்லை.

இந்த நிலையில் பங்கிம் சந்திரரை இந்திய நாவல் முதல்வராக ஏற்றுக் கொள்வதில் தவறில்லை என்று தான் சொல்ல வேண்டும். அது மரபாகிப் போனதினால் மட்டும் அல்ல. பங்கிமின் பாதிப்பு பரவலாக இந்தியா பூராவிலும் இருந்து வந்திருக்கிறது. உதாரணமாகத் தமிழில் அவர் நாவல்கள் வங்க மொழியில் வெளி வந்து இருபது வருஷங்களுக்குள்ளாகவே மொழி பெயர்க்கப்பட்டு நூற்றுக்கணக்கான தமிழர்களால் படிக்கப்பெற்றன. இலக்கிய பாதிப்பு என்று சொல்லப் போனால்

பங்கிமின் ரொமென்டிக் மனப்பான்மையும், சரித்திரப் பெருமை நோக்கும் உணர்ச்சிவசப்பட்ட உத்தி விசேஷங்களும் தான் இன்னமும், நூறு வருஷங்கள் கழித்தும், இந்திய நாவலாசிரியர்களிடையே ஆட்சி செலுத்துகின்றன என்று சொல்ல வேண்டும்.

தமிழ் இலக்கிய மறுமலர்ச்சியின் காரண கர்த்தாக்களில் ஒருவரான வ.வெ.சு. அய்யர் தமிழ்ப் பெருமையான சேர, சோழ, பாண்டியச் சரித்திரக் கதைகளையும், இந்தியப் பெருமைகளான ரஜபுத்திர வீரர்களின் கதைகளையும் நாவல்களாக எழுத வேண்டுமென்று தனக்கு ஆசை இருப்பதாக **1917-18-ல்** சுதேசமித்திரனில் எழுதிய ஒரு கட்டுரையில் குறிப்பிட்டிருக்கிறார் என்பது கவனிக்கத்தக்கது. இந்த ஆசை பங்கிம் நாவல்களைப் படித்ததன் பாதிப்பினால் ஏற்பட்டது என்று கொள்வதில் தவறில்லை. **1924-25-ல்** வடுவூர் துரைசாமி அய்யங்கார் எழுதிய விலாசவதியும், **1940-50**-களில் கல்கி எழுதிய சரித்திர நாவல்களும் பங்கிமின் பாதிப்பினால் ஏற்பட்டவைதாம்.

சர் வால்டர் ஸ்காட் என்கிற ஆங்கில சரித்திர நாவலாசிரியரைப் படித்ததன் காரணமாக பங்கிமுக்கு இந்திய சரித்திரத்தில் பல பகுதிகளை ஸ்காட் பாணியில் சொல்ல வேண்டும் என்று தோன்றியதாகச் சொல்கிற விமர்சகர்கள் உண்டு. ஸ்காட் நாவல்களை தாம் நாவல்கள் எழுத ஆரம்பித்த பிறகு தான் படித்ததாக பங்கிம் சொன்னதாகச் சொல்பவர்களும் உண்டு. இது எப்படியானாலும் பங்கிம் சந்திரரை இந்திய வால்டர் ஸ்காட் என்று சொல்லும் பழக்கம் அவர் காலத்திலேயே ஏற்பட்டு விட்டது.

ஸ்காட்டைப் பின்பற்றிச் சரித்திர நாவல்கள் எழுதியவர்கள் உலகில் பல பேர் உண்டு. ஸ்காட்டின் புகழ் உலகம் பூராவும் பரவியிருந்தது. அலெக்செண்ட்ரோ மன்சோனி என்கிற இத்தாலிய நாவல் முதல்வர் ஸ்காட் நாவல்களைப் படித்து எப்படி நாவல்



கள் எழுதக் கூடாது என்று அறிந்து கொண்டேன்" என்று சொன்னார். லியோ டால்ஸ்டாய் ஸ்காட் நாவல்களைப் படித்து என் போரும் அமைதியும் நாவலை அவர் நாவல்களைவிடச் சிறந்த நாவலாக எழுத முயன்றேன் என்று சொன்னார். பங்கிம் சந்திரர் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் இந்தியக்கலோனியல் பிரஜை. அவர் ஸ்காட் காட்டிய பாதையைப் பின்பற்ற நினைத்ததில் தவறில்லை என்று சொல்லலாம். ஆனால் அவர் எழுதிய சரித்திர நாவல்களைவிடச் சரித்திரம் அல்லாத நாவல் கபாலகுண்டலா (*1866*) தான் சிறந்தது என்பது தற்போதைய விமர்சன அபிப்பிராயம்.

1838-ல் பிறந்த பங்கிம் 1894-ல் இறந்தார். இந்திய மறுமலர்ச்சியின் மகோன்னதமான பல அம்சங்களின் சின்னமாக அவரைக் கருதமுடியும். சமஸ்கிருத மரபுக்கல்வி, வங்க ஆங்கில பொதுக் கல்வி இவற்றை விரும்பித் தேடிப் பெற்றவர். கல்கத்தா சர்வகலாசாலையின் முதல் இரண்டு சம காலத்திய பட்டதாரிகளில் ஒருவர். வங்கத்தில் உருப்பெற்று கொந்தளித்துக் கொண்டிருந்த சிந்தனைகளுக்கெல்லாம்

வாரிசு. சுயமாகச் சிந்திக்கத் தெரிந்தவர் என்பதனால் பல விஷயங்களைப் பற்றிப் பரவலாக ஏற்கப்பட்ட சிந்தனைகளை ஏற்காமல் மதம், சமுதாயம், வாழ்க்கை வழிகள் என்றெல்லாம் தனி வழிகள் தேடிப் போனவர் என்று அவரைப் பாராட்ட வேண்டும்.

ராம் மோகன் ராயின் சிந்தனைகளை பங்கிம் ஏற்றுக் கொண்டதில்லை. பின்வர் வந்த பிரும்ம சமாஜத்தையும் பங்கிம் முழுவதுமாக ஏற்றுக் கொண்டதில்லை. இது பற்றி 1884-ல் ரவீந்தரநாத தாகூரும் பங்கிமும் மோதிக் கொண்டு விவாதம் நடத்தியதாகச் சொல்லுகிறார்கள். கேசப் சந்திர சென்னும் பங்கிமும் சேர்ந்தாற் போலப் பள்ளியில் படித்தவர்கள். ஆனால் அவருடைய மதச் சீர்திருத்த அம்சங்கள் அவருக்கு உகந்ததாக இருக்கவில்லை. ஆரிய சமாஜத்தை ஸ்தாபித்த தயானந்த சரஸ்வதியிடமும் அவருக்கு அபிப்பிராய பேதம் இருந்தது. ராமகிருஷ்ண பரமஹம்சரைக் கூட அவரால் பூரணமாக ஏற்றுக் கொள்ள இயலவில்லை. ஒரே ஒரு தடவை மட்டும் தக்ஷிணேஷ்வரத்துக்குப் போய் ராமகிருஷ்ணரைப் பார்த்துவிட்டு ஒரு விதமான ஈடுபாடும் இல்லாமல் அவர் திரும்பியதாகத் தெரிகிறது. ஒரு சமயம் பிரும்ம சமாஜத்தின் புதுப்போக்குகள் ஹிந்து தர்மத்தின் ஆன்மிகப் போக்கையே அழித்துவிடும் என்று அவர் அபிப்பிராயப்பட்டதாகத் தெரிகிறது. அது பற்றி ஒரு கட்டுரையும் எழுதியுள்ளார்.

மொத்தத்தில் பங்கிம் சத்திரருக்கு இந்து மதச் சீர்திருத்தத்திலோ இந்து வழிகளைப் புதுப்பிப்பதிலோ மனம் இல்லை. வேதகாலத்து சிந்தனைகள் தான் முக்கியம் என்றும் அவர் நம்பவில்லை. ஸ்ரீ கிருஷ்ணர் என்பவர் சரித்திர புருஷர் என்றும், அவர் பகவத் கீதையில் உபதேசித்த தத்துவங்கள் தான் ஹிந்து ஆன்மிகத்தின் மிக மேன்மையான சிகரம் என்றும் அவர் நம்பினார். தற்கால மேலை நாட்டு தத்துவங்கள் பலவற்றிற்கு பகவத் கீதையிலிருந்து ஆதாரம் காண அவரால் முடிந்தது.

நவ இந்தியாவில் பகவத் கீதைக்கு அதுவரையில் அதற்கு ஏற்படாத ஒரு ஸ்தானத்தை உண்டாக்கித் தந்தார் பங்கிம் சந்திரர் என்று சொல்லுவது சாத்தியமே. இதன் எதிரொலிகள் இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளில் பாலகங்காதர திலகர், மஹாத்மா காந்தி, விநோபா பாவே என்று நம் காலம் வரையில் தொடர இருந்தன. இதையும் பங்கிம் சந்திரரின் மறுமலர்ச்சிச் சாதனையின் ஒரு அம்சமாகக் கருத வேண்டும்.

இதையொட்டி இன்னொரு விஷயமும் சொல்ல வேண்டும். ராம் மோகன் ராய், தயானந்த சரஸ்வதி போன்றவர்கள் இன்றைய மதச் சீர்திருத்தங்களின் ஆரம்பம், வேதங்களின் கூற்றுகளை மனித வாழ்க்கையின் ஆதாரமாக, அடித்தளமாக ஏற்றுக் கொள்வது என்பது தான். புரட்சியாளர்கள் தான் என்றாலும் அவர்கள் வேதங்களின் அதிகாரங்களைப் புரட்டித் தள்ளிவிட முயலவில்லை! புராண காலத்திய சேர்க்கைகள் மாறுதல்கள் நல்ல ஹிந்து மாளிகையை வீணாக்கி விட்டன. இவற்றை அகற்ற வேண்டும் என்று அவர்கள் எண்ணினார்கள். ஷிர்டி சாய்பாபா, ராம கிருஷ்ண பரமஹம்ஸர், ரமண மஹரிஷி போன்றவர்கள் வேதம், புராணம், பழமை, புதுமை எல்லாவற்றையும் சேர்த்து ஏற்றுக் கொண்டனர். அவற்றின் உதவியாலும், அவற்றின் உதவி இல்லாமலேயும் கூட மனிதர்களைக் கடவுளாகவும், கடவுளையே மனிதனாகவும் காண முடியும் என்று செய்து காட்டினார்கள். ராம கிருஷ்ணரின் சிஷ்யரான சுவாமி விவேகானந்தர் எது எப்படியானாலும் மனிதனுக்கு விழிப்பும், உழைப்பும், உணர்வும் தேவை என்று கண்டு சொன்னார். இவை எல்லாமும் சேர்ந்துதான் இந்திய மறுமலர்ச்சியை உருவாக்கியது என்று சொல்ல வேண்டும்.

பங்கிம் சந்திரரின் இந்து மதச் சிந்தனைகள்; இந்து மத மறுமலர்ச்சியாளர்களுக்கோ, இந்து மதச் சிந்தனையாளர்களுக்கோ அவ்வளவாகப் பிடிக்கவில்லை. அதற்காக பங்கிம் கவலைப்

பட்டதாகத் தெரியவில்லை.

இறப்பதற்கு மூன்று மாதங்களுக்கு முன் கல்கத்தாவில் செய்த ஓர் பிரசங்கத்தில் அவர் வற்புறுத்தினர்: "ஒவ்வொருவரும் தானுகவே எவ்வளவு பெரிய விஷயமானுலும் சிந்திக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். உங்கள் சுயசிந்தனை உங்களைச் சில சமயம் தவறுன முடிவுகளுக்கு இட்டுச் செல்லலாம். அறிவு நபும்சகனுக இருப்பதை விட, எப்படியேனும் சிந்திப்பது நல்லது!"

பங்கிம் சந்திரரின் நாவல்களைப் பற்றித் தெரிகிற அளவு அவர் சிந்தனைகள், அவர் பொழுதுபோக்கு சரித்திர உணர்வு இலக்கியத்துக்கு அப்பால் அவருடைய இந்திய மறுமலர்ச்சிச் சேவை இதெல்லாம் பரவலாக இந்தியாவில் பலருக்கும் தெரிய வரவில்லை. இதுபோல நமது இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளில் பல குருட்டுப் பகுதிகள் இருப்பதைப் பற்றி நாம் பெருமைப் படவே முடியாது. பங்கிம் சந்திரரைப் பற்றி நாம் ஓரளவுக்காவது தெரிந்து வைத்திருக்கிறோம். ஆனல் வங்கத்திலும் மற்ற இந்தியப் பிரதேசங்களிலும் பொது இந்திய மறுமலர்ச்சியின் முக்கிய சில அம்சங்களுக்குக் காரண கர்த்தாக்களாகிய ஜோதி ராமலிங்கம், வேத நாயகம் பிள்ளை, கோபால கிருஷ்ண பாரதியார் என்பவர்களெல்லாம் பற்றிக் கொஞ்சங்கூடத் தெரியாது. இந்த நிலை மாற ஏதாவது வழிவகைகள் பிறந்தால்தான் இந்திய மறுமலர்ச்சியின் பயனும், பொருளும் பூரணமாக விளங்கும்; பூர்த்தி ஆகும்.

நாவல்களையும் மதச் சிந்தனைகளையும் சொன்னதுபோல பங்கிம் சந்திரரின் வாழ்க்கைச் சாதனைகளில் சிலவற்றைப் பற்றியும் சொல்ல இடமிருக்கிறது. வாழ்க்கையில் பெரும் பகுதியை வங்க நீதித் துறையில் சப் மாஜிஸ்டிரேட்டாக கழித்தவர். அவருடைய சேவையை மெச்சி சர்க்கார் அவருக்கு ஒரு பட்டம் கூடக் கொடுத்தார்கள். ஆனல் சர்க்கார் சேவையில் அவரால் திருப்தி காண முடியவில்லை. தகுதி எத்தனை படைத்திருந்தாலும், எத்தனைதான் நாணயஸ்தன் ஆனுலும் இந்திய ஆங்கில சர்க்காரில் பதவி உயராது என்பதும் சிலஆங்கிலேய அதிகாரிகளின் ஆணவத்துக்கு அடிமைப்பட்டுக் கிடக்க வேண்டியிருந்ததும் அவரை சேவைக் காலம் பூராவும் முள்ளாக வருத்தின. சேவை முடிந்து விடுதலை பெற்ற நாளை அவர் சுதந்திர தினமாகவே கொண்டாடினர் என்று சொல்லுவார்கள்.

தனது காலத்திய வங்க இலக்கிய வாழ்க்கையில் அவர் பூரணமாகப் பங்கு கொண்டார் என்பதும் தெரிகிறது. இலக்கியம் பற்றியும் சமுதாயம் பற்றியும் மத விஷயங்கள் பற்றியும் அவருக்கு மூத்தவர்களிடமும், இளையவர்களிடமும் அவர் பல விவாதங்கள் நடத்தியிருக்கிருர். நாவலாசிரியராக



மனைவி: நான் பாட ஆரம்பிக்கும் போதெல்லாம் ஏன் வெளியே போய் நிக்கிறீங்க?

கணவன்: "யாராவது நான் உன்னை அடிக்கிறேன் என்று நினைக்கக் கூடாது பார்!"

— சி. கணேஷ்

அவர் பெற்ற புகழ் இலக்கிய விமர்சகராக அவர் பெற்ற புகழை அடித்து விட்டது என்று சொல்ல வேண்டும். வங்க மொழியிலும், ஆங்கில மொழியிலும் இன்றும் அர்த்தமுள்ளதாகப் பல விமர்சனக் கட்டுரைகளை அவர் எழுதியிருக்கிருர். இந்திய மறுமலர்ச்சியில் இந்த இலக்கிய விமர்சனப் பாதிப்பும் தேவை. இதெல்லாம் நமக்குக் கிடைக்கும் காலம் சமீபத்தில் இல்லை என்றுதான் தோன்றுகிறது.

கவிதைகளும், அவர் சிலது எழுதியிருக்கிருர். அவற்றில் வந்தே மாதரம் என்கிற கவிதை சுதந்திரப் போராட்டக்

காலத்தில் இந்தியா பூராவும் மட்டுமல்லாமல் உலகம் பூராவும் ஒலித்த கவிதை. இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளில் வந்தே மாதரம் என்ற கவிதைக்கும் படிமத்துக்கும் ஒரு முக்கியமான இடம் உண்டு என்பதால் இதைப்பற்றி இங்கே கொஞ்சம் சொல்லலாம் என்று தோன்றுகிறது.

பங்க தர்சன் என்று தன் தம்பி பூர்ண சந்திரர் என்பவரை ஆசிரியராகக் கொண்டு ஒரு மாதாந்திரப் பத்திரிகையை நடத்தி வந்தார் பங்கிம். அதில் 1875-ல் ஒரு பக்கம் காலி விழவே, அதை நிரப்ப வந்தே மாதரம் என்கிற கவிதையை எழுதிக் கொடுத்தாராம். அச்சாஃபீஸில் சமஸ்கிருத பண்டிதனை ஒரு புலவர் சமஸ்கிருத வங்கக் கலவையிலான இந்தக் கவிதைக்கு ஆக்ஷேபம் சொல்லவே கோபித்துக் கொண்டு அந்த சமயம் அதை உபயோகப்படுத்தாமல் விட்டுவிட்டார். 1882-ல் பிரசுரமான ஆனந்த மடத்தில் அது பிரசுரமாகியது. ஒரு புகழ் பெற்ற இசைக் கலைஞரை அந்தக் கவிதைக்கு இசையை அமைக்கச் சொன்னதாகவும் அவர் மறுத்து விட்டதாகவும் தெரிகிறது. கவி ரவீந்தரநாத் தாகூர் அதற்கு இசை அமைத்து பங்கிம் முன்னராகவே பாடிக் காட்டியதாகவும் தெரிகிறது. பன்னிரண்டாவது இந்திய தேசியக் காங்கிரஸ் மகாசபை முன் கல்கத்தாவில் 1896-ல் தாகூரால் அது முதலில் பாடப்பட்டது.

வந்தே மாதர கீதம் இந்திய சுதந்திரப் போராட்டத்தின் சரித்திரத்தில் 1905க்குப் பின் இன்று வரையில் ஆழமாகப் பதிந்துள்ளது. வந்தே மாதரத்தின் முதல் மொழி பெயர்ப்பு தமிழில் தான். 1905ல் சுப்ரமணிய பாரதியார் செய்தது. நவம்பர் 1905ல் சக்ரவர்த்தினியிலும், டிசம்பரில் சுதேசமித்திரனிலும் பாரதியாரின் மொழிபெயர்ப்பு பிரசுரிக்கப்பட்டது.

பங்கிம் இறந்தபோது பரோடாவில் பேராசிரியராக இருந்த அரபிந்தர் "பங்கிமால் ஒரு மொழியை, ஒரு இலக்கியத்தை ஒரு தேசத்தை சிருஷ்டிக்க முடிந்தது" என்று எழுதினர். அது மிக மிக உண்மை.

(தொடரும்)

## "டி.வி. நெல்"

சென்னைத் தொலைக்காட்சி நிலையம் செப்டம்பர் 3-ந் தேதி "வயலும் வாழ்வும்" நிகழ்ச்சியில் "டி.வி. நெல்" என்ற தலைப்பில் ஒளிபரப்பிய செய்தி சுவையாக இருந்தது. இதில் பங்கு கொண்ட செங்கற்பட்டு விவசாயிகள் ஐ.ஆர்.50 ரகத்தைத் தாங்கள் "டி.வி. நெல்" என்று அழைத்ததற்கான காரணங்களை விளக்கினர்கள். தமிழ்நாட்டில் அரிசி உற்பத்திக்கு ஐ.ஆர். 50 ரகம் செய்துள்ள உதவியினை யாரும் மறுக்க முடியாது. இன்று பயிர் விளைச்சல் போட்டியில் முதல் மற்றும் இரண்டாவது பரிசுகளை வாங்கியவர்களும் ஐ.ஆர். 50 சாகுபடியாளர்களே. பொருளாதார நிலையைக்கருதி நெல் சாகுபடியைத் தவிர்க்க நினைத்த சமயத்தில் அறிமுகமான ஐ.ஆர். 50 ரகம் விவசாயிகளுக்கு ஊக்கம் காட்டி வருகின்றது. இதை அழிக்க புயல் வேகத்தில் வந்த "பிளாஸ்ட்" நோயினைத் தடுப்பதற்கான வழி முறைகளை விவசாயிகள் நலனுக்காக டி.வி. ஒளிபரப்பியது. ஐ.ஆர். 50 ரகத்தை டி.வி. நெல் என்று விவசாயிகள் சொல்கிருர்கள் இப்போது!

செப்டம்பர 29

ஜீவனுள்ள இந்த ஆண்டில், பல ஆச்சர்யங்கள் காத்துள்ளன. நீங்கள் திட்டமிட்டபடியே எல்லாமும் நடக்கும் என்று எதிர்பார்க்காதீர்கள். மாறுகின்ற சூழ்நிலைகளோ, திடீர் வாய்ப்புகளோ உங்களுக்குப் பாதகமாய் அமைந்து விடாதவாறு பார்த்துக் கொள்ளுங்கள். வியாபாரத்திலும், வீட்டிலும், பொதுவாழ்க்கையிலும் அடுத்த சில மாதங்கள் பிரச்னையற்றவையாய் இருக்கும்.

செப்டம்பர் 30

அனேக நேரங்களில், 'பிஸி'யாயும், மகிழ்ச்சியாயும் காணப்படுவீர்கள். இந்த ஆண்டு நிறைய புதிய நண்பர்கள், புதிய உபாயங்கள், புதிய வாய்ப்புகள் ஏற்படக்கூடும். இப்படி, பல்வேறுபட்ட புதிய விஷயங்களுக்கு வாய்ப்பிருப்பது, சில நேரங்களில், அதிலும் குறிப்பாக 1987ன் முதல் சில மாதங்களில் பிரச்னையை ஏற்படுத்தும். அதற்கு, எந்தெந்த நடவடிக்கையை மேற்கொள்ளலாம் என்ற குழப்பம் காரணமாய் இருக்கும்.

அக்டோபர் 1

கடினமாய் உழைக்க வேண்டிய ஆண்டு இது. இந்த ஆண்டில் உங்களுக்கு ஒய்வே கிடைக்காது போகலாம். வழக்கமாக மற்றவர்கள் வகித்து வரும் பொறுப்புகளை நீங்கள் ஏற்க வேண்டிவரும். 1987ன் துவக்கத்தில் இது ஒரு பெரிய சுமை போல இருக்கும். அதே நேரத்தில், இப்போதைய நடவடிக்கைகளில் சாதகமான போக்கு நிலவ்வும் இது வழி வகுக்கும்.

அக்டோபர் 2

பொதுவாக, முன்னேற்றமிக்க ஆண்டு இது. திடீர் மாற்றங்கள், புதிய வாய்ப்புக்கள், பல்வேறுபட்ட உபாயங்கள் ஏற்படும். உங்களது கற்பனைச்சக்தியும், கலைத் திறனும் போற்றப்படும். அன்றாட அலுவல்களில் வழக்கத்தைவிட அதிகமாய்க் கவனம் செலுத்த வேண்டி இருக்கலாம். எந்த முயற்சியிலும், தீவிரமாய்ச் சிந்திக்காமல் இறங்கி விடாதீர்கள். அனேகமாக, சரியான முடிவுகளையே எடுப்பீர்கள். எனினும், ஜனவரியிலிருந்து மே மாதத்துக்குள், அவ்வளவாய்ப் பிரபலமில்லாத பாதையில் செல்லத் தூண்டப்படுவீர்கள். அப்போது எச்சரிக்கையுடனிருப்பது அவசியம்.

அக்டோபர் 3

புதிய துவக்கங்களுக்கு வாய்ப்புள்ளது. மாற்றங்களுக்கும், விட்டுக் கொடுத்தலுக்கும் இடமுள்ளது. பாதிப்புக்கு உள்ளாகும் பகுதிகள், உங்களது பிரத்யேக நிறுவனங்களாயோ, நெருக்கமான உறவுகளாயோ, வீட்டு வாழ்க்கையாயோ இருக்கலாம். பொது வாழ்க்கையை மகிழ்ச்சிகரமாய் அனுபவிப்பீர்கள். வீட்டு அபிவிருத்தி சம்பந்தமான பெரிய முயற்சிகளில் இறங்குவீர்கள். இது உத்யோக மாற்றத்தோடு சம்பந்தமுள்ளதாய் இருக்கக்கூடும். 1987ல் சில சிறிய தடங்கல்கள், தொடர்ச்சியான குழப்பங்கள் நிலவக்கூடும்.

அக்டோபர் 4

உறவு முறைகள் மற்றும் நடவடிக்கைகளில் ஆச்சர்யப்படத்தக்க, எதிர்பாராத மாற்றங்கள் இருக்கலாம். சொந்தக் காலிலேயே நிற்க முயலுங்கள். எதிர்பாராது ஏற்பட்டு விட்ட சூழ்நிலைகள் மற்றும் சம்பவங்களோடு, ஒத்துப்போங்கள். புதிய நடவடிக்கை ஒன்றிலோ, புதிய அனுபவம் ஒன்றிலோ இறங்குவீர்கள். அது லாபகரமான பலனைப் பின்னர் தரலாம். இந்த ஆண்டில் மேற்கொள்ளும் பொருளாதார அலுவல்கள், நீண்டகால் அடிப்படையிலானவையாய் இருக்கும்.

---

**அதிர்ஷ்ட எண்கள்:**

ஞாயிறு 1, திங்கள் 4, செவ்வாய் 5, புதன் 7, வியாழன் 9, வெள்ளி 8, சனி 2.

**நல்ல நாட்கள்:**

| | |
|---|---|
| குடும்ப விவகாரங்களுக்கு | : 28 |
| பொருட்களை வாங்க | : 30 |
| பொருட்களை விற்க | : 2 |
| பயணத்துக்கு | : 30 |
| புதிய ஒப்பந்தங்களுக்கு | : 28 |

இந்திய மறுமலர்ச்சிச்
சிந்தனையாளர்கள்-12

# தத்தியா தோப்பே

## க.நா.சுப்ரமண்யம்

பத்தொன்பதாம் நூற்றுண்டில் இந்தியாவில் வியாபாரம் செய்து பணக்காரர்கள் ஆவதற்காக வந்திருந்த ஐரோப்பியக் கம்பெனிகளில் ஆங்கிலேயர்களின் கம்பெனி இந்தியாவில் பெரும் பகுதியையும் கைப்பற்றி, பல இடங்களிலிருந்தும் வியாபாரம் செய்ததுடன் அரசியல் அதிகாரமும் செலுத்த ஆரம்பித்து விட்டார்கள். எதிர்ப்பு அங்கும் இங்குமாக, ஏதோ கொஞ்சம் இருந்தாலும், இந்தியர்களிடையே ஒற்றுமை இல்லாமல், பலவிதங்களிலும் அவர்கள் பிளவுபட்டுக் கிடந்ததினுல் ஆங்கிலேயர்களை எதிர்த்து வெற்றி கொள்ள முடியவில்லை. ஆங்கிலேயர்களை எதிர்க்க வேண்டும் என்கிற நினைப்பு அவர்களிடம் அரசியல் அதிகாரங்கள் இழந்த அரசர்களுக்கும், அதிகாரிகளுக்கும் இருந்தாலும் கூட ஒன்றுபட்டு எதுவும் செய்ய அவர்களுக்குத் திராணி இல்லை. செயல் இழந்தவர்களாகவே இருந்தார்கள்.

தஞ்சையில் ராஜா சரஃபோஜிக்கு கலை விஞ்ஞானக் கல்வியினுல் எதிர்காலத்துத் தலைமுறைகளில் மாறுதல்கள் வரக்கூடும் என்ற ஆசை அடி மனத்தில் இருந்திருக்கக் கூடும். ராம் மோகன் ராய், தயானந்த சரஸ்வதி, ஜோதி ராமலிங்கம் போன்றவர்கள் மத, சமூதாய, கல்வி, அரசியல் மாற்றங்களினுல் இந்தியாவில் புது மலர்ச்சி ஏற்பட முடியும் என்று எண்ணிச் செயல்பட்டார்கள். இந்தப் பொதுச் சிந்தனைகளின் முக்கால்வாசியும் இந்திய மண்ணில் வேரூன்றிப் பரந்து பெருகி உயர்ந்து வளமாக வளர்ந்த இந்தியப் பண்பாடு என்கிற மரத்தில் ஒட்டுக்களாக ஆங்கிலப் பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், போக்குகள் இவற்றினுல் கிளைத்தன. ஆங்கிலக் கல்வியை இந்தியா பூராவுக்கும் பரவச் செய்ய 1840-க்கு மேல் ஆங்கிலக் கும்பெனி அரசாங்கம் நடவடிக்கைகள் எடுக்கவே, இந்தியர்களுக்கு ஆங்கிலேயர்களின் நோக்கங்களில் சந்தேகம் வந்து விட்டது. சற்றேறக்குறைய அதேசமயம் கிழக்கிந்தியக் கம்பெனி சார்பில் கிறிஸ்தவ மதப் பிரச்சாரம் செய்யவும் பொதுவாக அதிகாரம் பிரசங்கிகளுக்கு வழங்கப்படவே இந்திய மதத்தையும், நாகரீகத்தையும் அழிக்க ஆங்கிலேயர்கள் முயலுகிறுர்கள் என்று ஒரு நினைப்பு நாடு பூராவும் ஏற்பட்டது.

ஆங்கிலேயர்கள் இந்தியர்களை மகா மட்டமானவர்களாக எண்ணி நடத்தியது பரவலாக மற்ற இடங்களிலும் கவனிக்கப்பட்டாலும், ராணுவத்தில் அதிகமாகவே தெரிந்தது. துப்பாக்கிச் சனியன்களின் கொழுப்பு, துப்பாக்கி ரவைகளில் உபயோகப்படுத்தப்பட்ட மேல் பகுதி இவையெல்லாம் இந்துக்களோ முகமதியர்களோ கையால் தொடக் கூட அருகதை இல்லாத கலப்புகள் என்று இந்தியச் சிப்பாய்களை நம்ப வைக்க அதிக காலம் ஆகவில்லை. ஜோஸியர்களும், குறி சொல்பவர்களும் பிளாசி யுத்தத்துக்குப் பிறகு நூறுவது வருஷத்தில் ஆங்கில அந்நிய அரசாட்சி ராணுவ முறையில் தோற்கடிக்கப்படும் என்று சொன்னது, அதிருப்தி அடைந்த சிப்பாய்களிடையே பெரு வதந்தியாகப் பரவியிருந்தது. அரசியல்

சுதந்திரம் என்று இல்லாவிட்டாலும், இந்திய மன்னர்களின் ராணுவமாகச் செயல்பட்ட இந்தியச் சிப்பாய்களுக்கு அடிமைத்தனம் நீங்க வேண்டும் என்ற ஆசையிருந்தது. சிப்பாய்களுக்குத் தரப்பட்ட உணவு, மக்கிப் புழுத்துப் போன தானியத்திலிருந்து செய்யப்பட்டது என்று ஒரு வதந்தியும் பரவியது. அந்த வதந்திக்குப் போதுமான ஆதாரமும் இருந்ததாகத் தான் தோன்றியது.

சிப்பாய்க் கலகம் என்று ஆங்கில சரித்திர ஆசிரியர்களால் சொல்லப்பட்ட முதல் இந்தியப் புரட்சி அதன் காலத்தில் இந்தியர்களாலேயே முதல் சுதந்திரப் போராகக் கணிக்கப்பட்டதா என்பது பற்றி நமக்குச் சந்தேகம் எழலாம். ஆனால் வட இந்தியா முழுவதும் பரவிய ஒரு இயக்கமாக இதைக் காண முடிகிறது. போர் என்கிற அளவில் பார்த்தால் கூட, ஹைதர் திப்பு சண்டைகளை விடப் பெரியதாகவே கருத வேண்டியதாக இருக்கிறது. இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகள் எடுத்துக் கொண்டு சென்ற போக்குக்கு ஆதரவாகவும், ஆதாரமாகவும் போர்க் காலத்தில் அமைந்த ஒரு மாபெரும் சம்பவமாக 1857ஐக் கருத வேண்டும். அந்த நூற்றாண்டின் பெரும் சரித்திரச் சம்பவம் அது.

1857-ல் தாதாபாய் நௌரோஜி, வேத நாயகம் பிள்ளை, ஜோதி ராமலிங்கம், ஷிருடி ஸாயிபாபா, ராமகிருஷ்ண பரமஹம்ஸர், பங்கிம் சந்திரர் மற்றும் பலரும் உயிருடன் இருந்தார்கள். இவர்கள் யாரும் அதில் நேரடியாகச் சம்பந்தப்படவில்லை என்றாலும் எவ்விதமான குறிப்புகளும் கூட எழுதி வைத்திருப்பதாகத் தெரியவில்லை. சரித்திர நாவலாசிரியராகப் பின்னர் பிரசித்தி பெற்ற பங்கிம் சந்திரர் கூட இதுபற்றி எதுவும் குறித்து வைத்திருக்கிறாரா என்று தெரியவில்லை. பங்கிம் சந்திரர் நூறு வருஷங்களுக்கு முன் நடந்த சந்நியாசிக் கலகத்தைப் பற்றி எழுதினார். 1857 பற்றி எழுதவில்லை. ஆனால் அதுபற்றி சிந்தனைத் தொடர்பு அற்றுப் போய் விட்டது என்றும் சொல்ல முடியாது.

*80 கோடிப் பிரதிகள் விற்ற புத்தகம்*

**QUOTATIONS FROM THE WORKS OF MAO TSE TUNG** சீன அதிபராக இருந்த 'மாவோ' எழுதிய நூல் இது. 1966 முதல் 1970 வரையிலான நான்கு ஆண்டுகளில் மட்டும் 80 கோடிப் பிரதிகள் விற்றுள்ளன! சீன மக்கள் அனைவருமே இந்தப் புத்தகத்தை வாங்கியாக வேண்டும் என்று சீன அரசு அதிகாரிகள் கட்டாயப் படுத்தினர்களாம்!'

—ப்ரசாந்த்

வாஞ்சி அய்யர், அரவிந்த கோஷ், சாவர்கர், பகத் சிங் என்றும், அதற்குப் பிறகும் நீடித்து வந்திருக்கிறது என்று சொல்லலாம்.

1857ல் சம்பந்தப்பட்டவர்களில் மூன்று பேர்கள் சிறப்பாகவே தெரிகின்றன. ஜான்சி ராணி லட்சுமி பாய், நானா சாகிப் மற்றும் நானா சாகிப்பின் தளபதி தத்தியா தோப்பே என்கிற பெயர்கள்- அவர்களுடைய வீரம், போர்த்திறன், சாமர்த்தியம் இவற்றினால் நமக்குத் தெரிகின்றன. இந்த மூன்று பேரில் தன் சுவீகாரத்தை ஆங்கிலேயர்கள் ஏற்றுக்கொள்ள மறுத்ததினால் லட்சுமிபாய் வீராவேசமாகப் போராடினாள். நானா சாகிப் தன் தகப்பனார் பேஷ்வாக்குக் கொடுத்த பென்ஷனையும், ஜாகீரையும் கௌரவத்தையும் தனக்குத் தர மறுத்ததால் அவற்றைத் தர வேண்டும் என்றும் மறுபடியும் மகாராஷ்டிர சாம்ராஜ்யத்தை ஸ்தாபிக்க முடியுமா என்று பார்ப்பதற்கும் போராடினார். இந்த போரில் இன்னொரு தலைவரான கடைசி டெல்லி முகலாயர்களின் வாரிசான பகதூர்ஷா கும்பினி தன் பாட்டனார் ஷாஆலமுக்குக் கொடுத்த வாக்குறுதிகளைக் காப்பாற்றவில்லை என்று சொல்லிப் போராடினார்.

இந்தத் தலைவர்களில் தத்தியா தோப்பே ஒருவர்தான் எந்தவிதமான

சுய லாபத்தையும் எதிர்நோக்காமல் மகாராஷ்டிர பேஷ்வாக்களின் அதிகாரத்தை மீண்டும் நாட்டில் நிலை நாட்ட முடியுமா என்று பார்ப்பதற்காக, சண்டை போட்டவர். நானா சாகிப்பை மீண்டும் பேஷ்வா ஆக்க வேண்டும்; அதனால் இந்து மதம் இந்தியாவில் மீண்டும் பலமாகத் தழைக்கும்; நாடும் ஆங்கிலேயர்களின் அதிகாரங்களிடமிருந்து விடுபடும் என்ற நினைப்பு அவருக்கு இருந்திருப்பதாகத் தெரிகிறது. மற்ற தலைவர்களை விட அவர்தான் அதிக காலம் போரிட்டிருக்கிறார். போர் வீரனாகவும், நானா சாகிப்பின் தளபதியாகவும், பின்னர் வெற்றிக்கு வாய்ப்பே இல்லை என்று தெரிந்தபிறகும், உடன் நின்று போரிட யாரும் இல்லாதபோதும்கூட, அவர் போரைத் தன்னைப் பொறுத்தவரையில் நிறுத்தவில்லை. இந்தப் பிடிவாதமும் போக்கும் அவருடைய சிந்தனைகளாலும் இந்திய விவேகத்தினாலும் ஏற்பட்டது என்பதை எண்ணி அவரை ஒரு செயல் வீரனாக மட்டுமின்றி இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனையாளராகவும் கருதும் அவசியத்தை ஏற்படுத்துகிறது என்று தோன்றுகிறது.

1857க்கு முன் தத்தியா தோப்பேயின் பெயர் பித்தூர் என்கிற கங்கைக்கரை கிராமத்தில், இரண்டாவது பாஜிராவின் சபையோர்களுக்கு வெளியே தெரியவே தெரியாது என்றுதான் சொல்ல வேண்டும். பாஜிராவ் ராஜ்யாதிகாரத்தை இழந்துவிட்டு புனாவிலிருந்து பித்தூர் வந்து, ஆங்கிலேயர்கள் தந்த பென்ஷனுடன், சின்ன அளவில் ஒரு ராஜாவாக இருந்தார். அவரோடு புனாவிலிருந்து வந்த எவனேகர் என்கிற மகாராஷ்டிர பிராமணரின் பிள்ளைதான் தத்தியா தோப்பே. எவனே என்கிற கிராமம் நாசிக் பக்கத்தில் இருந்தது. அங்கிருந்து வந்ததினால் எவனேக்கர் என்று பெயர். அவருடைய மகன் ராமச்சந்திர பாண்டுரங்க எவனேக்கர் என்கிறவர்தான் பின்னர் தத்தியா தோப்பே என்று பெயர் பெற்றவர். தத்தியா என்பது ஒரு செல்லப் பெயர். சிறு பையனாக இருந்தபோது, படிப்பில் கெட்டிக்காரனாக இருந்ததற்காக, மாஜி பேஷ்வா, அவனுக்கு ஒரு தொப்பியைத் தந்ததாகவும், அத்தொப்பி காரணமாக அவருக்குத் தோப்பே என்கிற பெயர் நிலைத்துவிட்டதாகவும் சொல்கிறார்கள். அவர் 1813ல் பிறந்ததாகத் தெரிகிறது. பாஜிராவ் இறந்த பிறகு நானா சாகிப்பின் சபையில் தத்தியா தோப்பே கணக்கராகவும் ராயஸமாகவும் இருந்ததாகத் தெரிகிறது.

பின்னர் ஜான்சிக்குச் சென்ற லட்சுமிபாய், நானா சாகிப், தத்தியா தோப்பே மூவரும் சேர்ந்து இள வயதில் ராணுவ ஆயுதப் பயிற்சியும் வேறு வீரச் செயல்களிலும் பயிற்சி பெற்றதாக ஒரு கதை சொல்கிறது. ஆனால் அதை உண்மை என்று சொல்லமுடியாது. மூவரும் சிறு வயதில் மாஜி பேஷ்வா பாஜிராவின் மேற்பார்வையில் வளர்ந்தவர்கள் என்று மட்டும் சொல்லலாம். பேஷ்வா இறந்தபிறகு நானா சாகிப்பின் அரண்மனையில் அவருக்கு மிகவும் வேண்டியவராக இருந்தவர் தத்தியா தோப்பே. அவருக்கு ஒரு மனைவியும் குழந்தைகளும் இருந்ததாகவும் அவர் தன் மற்ற சகோதரர்களுடன் வசிக்காமல் தனியாக வசித்து வந்தவர் என்றும் தெரிகிறது.

மீரட், டெல்லி, கான்பூர் என்று ராணுவத்தில் கலகம் பரவியபோது ஆங்கிலேயர்கள் மிதப்புடன் அதிக ஆயத்தம் இல்லாமலேதான் இருந்தார்கள் என்று தெரிகிறது. கலகம் வருவதற்கான அறிகுறிகள் பல தெரிந்தும், ஒரு ஆங்கில அதிகாரியும் அதை எதிர்கொள்ள எந்த நடவடிக்கைகளும் எடுக்கவில்லை. இந்த நிலையில் மீரட்டில் 1857 மே 10ல் கலகம் தொடங்கியது. டெல்லியை மறுநாளே இந்தியச் சிப்பாய்கள் கைப்பற்றி விட்டார்கள். இந்தச் செய்திகள் மே 14 அன்று கான்பூரை எட்டின. இந்திய ராணுவ முகாமில் என்ன நடக்கிறது என்று ஆங்கிலேய அதிகாரிகளுக்குத் தகவல் எட்டினாலும், அவர்கள் எதற்கும் கவலைப்பட்

டதாகத் தெரியவில்லை. ஐரோப்பியர்களைப் பாதுகாப்பான இடத்தில் வைத்துச் சமாளித்துக்கொள்ளலாம் என்று நினைத்தார்கள் போலும்.

நானாசாகிப் கான்பூருக்குப் பக்கத்தில் இருந்த பித்தூரில் இருந்தார். அவரிடம் ஒரு சிறிய ராணுவப் படையும் இருந்தது. கும்பெனிக்காரர்களுக்கு மகஜருக்கு மேல் மகஜராக அனுப்பிக் கொண்டிருந்தாலும், நானாசாகிப் கான்பூரிலிருந்த ராணுவ அதிகாரிகளுக்கு எல்லாம் பழகிய நண்பராக இருந்தார். தான் அளித்த விருந்துகளுக்கெல்லாம் அவர்களையும் அவர் அழைப்பார். ஆனால் அவர் ஆங்கிலேயர்கள் அளித்த விருந்துகளுக்குப் போகமாட்டார். ஆங்கிலேயர்கள் அவரைத் தங்கள் நண்பராகவே கருதினார்கள். கான்பூரில் கலகம் ஏற்பட்டவுடன் நானாவின் உதவியை ஆங்கிலேயர் நாடினர். நானாசாகிபே ஆங்கிலேயர்களுக்கு உதவுவதற்கு முன் வந்ததாகச் சொல்கிற சரித்திர ஆசிரியர்களும் உண்டு. தத்தியா தோப்பேக்கு இஷ்டம் இல்லாவிட்டாலும் நானாசாகிப்புடன் போய் கான்பூர் கஜானாவை ஆங்கிலேயர்களுக்காகக் காவல் காத்தார். கலகம் ஆரம்பித்த பின் சில நாட்கள் கழித்துத் தான் நானாவும் தத்தியா தோப்பேயும் கலகக்காரர்களுடன் சேர்ந்து கொண்டார்கள். நானா தானாகவே கலகக்காரர்களுடன் சேர்ந்ததாகவும், தத்தியா தோப்பே சொல்லிச் சேர்ந்தார் என்றும் கட்டாயப்படுத்தப்பட்டார் என்றும் பல கதைகள் உண்டு.

கான்பூரில் பந்தோபஸ்தாக ஆரம்பத்தில் காபந்து பண்ணிக்கொண்டு இருந்த ஆங்கிலேயர்கள் ஆயிரத்துச் சொச்சம் பேர்வழிகளில் பாதிப்பேர் ஸ்திரிகள் குழந்தைகள். முன்னூத்திச் சொச்சம் பேர் ஆங்கில ராணுவ வீரர்களும் அதிகாரிகளும். ஐம்பது பேர் இந்திய வேலைக்காரர்கள். நூறு பேருக்கு அதிகமாக கிழவர்கள் அல்லது வியாதிக்காரர்கள். இவர்களை எதிர்த்துப் போராடியவர்கள் மூவாயிரம் ஆயுதம் தரித்த இந்தியச் சிப்பாய்கள்.



**செல்வி கு.பெ.ஜோ.?**

ஆந்திர கவர்னர் செல்வி குமுத் பென் ஜோஷி தெலுங்கு மொழி கற்றுக் கொண்டால்தான் ஆந்திர மக்களோடு நெருங்கிப் பழக வாய்ப்புக் கிடைக்கும் என்று நினைத்தார்... அதனால் தமக்குத் தெலுங்கு மொழியைக் கற்றுத் தரக்கூடிய ஒரு ஆசிரியரைத் தேடினார். ஆனால்... ஒரு தெலுங்கு மொழி ஆசிரியர் கூட கவர்னர் மாளிகையின் பக்கம் இதுவரை தலைகாட்டவே இல்லையாம்! (எப்படி ராமாராவ் அரசியல்?)

என்.டி.ஆருக்கு கவர்னர் செல்வியால் இன்னொரு தலைவலி! அடிக்கடி பல மாவட்டங்களுக்கு 'டூர்' போய்விடுகிறார் செல்வி. மக்களை அவரே நேரடியாய் சந்தித்து அவர்களுடைய குறைகளைக் கேட்டுத் தெரிந்து கொள்கிறாராம்! (என்.டி.ஆர் என்ன வேடிக்கையா பார்த்துக் கொண்டிருப்பார்) மாவட்ட கலெக்டர்களுக்கு ரகசிய தாக்கீது! செல்வி டூர்களுக்கு முக்கியத்துவம் தர வேண்டாம். செல்வி வந்தால் கண்டுகொள்ளாமல் இருந்துவிடுங்கள் என்பதுதான் அந்த ரகசிய செய்தி!

இப்போதெல்லாம் செல்வி கு.பெ.ஜோ. ஆந்திர மாவட்டங்களில் டூர் அடிக்கும்போது சம்பந்தப்பட்ட மாவட்ட அதிகாரிகள் ஒரு நாள் காஷுவல் லீவ் போட்டுவிட்டுப் போய் விடுகிறார்களாம்! இந்த விஷயங்களையெல்லாம் ராஜீவிடம் சொல்லி ரொம்பவும் வருத்தப்பட்டுக் கொண்டாராம் செல்வி கு.பெ.ஜோ.!

சன்டே—செல்லப்பா

ஆங்கிலேயர்களைப் படகில் போக அனுமதிப்பதாகச் சொல்லி, படகு கிளம்பும் போது அவர்களில் பெண்கள் குழந்தைகள் உள்படப் பலரை இந்தியச் சிப்பாய்கள் சுட்டுக் கொன்று விட்டதாகத் தெரிகிறது. இதற்குக் காரணம் தத்தியா தோப்பே தான் என்று சொல்பவரும் உண்டு. ஆனல் அப்போது அவர் தளபதியாக இல்லை. நானசாகிபின் மந்திரியாக மட்டும் தான் இருந்தார்.

கான்பூர் கலகக்காரரர் கைவசம் வந்த கான்பூரை ஆங்கிலேயர்கள் மீண்டும் கைப்பற்ருமல் பாதுகாப்பது தத்தியா தோப்பேயின் கடமையாயிற்று. அப்போது தான் தத்தியா தோப்பேயை நானு சாகிப் தளபதியாக நியமித்தார். இந்திய ராணுவத்தின் படைத் தலைவனுக தத்தியா தோப்பேயின் சாகசங்களும், வீரச் செயல்களும் முன் யோசனைகளும் ஆங்கில ராணுவ அதிகாரிகளின் பாராட்டையே பெற்றன என்பது சரித்திரப் பிரசித்தமான விஷயம். இந்தியாவின் முதல் சுதந்திரப் போரின் மிகச் சிறந்த தளபதி என்று வீர ஸாவர்க்கார் தன் சுதந்திரப் போராட்டச் சரித்திர நூலில் கூறுகிருர். நீலன், ஹுப்லக், லாரன்ஸ் இவர்களுடன் ஒப்பிடும் போது, தத்தியா தோப்பே அவர்களைப் போல காரணமில்லாமல் படுகொலைகள் செய்வதில் ஈடுபடவில்லை என்றும் ஸாவர்க்கார் சொல்லுகிருர். அதுவும் ஆங்கிலக் கார்னல் நீலின் அக்கிரமங்கள் ஆங்கில எதிர்ப்புக்கு ஒரு தூண்டுதலாகவே இருந்தன என்றும் சொல்ல வேண்டும்.

வட இந்தியாவில் பல இடங்களிலிருந்து இந்திய சிப்பாய்களைத் தன்பால் ஈர்த்துக் கொள்வதில் தோப்பே மிகவும் சாமர்த்தியமாகச் செயல்பட்டார். பின்னர் ராணுவம் என்று ஒன்றும் இல்லாத போது, மத்தியப் பிரதேசக் காடுகளில் கொரில்லா போராளியாகி, ஒரு வருஷத்துக்கும் அதிகமாக ஆங்கிலேயர்களுக்குத் தொல்லை கொடுத்தார். தன் சுற்றத்தாரைக் காப்பாற்றுவதற்காக தோப்பேயை அவர் தோழனே ஒருவன் காட்டிக் கொடுத்ததாகச் சொல்லுகிருர்கள். அவரை 1859-ல் தூக்கிலிட்டு விட்டார்கள். ஆனல் அப்படித் தூக்கிலிடப்பட்டது தத்தியா தோப்பே அல்ல என்று சொல்பவர்களும் உண்டு. 1862 வரையில் தோப்பே ஒரு சன்னியாசியாக உயிர் வாழ்ந்தார் என்று சொல்கிற கதையும் ஒன்று உண்டு.

தத்தியா தோப்பேயின் மறுமலர்ச்சிச் சிந்தனைகள் வார்த்தைகளில் உருப்பெறவில்லை; செயல்களாகத் தான் உருப்பெற்றன என்பது தான் உண்மை. ●



ஒருவர்: நீங்க மாடி போர்ஷனுக்கு வருவது பற்றி கவலையில்லை... அங்கு பேய் இருப்பதாக ஒரு பேச்சு இருக்கிறது... பரவாயில்லையா?...

மற்றவர்: பேயிடம் பாதி வாடகை வாங்கிக் கொள்வதானல் பரவாயில்லை தான்!

—செல்வராஜ்

வைத்துக்கொண்டு, வலது கையால் கண்ணைக் கசக்கிக் கொண்டிருக்கிறார்கள்.

டைரக்டர் ராஜசேகருக்கு சொந்தப் படம் எடுக்கவேண்டும் என்று ஆசை வந்தபொழுது, தயாரிப்பாளர் திருப்பூர் மணியும் சேர்ந்து கொண்டார். அதற்குப் பிறகு போனஸாக இன்னொருவரும் சேர்ந்து கொள்ள மூன்று தயாரிப்பாளர்கள் சேர்ந்து எடுத்திருக்கும் படம் 'காலமெல்லாம் உன் மடியில்'!

சுமார் ஒன்றரை வருடங்களுக்கு முன்பு முரளி 'பூ விலங்கு' புகழோடு இருந்தபொழுது ஒரு லட்சம் கொடுத்து கதாநாயகனை ஒப்பந்தம் செய்தார்கள். ஜெயஸ்ரீக்கு இதுதான் முதலில் ஒப்பந்தமான படம். 'தென்றலே என்னைத் தொடு'க்கு முன்பு முப்பதாயிரம் கொடுத்து கதாநாயகியாகத் தேர்வு செய்தார்கள்.

இப்படம் ஆரம்பிக்கும்பொழுது டைரக்டருக்கு இருந்த நம்பிக்கை அவ்வப்பொழுது அவருக்கு ஏற்படும் குழப்பங்களால் காணாமல்போய்க் கொண்டிருந்தது. காரணம்?

இவர் டைரக்ஷனில் வந்த மம்பட்டியான் ஓடியது கதைக்காக என்கிறார்கள்; பிறகு கமல், ரஜினி ஆகியோர் இவர் டைரக்ஷனில் நடிக்கும்போது படம் ஓடியது ஹீரோக்களுக்காக என்றார்கள். 'கண்ணீர்ப் பூக்களும்' 'அம்மா'வும் வெற்றியடையாததற்குக் காரணம் ராஜசேகரே என்றார்கள்!



'காலமெல்லாம் உன் மடியில்'—முரளி, ஜெயஸ்ரீ, ரா.சங்கரன்

அவ்வப்பொழுது இவர் ஓய்வாக இருக்கும்பொழுதெல்லாம் ஐந்து நாள், பத்து நாள் என்று படப்பிடிப்பை நடத்தி, பதினைந்து லட்ச ரூபாய் செலவில் படத்தை முடித்து விட்டார்கள்.

தயாரிப்புச் செலவு குறைவாக இருப்பதாலும், பெரும்பாலான இடங்களில் ஒரேயடியாகப் படுத்து விடாமல் 'தத்தக்கா, புத்தக்கா' என்று ஓடிக் கொண்டிருப்பதாலும், முதலீடு செய்த விநியோகஸ்தர்கள் கொஞ்சம், கொஞ்சமாகப் பணத்தை வசூல் செய்து விடுவார்கள்.

—செல்வமுத்து

---



கடலில் மூன்று முறை...

இல்லாத ஒரு நாட்டைத் தேடி ஜேம்ஸ் குக் என்பவர் 1768 முதல் 1779 வரை பசிபிக் சமுத்திரத்தில் மூன்று முறை நீண்ட பிரயாணம் செய்தார். பல திறமைகள் உடைய குக், வரைபடங்களை மிகச் சரியாக வரைவதில் வல்லவர்.

வி. சீனு

இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனையாளர்கள்-13

# வேதநாயகம் பிள்ளை

## க.நா.சுப்ரமண்யம்

தமிழர்களுக்கு வேதநாயகம்பிள்ளையைத் தமிழில் முதல் நாவலை எழுதியவர் என்று இப்பொழுதுதான் சில வருஷங்களாக பரவலாகத் தெரிய வந்திருக்கிறது. இன்னமும் இலக்கிய மறுமலர்ச்சிக்கு அப்பால், வேறு பல மறுமலர்ச்சித் துறைகளிலும் அவர் பங்கு என்ன என்பது சரிவரத் தெரிந்திருப்பதாகச் சொல்ல முடியாது. இந்தியர்களிடையே ஆட்சி செலுத்திய குருட்டு நம்பிக்கைகள் விலகி அவர்கள் அறிவுள்ளவர்களாக வாழ வேண்டும் என்பதில் அவருக்கு சிரத்தை இருந்தது. இன்று சொல்வதுபோல ஆண்களுக்குச் சரிநிகர் சமானமாகப் பெண்கள் வாழ வேண்டும் என்றும் அதற்கான அளவில் அவர்களுக்குச் சந்தர்ப்பங்கள் கல்வியறிவு முதலியவற்றுக்கு வசதி செய்து தரவேண்டும் என்றும் அவர் நம்பினர். சமுதாயத்தில் கல்வி, நீதிபரிபாலனம், ஜாதி அடிப்படை ஒழிப்பு போன்ற பல துறைகளிலும் அவருக்கு நூதனமான, அவர் காலத்துக்குப் புரட்சிகரமான பல சிந்தனைகள் இருந்தன.

இவை எல்லாவற்றுக்கும் மேலாக மூன்றாவது தலைமுறை தமிழ்க் கிறிஸ்தவராக இருந்த அவருக்கு சர்வ மத சமரச மனப்பான்மையும் இருந்தது தெரிகிறது. பத்தொன்பதாம் நூற்றாண்டில்-அவர் காலம் 1826 முதல் 1889 வரையில்-அந்தக்காலம் சற்றேறக்குறைய ஜோதி ராமலிங்கத்தின் காலம். மாயவரம், சீர்காழிப் பகுதிகளில் முனிசிபாக வேலை பார்த்த வேதநாயகம் பிள்ளை ஜோதி ராமலிங்கத்தை இரண்டு மூன்று தடவை சந்தித்திருப்பதாகவும் தெரிகிறது. அந்தச் சந்திப்பின் முழு விவரங்கள்தான் தெரியவில்லை. "ஒன்றே குலம் ஒருவனே தெய்வம்" என்று ஜோதி ராமலிங்கம் சொன்னதையும், எல்லா மதங்களும் தங்கள் தங்கள் அளவில் தங்கள் தங்களுக்குட்டியவரையில், ஒரே பரம்பொருளை அடைவதற்குத்தான் பல்வேறு வழிகளைச் சுட்டிக்காட்டுகின்றன என்று ராமகிருஷ்ண பரமஹம்ஸர் சொன்னதையும் அவர் ஏற்றுக்கொண்டிருப்பார் என்றும் தோன்றுகிறது. அவரே சர்வ சமய சமரசக் கீர்த்தனைகள் என்று பல தமிழ்ப் பாட்டுக்கள் பாடியிருக்கின்றார். ஆன்மீக சாதன வழிகளிலும் மதச் சீர்த்திருத்தமாகவும், ஜோதி ராமலிங்கரும், ராமகிருஷ்ண பரமஹம்சரும் சொன்னதையே வேதநாயகம் பிள்ளையும் சொல்லியிருக்கிறார் என்றுதான் சொல்லவேண்டும். இந்தப் போக்கு இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளில் மிகவும் முக்கியமான ஒரு அம்சம். மறுமலர்ச்சியின் ஒரு ஆணிவேர் என்று கூட இதைச் சொல்லலாம்.

அவருடைய நாவலாகிய பிரதாப முதலியார் சரித்திரத்தில் அவர் கதாநாயகி ஞானம்பாள் ஆண்வேடம் பூண்டு அரசாளும்போது அவள் வாய்மூலமாக இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகள் பலவற்றை ஆசிரியர் விவரமாகச் சொல்லுகிறார். நாவலில் இந்த ஐந்தாறு அத்தியாயங்களுமே கதைப் போக்கிற்கு அவசியம் இல்லை. ஆனால் ஆசிரியரின் மனப்போக்கையும் கல்வி,

மொழி, சமுதாயம், நீதி பரிபாலனம், அரசாட்சி பற்றிய கருத்துகள் இவைக ளெல்லாம் பற்றி அவர் என்ன நினைத் தார் என்பது பற்றித் தெரிந்துகொள்ள நமக்கு மிகவும் உதவுகிறது. ஆன்மீகம் என்று ஒன்றைத் தவிர மற்றதை எல் லாம் ஆசிரியர் தொட்டிருக்கிருர். பூரா வும் ஆராய்ந்து அவர் சமகாலத்துச் சிந்தனைகளிலிருந்து அதை எப்படி நவீ னமான புரட்சிகரமானவையாக இருக் கின்றன என்று தெரிந்துகொள்வது அவசியம். அப்படிப் பூர்ணமாகத் தெ ரிந்துகொள்ளும்போதுதான், இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளில் வேதநாய கம் பிள்ளையின் இடம் நமக்கே தெளி வாகும்.



மற்ற மறுமலர்ச்சி சிந்தனையாளர் கள் சிலபேரை பற்றி நாம் விரிவாக விசாரித்துத் தெரிந்துகொண்டிருக்கி ருேம். முக்கியமாக வட நாட்டுப் பெரி யவர்கள் பலர் பற்றி மிகவும் விஸ்தார மாகப் பிரசாரம் செய்கிற அளவில் எழுதியிருக்கிருர்கள், பல நூல்கள் கிடைக்கின்றன. அந்த அளவுக்கு ராஜா சரஃபோஜியைப் பற்றியும் வேதநாய கம் பிள்ளை பற்றியும் தமிழர்களுக்குக் கூட அதிகமாகத் தெரியக்கூடிய வகை யில் ஒன்றும் எழுதப்படவில்லை, ஆரா யப்படவுமில்லை. இவர்களையும் ஜோதி ராமலிங்கத்தைப் பற்றியும் இதுபோல நாட்டில் பரவலாகக் கிடக்கும் பல ரைப் பற்றியும், விரிவாக ஆராய்ந்து இந்தியர்கள் எல்லோருக்கும் தெரிய வரும் வரையில் இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைச் சரித்திரம் பூர்த்தியாகிவிட்ட தாகப் பரிபூரணம் அடையாது என்றே சொல்ல வேண்டும்.

உதாரணமாக, இந்திய இலக்கிய மறுமலர்ச்சியில், வங்க இலக்கிய ஆசி ரியர்கள், மைக்கேல் மதுசூதன், பங் கிம் சந்திரர் போன்றவர்கள் காலத் தால் முதல்வர்கள் என்பதனுல் மற்ற மொழி இலக்கியக்காரர்களும் பெரு மளவுக்கு அவருடைய வழிகளையே பின்பற்றினுர்கள். அவர்கள் ஆங்கில இலக்கியத்தில் "ரொமண்டிக்" இயக் கத்தைப் பின்பற்றினுர்கள். முக்கியமா கப் பங்கிம் சந்திரர், ஸர் வால்டர் ஸ்காட்டின் பாணியில் தன் நாவல்களை எழுதினுர். அதைப் பின்பற்றிய இந்திய நாவலாசிரியர்களில் பெரும்பாலோர் "ரொமண்டிக்" வழிகளைப் பின்பற்று வது பெரும் மரபாகிப் போய்விட்டது. இதற்கு நேர் மாருக, வேதநாயகம் பிள்ளையும் மலையாள மொழியில் முதல் சொந்த நாவலை எழுதிய சந்துமேன னும் ஆங்கில இலக்கியத்தில் வேறொரு கிளையான "காமிக்" ஹாஸ்ய வழிக ளைப் பின்பற்றினுர்கள். பின்னவர் இரு வரையும் பற்றி இந்தியாவில் பல மொழிக்காரர்களுக்கும் எடுத்துச் சொல்ல சமீப காலங்களில் எந்த விமர் சகனும் முன்வரவில்லை. அவர்களின் நூல்கள் கூடப் பிற மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டு படிக்கக் கிடைக்கவில்லை. மற்ற மொழிகளிலும் இவர்களுடைய 'காமிக்' பாதிப்பு ஏற் பட்டிருந்ததனுல் இலக்கிய மறுமலர்ச்சி வேறு உருவம் பெற்றிருக்கலாமோ என்று எண்ணத் தோன்றுகிறது. இது வும் இந்திய மறுமலர்ச்சியில் அதன் பூரணத்தில் ஒரு குறைபாடு. சுதந்திரம் வந்து நாற்பது ஆண்டுகளுக்குப் பிற கும் ஒரு மொழிக்காரருக்குப் பிற மொ ழிகளில் என்ன நடக்கிறது என்று தெரி

யவில்லை. ஆங்கில இலக்கியத்தில் நடப்பது தெரிய வருகிற அளவுகூடத் தெரிவதில்லை என்பது மறுமலர்ச்சியில் ஒரு மாற்றுக் குறைவாகத்தான் தோன்றுகிறது.

கல்வியையும் அது இந்திய சமுதாயத்தில் ஏற்படுத்தக்கூடிய மாறுதல்கள் பற்றியும் வேதநாயகம் பிள்ளை பூரணமாகச் சிந்தித்து விவரமாகவே எழுதியிருக்கிறார். அவர் ஒரு விதத்தில் லார்ட் மெக்காலேயின் ஆங்கிலக் கல்வி இந்தியாவுக்கு வருமுன் கல்வி பயின்றுவிட்டவர் என்று சொல்லலாம். அவர் காலத்துக்கு ஒரு நூறுண்டு முன்னதாகவே தஞ்சை ஜில்லாவில் ஆங்கிலப் புழக்கம் ஏற்பட்டுவிட்டது. அவர் ஊராகிய மாயூரத்துக்குப் பக்கத்தில் உள்ள தரங்கம்பாடியில் சிறு அளவிலேனும் ஆங்கிலக் கல்வி ப்ரோடஸ்டண்ட் மத போதகர்களின் உதவியால் ஆழமாக வேரூன்றி இருந்தது. கிறிஸ்தவப் பிள்ளை என்பதனால் இந்தக் கல்வி அவருக்குப் பூரணமாகக் கிடைத்திருக்க வேண்டும். கும்பினி அரசாங்கம் ஏற்றுக் கொண்ட கல்வி அல்ல இது. மனித நேயம் உள்ள பாதிரிமார்கள் உருவாக்கிய கல்வி.

இதைத் தவிர ஒரு குறிப்பிட்ட அளவிலாவது, பரம்பரையாக வந்த தமிழ்க்கல்வியும் அவருக்குக் கிடைத்திருக்கிறது என்றுதான் சொல்ல வேண்டும். பெரிய புலவர்களிடம் தமிழ்ப் பாடங்களை முறையாகக் கேட்டு அவர் தம் தமிழ் அறிவை வளர்த்துக் கொண்டிருந்தார். அதனால் அவரால் தன் காலத்திய பெரும் தமிழ்ப் புலவர்களுடனும், மடாதிபதிகளுடனும் பழக முடிந்தது என்பது தெரிகிறது. மகாவித்வான் மீனாக்ஷிசுந்தரம்பிள்ளை, கோபால கிருஷ்ண பாரதியார், ஆறுமுக நாவலர் முதலியவர்கள் அவருடைய நண்பர்களாக இருந்தார்கள் என்பது தெரிய வருகிறது. ஆங்கிலம் அறிந்து, பொறுப்பான சர்க்கார் உத்தியோகத்தில் இருந்ததினால் அவருக்கு புலவர்களிடையே மதிப்பு இருந்ததே தவிர, கவி என்றோ, உரைநடையில் நாவல் எழுதியவர் என்றோ அவர் காலத்தில் அவருக்கு மதிப்பு இருந்ததாகத் தெரியவில்லை. உரைநடையில் எழுதுவதற்கு அவ்வளவாக மதிப்பில்லாத காலத்தில் புலவர்களின் நண்பரான அவர் இரண்டு நாவல்கள் எழுதியதை மிகவும் துணிகரமான செயல் என்றுதான் சொல்ல வேண்டும்.

"தமிழில், ஆங்கிலத்தில் இருப்பது போல வசன காவியங்கள் இல்லை என்கிற குறையைப் போக்குவதற்காக நான் இந்த வசன காவியத்தை எழுதினேன்" என்று எழுதியுள்ளார். நாவல் என்கிற இலக்கியத் துறையை வசன காவியம் என்று சொல்கிற மரபு ஆங்கில இலக்கியத்தில் உண்டு. வசன காவியம் என்று அவர் சொன்னது நாவல்களை அல்ல; உரைநடை நூல்களைத்தான் என்று வைத்துக் கொண்டாலும் கூட, அவர் எழுதிய பிரதாப முதலியார் சரித்திரம், சுகுண சுந்தரி என்கிற இரண்டு நாவல்களுமே வசன காவியங்களாக அமைந்துள்ளன என்று சொல்லலாம்.

வேடிக்கையாகச் சில விஷயங்களைச் சொல்லி, மனிதர்களைத் திருத்தி விடலாம் என்கிற நம்பிக்கையுள்ள நாவலாசிரியர் வேதநாயகம் பிள்ளை. தன் நாவலின் ஆரம்பத்தில் முரட்டுத்தனமான ஆற்காடு நவாபின் போக்கைச் சுட்டிக் காட்டுகிறார். தன் நாயகன் பிரதாபனின் சிறு வயதில் வேடிக்கையாகவே பல கல்வி முறைகளையும், அவர் காலத்திய கல்விப் போக்குகளையும் எடுத்துச் சொல்லுகிறார். கதாநாயகி ஞானம்பாள் கல்வி கற்கத் தொடங்கிய காலத்திலே பெண்களுக்குக் கல்வியின் அவசியத்தைப் பற்றி அழுத்தமாக நாவலில் கூறுகிறார். ஜாதகம் பார்த்துக் கல்யாணம் செய்கிற பழக்கத்தை மூடப் பழக்கம் என்று சாடுகிறார். முன்பின் அறியாத நாலு கல்யாண கோஷ்டிகள் ஒரு புது இடத்தில் சந்தித்துத் திருமணம் செய்துகொண்டதில், ஜாதகப் பொருத்தம் பார்த்துச் செய்த கல்யாணம்தான் என்றாலும் ஜோடி மாறிப்போன பிறகும், இரு தம்பதியரும் சௌகரியமாகவே இருந்தார்கள் என்று

சொல்லி, ஜாதகம் பார்ப்பதன் விஷயத்தைச் சுட்டிக் காட்டுகிறார். ஆவேசம் வருவது, பூஜை, பலி, உடுக்கு அடிப்பது எல்லாவற்றையும் பற்றி பாதி வேடிக்கையாக, பாதி கனமாகவே தன் கருத்துக்களைச் சொல்கிறார்.

தன் நாவலில் வேதநாயகம் பிள்ளை அரசியல் பற்றி அதிகமாகச் சொல்லாவிட்டாலும் குடி ஆட்சியை விட முடி ஆட்சிதான் சிறந்தது என்று தெரிவிக்கிறார். அவர் காலத்தில் அவருக்குத் தெரிந்த ஒரே குடியாட்சி புதுச்சேரியில் நடந்ததாகத்தான் இருக்க வேண்டும். மொத்தத்தில் குடியாட்சியில் ஜனங்களுக்கு அநியாயம் வழங்கப்பட வாய்ப்பு அதிகம் உண்டு என்று நினைக்கிறார். இந்த விஷயத்திலும் வேதநாயகம் பிள்ளை ஆங்கில "ரொமெண்டிக்" இயக்க இலக்கிய ஆசிரியர்களிடமிருந்து மிகவும் மாறுபட்டவர் என்பதைக் கவனிக்க வேண்டும். ஷெல்லி போன்றவர்கள் ஃபிரான்ஸ் புரட்சியையும், அது காரணமாக ஏற்பட்ட குடி அரசையும் ஏற்றுக் கொண்டவர்கள். ஆனால் வேதநாயகம் பிள்ளையின் கருத்தில் மன்னன் ஆளுவதுதான் நல்ல ஆட்சி. ஆனால் நல்ல ஆட்சி நடத்துகிற மன்னன் எப்படி எப்படி இருக்க வேண்டும் என்பதை ஞானம்பாள் வாயிலாகச் சற்று விரிவாகவே சொல்லுகிறார்.

நீதி பரிபாலனம், நீதிபதிகளின் நேர்மை, நேர்மையின்மை, சர்க்கார் அதிகாரிகள் பக்ஷபாதமாக நடப்பது, கைக்கூலி வாங்குவது என்பதெல்லாம் பற்றி நாவலில் வலிந்து இடம் ஏற்படுத்திக்கொண்டு விஸ்தாரமாகப் பேசுகிறார். அதிகாரிகள் தங்கள் அதிகாரத்தைத் துஷ்பிரயோகம் செய்வது, ஓர வஞ்சனை செய்வது பற்றியும், நீதி இலாகா மற்றும் பல துறைகளிலும் நடக்கிற அக்ரமங்கள் பற்றியும் விரிவாக எழுதியிருக்கிறார். இன்று நமது வாழ்வில் எண்பதுகளில் நடக்கிற பல காரியங்களை அவர் தீர்க்கதரிசனத்துடன் கண்டு சொல்கிறார் என்பது ஆச்சரியமாக இருக்கிறது.



யாரைக் காப்பாற்றுவாய்?

தென்னாப்பிரிக்காவில் காந்திஜி நடத்திக்கொண்டிருந்த பள்ளிக்கு ஒரு முறை அவரின் குருநாதர் கோகலே வந்திருந்தார்.

மாணவர்களை கோகலே கேட்டார். "அன்னையும் பிதாவும் இரண்டு பக்கத்தில் உடன்வர நீ பெரிய காட்டின் வழியே போய்க் கொண்டிருக்கிறாய். வலது புறத்தில் நாலடி தூரத்தில் தந்தை, இடது புறத்தில் நாலடி தூரத்தில் தாய். திடீரென்று எதிரே நாலடி தூரத்தில் ஒரு சிங்கம் பாய்ந்துவந்துவிட்டது. தந்தையைக் காப்பாற்ற வலதுபுறம் சாயமுயன்றால் சிங்கம் உன் தாயைக் கொன்றுவிடும்; அதேபோல் தாயைக் காப்பாற்ற இடதுபுறம் சாயமுயன்றால் சிங்கம் தந்தையைக் கொன்றுவிடும். நீயாரைக் காப்பாற்றுவாய்?" என்று ஒவ்வொரு மாணவரையும் கேட்டார். மாணவர்கள் யாருக்குமே விடை கூற இயலவில்லை. பின் கோகலே காந்திஜியை நோக்கினார். காந்திஜி பதில் கூறினார்.

"இருபுறமும் சாயமாட்டேன்! நேர் எதிரே நிற்கும் சிங்கத்தின் மீது பாய்ந்து என்னையிழக்கச் சித்தமாகிவிடுவேன். இதனால் இருபுறமும் இருக்கும் அன்னையும், தந்தையும் நிச்சயம் காப்பாற்றப்பட்டு விடுவார்கள்!"

—ஆதாரம் காந்திஜி சரித்திரம்

-ஆர்.கே. அருள்செல்வன்.

எல்லாவற்றுக்கும் மேலாக, வேதநாயகம் பிள்ளை தமிழ் மொழியின் பெருமையையும் தமிழர் வாழ்வில் மொழியின் ஸ்தானத்தைப் பற்றியும் எழுதியிருக்கும் பகுதிகளை இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளின் அடிப்படை, அஸ்திவாரம் என்றே சொல்ல வேண்டும். மறுமலர்ச்சி என்பதும், சிந்தனைகள் என்பதும் இரண்டுமே பெருமளவுக்கு மொழியை அடிப்படையாகக் கொண்டவை. வேதநாயகம் பிள்ளைக்கு வங்கத்தில் ஈஸ்வரசந்திர வித்யாசாகர் புதுக் கல்வி பூராவும் வங்க மொழியில் தான் தரப்பட வேண்டும் என்று வற்புறுத்தியது தெரியுமோ தெரியாதோ, நமக்குத் தெரியாது. தெரிந்திருக்க வேண்டும். வேதநாயகம் பிள்ளைக்கு சமகாலத்தவரான வீரேசலிங்கம் பந்துலு சென்னையில் ஈஸ்வர சந்திரரின் புகழைப் பரப்பிக் கொண்டிருந்தார். கச்சேரிகளில், கல்விச் சாலைகளில், வீட்டில், வெளியில் எல்லாம் தமிழ் முழங்க வேண்டும் என்று வேதநாயகம் பிள்ளை அடித்துச் சொன்னார். ஈஸ்வர சந்திர வித்யாசாகரை விட அதிகமாக வே தாய்மொழி பக்தியை வேதநாயகம் பிள்ளை உருவாக்கிக் காட்டுகிறார்.

தாது வருஷப் பஞ்சத்தில் தன் சொந்த முயற்சியால் பட்டினி கிடந்த ஜனங்களுக்கு வேதநாயகம் பிள்ளை கஞ்சி காய்ச்சி ஊற்றியதைப் பாராட்டி கோபாலகிருஷ்ண பாரதியார் அவரை "நீயே புருஷ மேரு" என்று பாடியதாக டாக்டர் சாமிநாத அய்யர் குறிப்பிடுகிறார். நர ஸ்துதியாக பாரதியார் பாடிய பாட்டு இது ஒன்றுதானும். மனித நேயத்தின் கருவியாக இதை எண்ணிப் பார்க்கும்போது டால்ஸ்டாயின் பஞ்ச நிவாரண அனுபவங்கள் நமக்கு நினைவுக்கு வருகின்றன.

இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளில் பல சரடுகள் வேதநாயகம் பிள்ளையிடம் காணக் கிடக்கின்றன. அவற்றை விரிவாகக் காண முயலுவது நமது கடமை. ●

எதிர்பார்த்தேன். உன் சார்பிலும், என் சார்பிலும் வேலையை நான் ஒப்புக் கொண்டு விட்டேன்'' என்ற மார்க்ரெட் ''நேரில் வா; மற்ற விபரங்கள் சொல்கிறேன்'' என்ருள்.

மார்க்ரெட் முன்பு இந்தியாவில் பல கட்டிட டிஸைனுக்காக வேலே செய்த அதே ஸ்தாபனம், இப்பொழுது அவளை இந்த வேலைக்கு கூப்பிடுகிறதாம். ''இவர்கள் எப்பொழுதும் தேசத்தின் முன்னணிக்காக பல காரியங்கள் செய்வதை நான் பார்த்திருக்கிறேன்,

கலையிலும் பல அரிய ம்யூஸிம்கள் அமைத்து, பல சிறந்த கலேப் புத்தகங்களையும் இவர்கள் வெளியிடுகிருர்கள். இவர்கள் கலைக்கு நல்ல தொண்டு செய்கிருர்கள். இப்பொழுது அவர்கள் வரும் நேரம், ஸ்மிதா. மற்றவை பிறகு பேசலாம்'' என்று மார்க்ரெட் முடிக்கும் பொழுதே, ரிஸப்ஷனிஸ்ட் கதவைத் திறந்து இரு பிரமுகர்களை உள்ளே அழைத்து வந்தாள்.

''ப்ளீஸ் கம் இன்'' என்று முகமன் கூறிய மார்க்ரெட், ஸ்மிதாவை அவர்களுக்கு அறிமுகம் செய்து விட்டு, ''மீட் மிஸ்டர் நௌரோஜி, இவர் தான் இந்தியாவின் தலை சிறந்த நௌரோஜி என்டர்ப்ரைஸஸின் தலைவர். இது அவர்களுடைய அமெரிக்கன் ரெப்ரஸெண்டேடிவ், ஜோசப் ஸ்மித்'' என்ருள்.

ஸ்மிதாவின் தலே சுற்றியது. காதல் ரீங்காரம் ''நௌரோஜி... நௌரோஜி என்னை தின்ஷாவிடமிருந்து பிரித்தவர். 'தின்ஷா' மயக்கமடைந்து ஸ்மிதா கீழே சரிந்தாள். அவள் வாய், ''தின்ஷா'' என்று முணுமுணுத்ததை நௌரோஜி கேட்டு திடுக்கிட்டார். விரைந்து அவளைத் தூக்கினுர்.

(தொடரும்)

# ராமகிருஷ்ண பரமஹம்சர்

க.நா. சுப்ரமண்யம்

ராமகிருஷ்ண பரமஹம்சரைப் பற்றி அவர் மகாசமாதி அடைந்து ஒரு நூற்றாண்டுக்குப் பிறகு, இன்று புதுசாக ஏதாவது சொல்ல வேண்டும் என்று தேடினால், எதுவும் கிடைப்பது அரிது. அவர் சகலவிதங்களிலும் இந்திய ஆன்மீக மரபோடு ஒட்டியே வந்தவர்தான் என்றாலும், இந்திய மறுமலர்ச்சி புது சிந்தனைகளில் பெரும்பங்கு வகிக்கிறார். மற்றவர்கள் பொருளாதாரம், மதம், சமூகம், அரசியல், சீர்திருத்தம் என்று எவ்வளவுதான் அலைந்தாலும், ராமகிருஷ்ணரைப் போல ஆன்மீகக் கடலில் அமைதிப் புள்ளியை அவர்கள் காண முடியாத வரையில் பூர்ணத்துவம் பெற்றவர்களாகச் சொல்ல முடியாது. ஆன்மீகத் துறையில் மட்டுமல்லாது, களில் சரித்திர ரீதியாகவும், காலதேச வர்த்தமான ரீதியிலும் பின் விளைவுகளிலும் மிக மிக முக்கியமானவர் ராமகிருஷ்ணர்.

அவர் உயிர் வாழ்ந்தது என்னவோ ஐம்பது வருஷங்கள்தான். **1836** முதல் **1886** வரை. இந்த ஐம்பது வருஷங்களில் அவர் காமார்புக்கூரிலிருந்து கல்கத்தாவிற்கும் கல்கத்தாவிலிருந்து தக்ஷிணேஷ்வரத்திற்கும், அங்கிருந்து இரண்டொரு தரம் காமார்புக்கூருக்கும் அங்கிருந்து முடிவாக தக்ஷிணேஷ்வரத்திற்கும் நகர்ந்தது தவிர, வேறு எங்கும் பயணங்கள் மேற்கொண்டதாகத் தெரியவில்லை. காசி, ராமேஸ்வரம், பூரி என்று மத சம்பந்தமான பிரயாணங்கள் கூட அவர் மேற்கொண்டதாகத்

மனித வாழ்வுக்கே முக்கியமான நிரந்தரமான மத்தியப் புள்ளியை அவருக்குப் பின் வந்த தலைமுறையினருக்கெல்லாம் காண உதவியர் ராமகிருஷ்ண பரமஹம்சர்.

அவரைப் பற்றியும், அவருடைய சாதனைகள் பற்றியும், ஓரளவுக்காவது தெரிந்து கொள்ளாத இந்தியனை இந்தியன் என்றே சொல்ல முடியாது. நவீன இந்தியா "டெக்னாலஜி", பொருளாதாரம், தொழில் வளம், சமூக முன்னேற்றம் என்று எவ்வளவுதான் முன்னேற்றம் கண்டிருப்பதாகப் பெருமைப்பட்டுக் கொண்டாலும் அதன் பின்பலத்தில் ஜோதி ராமலிங்கம், தயானந்த சரஸ்வதி, ஷிர்டி ஸாய்பாபா, ராமகிருஷ்ண பரமஹம்சர் போன்றவர்களின் உருவங்கள் பிரும்மாண்டமானதாக மறக்க முடியாததாக நிற்கின்றன. இவர் தெரியவில்லை. ராம் மோகன்ராயைப் போல பல மத சாஸ்திரங்களை, கிடைக்காத நூல்களைப் படித்து அறிந்து கொள்ள வேண்டும் என்றும், அலைந்ததாகவும் தெரியவில்லை. அவர் காலத்தில் முக்கியமாக வங்க மக்களுக்குப் புது க்ஷேத்திரங்களாக கைகாட்டி அழைத்த லண்டன், ஆக்ஸ்போர்ட், கேம்பிரிட்ஜ் என்று தேட வேண்டிய அவசியமும் அவருக்கு ஏற்படவில்லை. அவர் கடவுளை நோக்கிச் செய்த நீண்ட பயணத்துக்கு தக்ஷிணேஷ்வரத்தை ஒட்டியிருந்த காடுகளில் பயணம் செய்வது போதுமானதாக இருந்தது. குருமார்களைத் தேடிக் கொண்டுகூட அவர் போனதாகத் தெரியவில்லை. வேதாந்த, கிறிஸ்தவ, இஸ்லாமிய குருமார்கள் பலர் அவரைத் தேடி வந்து அடைந்ததாகத் தெரிகிறது. அவர்களுடைய பெ

யர்கள் அவரோடு சேர்ந்ததனல், இன்று அவர் சரித்திரத்தைப் படிப்பவருக்குத் தெரிய வருகின்றன.

சிஷ்யர்கள் குருமார்களைத் தேடி அலைவதுபோல, சில சமயம் குருமார்களும் தக்க சிஷ்யர்களைத் தேடி அலைவது நம் மரபில் உள்ள விஷயம்தான். பல்வேறு குருமார்கள் பல்வேறு சமயங்கள் ராமகிருஷ்ணரைத் தேடி வந்த மாதிரி, தன் சிஷ்யர்களில் சிறந்தவரான விவேகானந்தரைக் காணுதபோதெல்லாம் அவர் பிரிவாற்றுமையால் வருந்தியிருப்பதாக அவர் சரித்திரம் சொல்லுகிறது. இதேபோல மற்ற பல சிஷ்யர்களையும் அவர் தேடிப் போனதாகவும்தான் தெரிகிறது. குரு சிஷ்ய பரஸ்பர அன்பு என்பதற்கு ராமகிருஷ்ண பரமஹம்சரின் வாழ்க்கையிலிருந்து பல உதாரணங்களை எடுத்துக் காட்டலாம். இதுவேகூட அவர் பெருமையை அதிகரிக்கச் செய்கிறது. இதில் விசேஷம் என்னவென்றல் குரு சுட்டிக் காட்டிய பாதையில் சிஷ்யர் வெகுதூரம் முன்னேறி குருவுக்கும் தனக்கும் சம்பந்தப்பட்டவர்கள் எல்லோருக்கும் பெருமை தேடித் தந்தார் என்பதாகும்.

குரு ஜீவித்திருந்தது ஐம்பதே வருஷங்கள். இதில் முதல் இருபது, இருபத்திரண்டு வருஷங்களைத் தள்ளிவிட்டால் இருபத்தைந்து வருஷங்களில் குரு காட்டிய சாதனைகள் பிரமாதம் என்றுதான் போற்ற வேண்டும். தன் குருவைவிட பதினேரு ஆண்டுகள் குறைவாகவே சிஷ்யர் ஜீவித்திருந்தார். சுவாமி விவேகானந்தர் இறக்கும்போது, உலக வழக்கப்படி கணக்கிட்டால், முப்பத்தி ஒன்பது ஆண்டுகள் பூர்த்தி ஆகவில்லை. சாதனைகள் செய்து காட்ட அவருக்கிருந்த வருஷம் ஒரு இருபது ஆண்டுகளுக்குக் குறைவுதான். ஆனல் ஆன்மீக உலகத்தில் காலத்தை இப்படிக் கணக்கிடக்கூடாதுபோலும்! மற்றவர்கள் பூரண ஆயுட்காலத்திலும் சாதிக்க முடியாதவற்றையும், குரு, சிஷ்யர் இருவரும் செய்து காட்டியிருக்கிறுர்கள். இன்றைய இந்திய மறுமலர்ச்சிப் போக்கு, அதன் சிந்தனைகளில் பெரும்பகுதி



இவர்கள் இருவருக்கும் பெருமளவு கடன்பட்டிருக்கிறது. எவ்வளவு கடன் பட்டிருக்கிறது என்பது சொல்லி மாளாது என்றுதான் சொல்ல வேண்டும்.

இந்தச் சாதனைகள் சாத்தியமானதற்கு ஓரளவில் இடம், தேசம், காலம், வர்த்தமானம், சமுதாயம் என்று பலவும் காரணம் என்று சொன்னலும், தனி மனித மேதைதான் அரைப்பங்கு காரணமாகச் சொல்ல வேண்டும். காலம், தேசம், வர்த்தமானம் என்பதில் பத்தொன்பதாம் நூற்றுண்டின் முதற் பகுதியில் வங்கத்தில் ராமகிருஷ்ணர் தோன்றியதைச் சொல்ல வேண்டும். சரித்திர சம்பவங்களினுலும், அந்நியப் பண்பாட்டு மோதலினுலும் அது வரை இந்திய நாகரீகத்தில் ஏற்படாத ஒரு விரிசல் ஏற்பட்டுக் கொண்டிருந்தது. புது ஆங்கில முறைக் கல்வியைக் கற்று, புது மேலை நாட்டு அறிவுகளைத் தொடர்ந்து ஆங்கிலேயர்களின் பழக்க வழக்கங்களைப் பாதி வழி மேற்கொண்டு இந்த விரிசலைச் சமாளித்து விடலாம் என்று ஒரு சாரார் எண்ணினர்கள். பிரும்ம சமாஜம், ஆரிய சமாஜம் முதலியவை எல்லாம் ஓரளவுக்கு இந்தக் காரியத்தைத் தான் செய்ய முயன்றன. கிறிஸ்தவ மதப் போக்கில்

'யூனிடேரியன்' சர்ச் மாதிரி இந்து மதத்தில் அமைத்து விட்டால் சீர்திருத்தங்கள் சரியாக வந்துவிடும் என்று காலத்தால் முந்தியவரான ராம் மோகன் ராயும், ராமகிருஷ்ணரின் சமகாலத்தவரான கேஸவ் சந்திர சென்னும் எண்ணினார்கள். இந்த கிறிஸ்துவ அடிப்படையிலே கடவுளை தகப்பனாகக் கருதுவதும் ஒரே கடவுளின் பிள்ளைகளான எல்லா மக்களும் சகோதரர்கள் என்று கருதுவது பெண்களோடு ஆண்களும் சரி நிகர் சமானம் என்று எண்ணுவது, எல்லோருக்கும் சமமாக படிப்பு வேண்டும் என்று எண்ணுவது இந்த மதத்தில் காலத்தால் வந்து கலந்துவிட்ட அசட்டுத்தனங்களை அகற்றுவது, எல்லா மதங்களும் சமம் என்று எண்ணுவது என்கிற நன்மைகள் பலவும் ஏற்பட்டன. தீமைகளும் சிலது ஏற்பட்டன. பழைய இந்து மதப் பழக்க வழக்கங்கள் எல்லாமே அசட்டுத்தனமானவை என்று நினைப்பது ஒன்று. எல்லாப் பழமைவாதிகளையும் குற்றம் குறை கூறிக் கொண்டே இருப்பது இரண்டு. விக்ரக ஆராதனைகளில் நம்பிக்கை வைப்பது தவறு என்பது மூன்று. பழமைவாதிகளால் சாதிக்க முடியாததை புதிய வழிகள் சுலபமாகச் சாதித்துவிடும் என்கிற நினைப்பும் பரவலாக இருந்தது.

இதை எல்லாம் ராமகிருஷ்ண பரமஹம்சர் ஜோதி ராமலிங்கர் போன்றவர்கள் நேடியாக சிந்தித்து விவாதித்து மக்களுக்கு எடுத்துச் சொல்ல முயன்றார்கள் என்று சொல்ல முடியாது. தங்களுக்கு உகந்த வழிகளையும் சித்தாந்தங்களையும் விடாது பின்பற்றி தங்கள் உதாரணங்களாலேயே இந்திய மறுமலர்ச்சிப் போக்கைச் சரியான வழியில் திருப்பி விட முயன்றார்கள் அவர்கள். இதில் ஜோதி ராமலிங்கத்துக்குக் கவிதை கை கொடுத்தது. ராமகிருஷ்ண பரமஹம்சருக்குச் சிறு சிறு கதைகள், ஆன்மீக வழிகளை விளக்கும் கதைகள்; கைகொடுத்தன. ராமகிருஷ்ணரின் இந்தக் கதைகளைப் படிப்பவர்களுக்குத் தெரியும்– இந்தக் கதைகளில் எதையும் புதுசாக சிருஷ்டித்துத் தரவேண்டும் என்று அவர் முயலவில்லை. இந்திய தத்துவ மரபில் மக்களிடம் புழக்கத்திலிருந்த எளிய வார்த்தைகளில் கேட்போர் மனதில் நிற்கும் படியாகத் தன் கதைகளைச் சொல்ல அவர் முயன்றார். மகாகவிகள் என்று சொல்லப்பட்டவர்களுக்குக் கூடக் கைவராத ஒரு கலைத் திறனுடன் பல கதைகளை அவர் சொல்லியிருக்கிறார்.

உதாரணமாக உப்பால் ஆன ஒரு உருவம் கையில் கஜக்கோலுடன் கடலின் ஆழத்தை அளப்பதற்கு வீரத்துடன் கிளம்புகிறது என்று ஒரு கதை. அதைப் போல மனத்தில் நிற்கிற கதைகள் பலவற்றை ராமகிருஷ்ணர் உருவாக்கியிருக்கிறார்.

ஜோதி ராமலிங்கத்தைப் போலவே ராமகிருஷ்ண பரமஹம்சருக்கும் பள்ளிப் படிப்பு அதிகம் இல்லை. அதில் அவருக்கு ஈடுபாடு அதிகமில்லை என்றும் தெரிகிறது. தெய்வ சம்பந்தமான நாடகங்கள், பாடல்களில் ஈடுபாடு இருந்தது என்றும், ஆனால் அவர் அதை வளர்த்துக் கொள்ளவில்லை என்றும் தெரிகிறது. தந்தை ஒரு ஏழை பூஜாரி. முதலில் அவரிடம் சமஸ்கிருதம் படித்ததாகவும், பின்னர் கல்க்கத்தாவில் தமயனார் ஆரம்பித்த பள்ளியில் கொஞ்ச காலம் முறையாக சமஸ்கிருதம் படித்ததாகவும் தெரிகிறது. ராணி ராசமணிதேவி என்பவர் தக்ஷிணேசுவரத்தில் ஒரு காளிகோவில் கட்டி அதற்கு பூஜாரியாக அவர் தமயனாரை அனுப்பவே, ராமகிருஷ்ணரும் உதவிப் பூஜாரியாகப் போய்ச் சேர்ந்தார். முதலில், சிறிது காலம், ராசமணி தேவி ஜாதியால் தாழ்ந்தவர் என்கிற ஒரு நினைப்பு ராமகிருஷ்ணருக்கு இருந்ததாகவும், அது நாளடைவில்தான் மறைந்தது என்றும் தெரிகிறது.

சின்ன வயது முதலே தெய்வத்திடம் அசையாத நம்பிக்கையும் தெய்வத்தை நேருக்கு நேர் பார்த்துவிட வேண்டும் என்கிற லட்சியமும் அவருக்கு இருந்திருப்பதாகத் தெரிகிறது. சகஜ நிலையும், சமாதி நிலையும் அவருக்கு சின்ன வயது முதலே பழக்கமாகியது. பரவச நிலையில் தன்வசம் இழந்து

தெய்வ சாந்நித்யத்தில் இருப்பது அவருக்கு சாத்தியமாகவே இருந்திருக்கிறது. இத்தனைக்கும் அவருக்கு குரு என்று சொல்ல ஒருவரும் இல்லை. பலரும் அவரை இளம் வயதிலேயே ராமர், கிருஷ்ணர் அவதாரமாகக் கண்டு கொண்டதின் விளைவாகவே அவருக்கு ராமகிருஷ்ணர் என்கிற பெயரும் நிலைத்து விட்டதாகத் தெரிகிறது.

பொருளாதார ஆதிக்கத்தை உணர ஆரம்பித்துக் கொண்டிருந்த இந்து சமுதாயத்தில் தெய்வத்தைத் தேடிக் கொண்டிருந்த ராமகிருஷ்ணருக்கு அவர் குடும்பமும், கிராம சமுதாயமும் பெருமளவுக்கு உதவியிருக்கின்றன என்பது வெளிப்படை. ஐந்து வயதுப் பெண்ணைக் கல்யாணம் செய்து வைத்து விட்டு குடும்பத்தினர் அவர் எப்படிக் குடும்பம் நடத்தப் போகிறார் என்று கவலைப்பட்டபோது கூட ராமகிருஷ்ணர் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. உலக வாழ்வில் சற்றும் ஈடுபாடு இல்லாத மனைவியும் வந்து சேர்ந்த பிறகு அவர்கள் குடும்பம் நடத்தியதை ஒரு "லட்சியக் குடும்பமாகத்தான் சொல்ல வேண்டும்." மனைவியை உலகத்தின் அன்னையாகக் கண்டு ஏற்றுக் கொள்ளும் பழக்கம் ராமகிருஷ்ணருக்கும் அவரைத் தொடர்ந்து அவர் சிஷ்யர்களுக்கும் நாளடைவில் வந்து விட்டது. அன்னைக்கு அன்னை சாரதா தேவி என்கிற பெயரும் நிலைத்துவிட்டது.

ராமகிருஷ்ணரின் புகழ் 1865க்கு மேல் கல்கத்தாவிலும், வங்கத்திலும், ஓரளவுக்கு இந்தியா பூராவிலும்கூடப் பரவ ஆரம்பித்து விட்டது. மறுமலர்ச்சிக் கொந்தளிப்பில் அகப்பட்டுக் கொண்டிருந்த கல்கத்தாவில் தக்ஷிணேஷ்வரத்தின் காளி கோயிலில் பூஜாரியின் பெயர் பரவலாக பயபக்தியுடன் பேசப்பட்டது. புது பிரும்ம சமாஜத்தை ஆரம்பித்துத் திறம்பட நடத்திக் கொண்டிருந்த கேசவ் சந்திரசென் அடிக்கடி ராமகிருஷ்ணரைச் சந்தித்ததாகத் தெரிகிறது. இருவரும் அடிப்படையில் கருத்து வேறுபாடுகள் நிறைய



'டேனியல் வெப்ஸ்டர்'ஐ ஒருவர் கேட்டார்: "உங்களுக்குத் தோன்றிய எண்ணங்களிலேயே மிகச் சிறந்த எண்ணம் எது?"

வெப்ஸ்டர் சொன்னார்: "நாம் ஆண்டவனுக்குப் பதில் சொல்ல வேண்டியிருக்கும் என்கிற எண்ணம்!"

-ஏ.கே.நாசர்.

உள்ளவர்கள் என்றாலும் பரஸ்பரம் மதிப்புள்ளவர்களாக இருந்தார்கள். ராமகிருஷ்ணரும் பலசமயம் கேசவ் சந்திர சென்னின் பிரும்ம சமாஜக் காரியாலயத்துக்குப் போனதாகவும் தெரிகிறது. அங்கு நரேந்திரநாத் தத் என்கிற வாலிபர் சங்கீத கோஷ்டியில் வயலின் வாசித்துக் கொண்டிருந்தார். எதிர்ப்படுகிற சாமியார்கள், யோகிகள், மகான்களை "நீங்கள் கடவுளைப் பார்த்திருக்கிறீர்களா?" என்று கேட்டுக் கொண்டிருந்தார் நரேந்திரநாத் தத்தர். ஒரே ஒருவர் தான் "ஆமாம் பார்த்திருக்கிறேன், உன்னை இப்போது பார்ப்பதுபோலப் பார்த்திருக்கிறேன்" என்று பதில் சொன்னார். அல்லாவையும், கிறிஸ்துவையும், காளியையும் மற்ற இந்து தெய்வங்களையும் நேரில் கண்டதாகச் சொன்னார் அவர். அவர்தான் ராமகிருஷ்ணர்.

ஆன்மிகச் சிந்தனைகளுக்கெல்லாம் அப்பால் ராமகிருஷ்ண பரமஹம்சரின் அடிப்படையான கருத்து 'மக்களுக்குச் சேவை செய்வதுதான் ஈஸ்வரனுக்குச் சேவை செய்வதாகும் என்பது. இந்தக் கருத்தை அடிப்படையாகக் கொண்டுதான் இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளில் ஒரு பெரிய அம்சமாக சுவாமி விவேகாநந்தரின் சேவையும் ராமகிருஷ்ண மட ஸ்தாபனமும் பின்னர் ஏற்பட இருந்தன. ●

நிகொலாய்க்கு எங்கு போவதென்று தெரியவில்லை. திடீரென்று தான் பாரமற்ற அனாதையாகிவிட்டது போன்று தோன்றியது. சற்றும் எதிர்பாராதவிதத்தில் ராகுலன் தன்னை அவனுடைய வீட்டிலிருந்து போய்விடும்படி சொல்லக்கூடுமென்று அவன் நினைத்துப் பார்க்காததே காரணம். ராகுலனையும் குறை சொல்ல முடியாது. ஏறக்குறைய எட்டு நாட்கள் இவனுக்குத் தங்க இடமும், உணவும் அளித்து, தலைமறைவாக இருக்க அனுமதித்திருக்கிறான். இவன் புறப்படும் சமயத்தில் தான் ராகுலன் சொன்னான்: "டெபுடி சூப்பரின்டென்டென்ட் ஆஃப் போலீஸ் மிஸ்டர் தீனதயாளன் என் அம்மாவின் தம்பி. அவர் நாளை இங்கே வரக்கூடும். அவருக்கு உன்னைப்பற்றி ஏற்கனவே தெரிந்திருக்கும். எனவே நீ போய்விடுவதுதான் நல்லது. செலவுக்கு இரு நாறு ரூபாய் தரேன். 'மே காட் ப்ளெஸ் யூ நிகொலாய்!" பிரியும் போது சொன்ன வார்த்தைகள். அவன் தான் எவ்வளவு நல்லவன். முற்றிலும் புதியவனை தனக்கு அவன் ஏன் உதவ வேண்டும். வாழ்க்கையைப் பற்றிய அவனுடைய தத்துவமே அலாதியானதுதான்.

பொதுவுடமைத் தத்துவத்தில் ராகுலனுக்கு நம்பிக்கை இல்லை. அவன் தனி மனித சுதந்திரத்தையும், உழைப்பையும் போற்றுபவன். சமதர்மம் என்பது மாடரேஷன் தியரி என்பான். "யானையும் பூனையும் ஒன்றெனக் கருதுவது அதெப்படி முடியும். அவனவனுடைய சிந்தனை, செய்திறன் இவற்றிற்கேற்ப தான் அவனவனுடைய வாழ்க்கை அமைய முடியும். மேலும் பொதுவுடைமைக் கொள்கையைப் பின்பற்றும் நாடுகளிலும்கூட அரசு மனையில் அமர்ந்து அதிகாரம் செய்வோரும், கட்சிப் பிரமுகர்களும், சாதாரணமாகத் தொழிற்சாலைகளில் வேலை செய்யும் தொழிலாளர்களுடன் சமமாகப் பழகுகிறார்களா? இரண்டு பேருடைய வாழ்க்கைத் தரமும் ஒன்றுபோலுள்ளதா? நிச்சயம் முடியாது. சோவியத் ருஷியாவை சீனா எதுவரை பின்பற்றியது. தான் ஒரு 'நலன்மிகு' நாடாகும் வரைதான். அதேபோன்று சீனாவைப் பின்பற்றின கிழக்கு நாடுகளும் தாம் முறையே பொருளாதார நலன் பெறும் வரையில்தான் சீனாவின் தலைமையை ஏற்றன. இதுதான் இயற்கை".

"நம் பாரத நாட்டிலும் ஏன் பொதுவுடமைக் கட்சியில் பல பிரிவுகள். அதிகாரத்தைக் கைப்பற்றத்தானே. மார்க்ஸீய சிந்தனையில் இத்தனைப்பிரிவுகளா? ஏன்? அவனவன் ஒரு புதிய தத்துவப் பார்வையை மேற்கொள்கிறான். இப்போது மார்க்ஸீயம் ஒரு புதிய மதமாகிவிட்டது. உலகின் எல்லா மதங்களிலும் பல பிரிவுகள் உண்டானது போன்றே அதனிலும் பல பிரிவுகள் ஏற்பட்டுவிட்டன. "நிகொலாய்! மனிதனை நேசி. மனிதனை நேசி. உன்னால் முடிந்தவரை உதவியைச் சமுதாய நலனுக்குச் செய்! கடிவாளம் போட்ட குதிரையாக இராதே. வெளியே வா! மனிதனாக இரு!"

"மனிதனாக இருப்பது லகுவான காரியமன்று. ஏனைய மனிதர்களையும் தன்னைப்போன்றே பாவிப்பது. பிறப்பினால்தான் எவருக்கும் மேலானவனாகவோ, கீழானவனாகவோ எண்ணாது சம

கோடையில் ஒரு மின்னல்

கிருஷ்ணமணி



கர்னல் எப்படி இருக்கிறீர்கள்
ம்... பரவாயில்லை
ரிப், நீங்கள் வந்து எல்லா ரகசியங்களையும் கூறுவீர்கள் என்று முன்பே தெரிவித்துள்ளேன்
© 1986 King Features Syndicate, Inc. World rights reserved




"ஆனால்! சொத்துக்கள் ஏதுமில்லியே!"
முதலில், சொத்துக்களோடு போகும்போது தன்னுடைய பாதுகாப்பிற்காக ஸாடான் உன்னை மணக்க விரும்புகிறான்.




இருக்கிறது அதுவும் இங்கேயே
கிர்பி இதை சொத்தாக நான் நினைத்தாலும், இதற்கு சல்லிக்காசு கூட மதிப்பில்லையே




"நண்பர்களே, இப்போது உங்கள் உதவி தேவை..."
5-3
ம்... சொல்லுங்கள் டாக்டர்




"கார்னி எப்போது வேண்டுமானாலும் வருவான்..."
"ச்சே... அவனை, போட்டோ எடுக்கக்கூடாது."


—தொடரும்

# கேசவ் சந்திர சென்

க.நா.சுப்ரமண்யம்

கேசவ் சந்திர சென் என்கிற பெயர் ராம் மோகன் ராய் என்கிற பெயருக்கு அடுத்தபடியாக பிரசித்தியானது. ஆனால் அவரைப் பற்றி அதிகமாக வங்கத்துக்கு வெளியே தெரியவில்லை என்று சொன்னால் அது மிகையாகாது. ராம் மோகன்ராய் ஆரம்பித்த பிரும்ம சமாஜத்தை கட்டிக் காத்தார் அவர். பிரும்ம சமாஜம் பெண்கள் விஷயமாக நிறைய அக்கறை கொண்டதாக இருந்தது. பெண்கள் பற்றிப் பல சீர்திருத்தங்களுக்கு வங்கத்தில் மட்டுமல்லாமல் இந்தியாவின் பெரும்பகுதியிலும் வழி காட்டியது. பால்ய விவாகத் தடை, விதவைகளுக்கு மறுமணம், பெண்களுக்கு சம அந்தஸ்து, கோஷாமுறை ஒழிப்பு என்று பல துறைகளில் பிரும்ம சமாஜம் சிறப்பாகச் செயல்பட்டது. இவையெல்லாம் இந்தியாவில் சமூக ரீதியான ஒரளவுக்கு மேலெழுந்தவாரியான ஆனால் அவசியமான மாற்றங்கள்.

சற்று ஆழமான அளவில் கவனித்தோமானால் இந்து மதத்தில் சீர்திருத்தம் செய்து இந்திய மறுமலர்ச்சியை உருவாக்க கேசவ் சந்திரர் முயன்றார் என்பதும் தெரியவருகிறது. ராமகிருஷ்ண பரமஹம்சருக்கு இரண்டு வருஷங்கள் கழித்து 1838-ல் பிறந்த கேசவ் சந்திர சென் கல்லூரியில் படிக்கும் போதே கடவுள் மனித குலத்தின் தந்தை என்கிற நினைப்பும் அது காரணமாக எல்லா மனிதர்களும் சகோதரர்கள் என்கிற நினைப்பும் உள்ளவராக இருந்தார். இந்த இரண்டு சித்தாந்தங்களையும் அவர் தன் பத்தொன்பதாம் வயதில் தொடங்கிய நல்லெண்ண சகோதரர்கள் சங்கத்தில் வற்புறுத்தினர். சங்கம் அவர் வீட்டிலேயே கூடியது. சங்க ஆலயம் அவர் அறையேதான்.

கடவுளைத் தகப்பனாராக நினைக்கிற போக்கும் எல்லா மனிதர்களையும் சகோதரர்களாக நினைக்கிற மனப்பான்மையும் மனிதர்களுக்கு வருவதற்காகத்தான் அவர் தன் ஆயுள் பூராவும் பாடுபட்டார். அந்தக் காலகட்டத்தில் அதை அழுத்திச் சொல்வதற்கு அவசியம் இருந்தது என்பது தெரிகிறது. அதனால்தான் ஜோதி ராமலிங்கம், ராமகிருஷ்ண பரமஹம்சர் போன்றவர்களும் அதை வற்புறுத்தினர்கள். ஆனால் அதை ஸ்தாபன ரீதியில் அமலுக்குக் கொண்டுவர மூவரும் மூன்று விதமான வெவ்வேறு வழிகளைப் பின்பற்றினர்கள். இந்திய மறுமலர்ச்சியில் இந்த மூன்று வழிகளுக்கும் முக்கியத்துவம் உண்டு. எது எதைவிடச் சிறந்தது என்று சொல்ல முடியாது. மூன்று வழிகளுடைய தாக்கமும் இன்றும் நமது சமுதாயத்தில் நம்மால் காண முடிகிறது.

கடவுளை கேசவ் சந்திர சென் மறுக்கவில்லை. தெய்வத்தை வேறுவேறு ரூபங்களில் காண்பதை மறந்துவிட்டு ஏராளமான உருவங்களில் தெய்வத்தை பூஜிப்பதை விட்டுவிட்டு ஒன்றே தெய்வம், மனிதன் ஒரே குலம் என்ற அசையாத நம்பிக்கையுடன் மத சமு

தாய ஸ்தாபனங்கள் இயங்கத் தொடங்கவேண்டும் என்றும் அதற்கும் அப்பால் உலக சர்வதேசிய இயக்கமாக இச்சித்தாந்தம் பரவவேண்டுமென்றும் அவர் விரும்பினர். இந்து மதத்தில் மட்டுமின்றி அவர் கண்ட அளவில் மற்ற மதங்களில் கோஷ்டி மனப்பான்மை, கட்சிப் பூசல்கள், சிறு சிறு கருத்து வேறுபாடுகள் ஏராளமாக இருந்தன. மதம் நல்லபடி தழைக்க மனித குலம் ஒற்றுமைப்பட வேண்டியது அவசியம் என்று அவர் கருதினர். ஜாதி முதலியன பற்றி கட்சி கட்டிய இந்துக்கள் விஷயமாக அவர் நிறைய வே. சொன்னர். இந்துக்களில் பெரும்பாலோர் குறுகிய உள்ளம் படைத்தவர்களாக இருக்கிருர்கள். பிறருடைய நோக்கங்களிலேயே அவ நம்பிக்கை கொண்டவர்களாக இருக்கிருர்கள். கட்சிக் கசப்பும், கோஷ்டி மனப்பான்மையும் அவர்கள் காரியங்களில் உள்ள நல்லதையெல்லாம் வியர்த்தமாக்கி அழித்துவிடுகின்றன. சிறு சிறு விஷயங்கள் பற்றி வேறுபாட்டை வளர்த்துக் கொண்டு தங்களுக்குள் சண்டையடித்துக் கொள்கிருர்கள். இந்தச் சண்டைகள் மதம், கடவுள் என்கிற பெயராலேயே நடக்கிறது என்பது வருத்தப்பட வேண்டிய விஷயம். மதம் என்கிற சிந்தனை மனிதர்களை ஒருமைப்படுத்த வேண்டும். மக்களை ஒரே கடவுளோடு பிணைப்பதாக இருக்க வேண்டும் என்று சொன்னர் கேசவ் சந்திர சென்.

இங்கிலாந்தில் பர்மிங்ஹாம் என்கிற நகரத்தில் ஒரு சமயம் பேசும்போது அவர் சொன்னர். "இந்து மதத்தில் எத்தனை விதமான பாகுபாடுகள், போக்குகள் இருக்கின்றன என்று கிறிஸ்தவர்கள் ஆச்சரியப்படுகிருர்கள். ஆனல் கிறிஸ்தவர்கள் இடையேயும் வேறுபாடுகளும் பலதரப்பட்ட வித்தியாசமான போக்குகளும், காணப்படுகின்றன. ஒவ்வொருவரும் சொல்வதைக் கேட்கும்போது அவர்கள் நமக்கு வேறு வேறு கிறிஸ்தவங்களை விற்க முயல்கிருர்களோ என்று தோன்றுகிறது. ஒவ்வொரு கிறிஸ்தவனும் ஒவ்வொரு விதமாக பைபிளை அர்த்தப்படுத்துகிற மாதிரி தோன்றுகிறது. ஒரே கிறிஸ்துதானே இருந்தார்? அல்லது பல கிறிஸ்துக்களா-?"




மாறுபட்ட கருத்துக்களுடைய கட்சிகளும், கோஷ்டிகளும் மதத்தின் வேர்களையே அழித்துவிடுகின்றன. மதத்தின் நோக்கையே மாசுபடுத்திவிடுகின்றன என்று அவர் சொன்னர். "தெய்வத்தின் பெயரிலும், மதத்தின் பெயரிலும் ஒன்றுபட்டு நிற்கவேண்டிய மனிதர்கள் அடித்துக்கொள்கிருர்கள். அதனலேயே மத விஷயங்களில் கட்சி, கோஷ்டி மனப்பான்மை இருக்கக்கூடாது. ஒரே தெய்வத்தை ஏற்றுக்கொண்டு ஒரே குலமாக மனிதன் செயல்பட வேண்டிய காலம் வந்துவிட்டது. நாம் நாகரிகம் உள்ளவர்களானல் நவீனமனப்பான்மை உள்ளவர்களானல் இந்த மதம் சிறந்தது என்றே, இந்த மதத்தில் இந்தப் பகுதி சிறந்தது என்றே நினைப்பதை விட்டுவிட வேண்டும். சரித்திரம் நமக்கு அறிவுறுத்துவது இதையேதான். நாம் எல்லோரும் சகோதர சகோதரிகளாகச் செயல்பட வேண்டிய காலம் வந்துவிட்டது" என்று முழங்கினர் அவர்.

1869-ல் கல்கத்தாவில் பிரும்ம மந்திரில் திறப்பு விழாவின்போது கேசவ சந்திரர் செய்த பிரசங்கத்தில் ''இங்கு செய்யப்படும் எந்தப் பிரார்த்தனையும், பாடப்படும் எந்தப் பாட்டும், பேசப்படும் எந்தப் பிரசங்கமும், எந்த மதத்தின் எந்தக் கட்சியையும் உயர்த்தியோ, தாழ்த்தியோ இருக்கக்கூடாது என்று விதிமுறைகள் அமல்படுத்தப்படும்'' என்று சொன்னார்.

சமுதாயத்தில் சகோதரத்துவத்தை செயல்படுத்துவதன் அவசியத்தை அவர் பல சமயங்களில் வற்புறுத்தினார். இந்தியர்களின் சமுதாயப் போக்கு வாழ்க்கை வழிகள் மாறிக் கொண்டு இருந்தன. புதுக் கல்வி முறை காரணமாகப் பலரும் பல நல்ல நூல்களைப் படிக்க வழி ஏற்பட்டது. புதிய சிந்தனைகள் வளர்கின்றன. பழைய போக்குகளில், சித்தாந்தங்களில் வாழ்கிற வழிகளில் நம்பிக்கை தேய்கிறது. மனிதன் முக்கியம் என்று கருதிய பல மதிப்பீடுகள் மறைகின்றன. பழமையான ஸ்தாபனங்கள் இடிந்து விழுகின்றன. சமுதாயம் கலகலத்து விலவிலத்துப் போய்க்கொண்டிருக்கிறது. புதுமை, புரட்சி, மாறுதல் என்பதெல்லாம சரிதான். இந்தச் சமயத்தில்தான் புதியதானதொரு நல்ல சமுதாயத்தை நாம் நிர்மாணிக்க முயல வேண்டும். ஜாதி என்கிற அநாகரிகப் பிடியிலிருந்தும் விக்கிரக ஆராதனை என்ற அசட்டு நம்பிக்கையிலிருந்தும் சமுதாயம் தப்பிக்க வேண்டியது அவசியம். விக்ரக ஆராதனை என்கிற ஒரு காட்டுமிராண்டிப் பழக்கம் சமுதாயத்தில் ஜாதியின் பிடிப்பு தளராமல் பார்த்துக் கொள்கிறது. இந்த இரண்டு தீங்குகளையும் ஒழிக்க ஒன்று சேருங்கள் என்று 'இந்திய வாலிபர்களே' என்று தலைப்பிட்டு எழுதிய ஒரு சிறு நூலில் அவர் குறிப்பிடுகிறார். தயானந்த சரஸ்வதி மாதிரி அவர் இந்தியர்களை வேத காலத்துக்குத் திரும்பிப் போகச் சொல்லவில்லை. ஆனால் வேத காலத்தில் ஜாதிப் பிரிவினைகள் இல்லை என்பதனைச் சுட்டிக்காட்டுகிறார். பிற்காலத்தில்கூட ஜாதி என்பது தொழில் வர்க்க ரீதியாகத்தான் செயல்பட்டது என்றும் அவர் குறிப்பிடுகிறார்.

ஜாதி பற்றி தன் சிந்தனைக்கு சரித்திர ரீதியான ஒரு காரணத்தையும் சொல்லுகிறார் கேசவ் சந்திர சென். ஜாதிகள் பெருத்து இந்தியாவுக்குள்ளேயே ஒற்றுமையில்லாமல் போனதினால் தான் நடுக்காலத்தில் இஸ்லாமியர் போன்ற அந்நியர்கள் படையெடுத்து நாட்டை வெல்வது சாத்தியமாக இருந்தது. ஜாதியும் விக்ரக ஆராதனையும் இந்தியாவை அடிமைப்படுத்தப் போதுமானவை. அவற்றை ஒழித்தாலொழிய அடிமைத்தனம் நீங்காது என்பது தெளிவு. இந்தியாவில் சுபிட்சம் பரவ சுதந்திரம் ஓங்க ஜாதி ஒழிய வேண்டும்.

இந்த ஜாதி ஒழிப்பு வாதத்திலேயே ஒரு நவீன அரசியல் அம்சம். அதுவரை இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளில் ஒலிக்காத ஒன்று-இருப்பது தெரிகிறது. இதைத் தொடர்ந்து ஜாதி ஒழிப்புக்கு நாலாவது காரணமாக கேசவ் சந்திர சென் கூறுகிற விஷயத்தை முழு அரசியல் விஷயமாகவே கருதலாம். மனிதர்களின் சமத்துவம், சகோதரத்துவம், சுதந்திரத்துவம் என்கிற மூன்று தத்துவங்களையும் இந்தியாவில் ஸ்தாபிக்க வேண்டுமானால் ஜாதி ஒழிய வேண்டும். 1864ல் செய்த ஒரு பிரசங்கத்தில் அவர் சொல்லுகிறார். ''இந்தக் காலத்தின் முக்கியமான ஒரு போக்கு என்னவென்றால் நம்மிடையே அறிவுள்ளவர்களுக்கு சுதந்திரத்தின்மேல் காதல் பிறந்திருக்கிறது என்பதுதான். சுதந்திரத்தை நமது புது சித்தாந்தமாக, புதுக்கொள்கையாக ஏற்றுக்கொண்டால்தான் நாம் உய்யமுடியும். நமது பேச்சிலும் மூச்சிலும் நாம் செய்கிற ஒவ்வொரு காரியத்திலும் சுதந்திரக் காதல் வியாபித்து இருக்கிறது. நமது ஜன சமூகத்தின் எல்லாப் பகுதியினரும் பங்கு பெறக்கூடிய அரசியல் நமக்குத் தேவை. நாகரிக உலகம் பூராவும் ஒருவர் விட்டுப்போகாமல் ஒவ்வொருவர் உள்ளத்திலும் கல்வி மூலம் அறிவு ஒளியை ஏற்றிவைக்க முயலுகிறது. மரபு என்கிற விலங்கையும் வழக்கம்

என்கிற கல்லையும் இது ஒன்றுதான் சரி என்கிற மூடத்தனத்தையும் உடைத்துக் கொண்டு வெளியேறி சுதந்திரம் பெற சமுதாயம் முயல்கிறது."

இந்த வாக்கியங்கள் கல்த்தாவில் 1864-ல் கேசவ் சந்திர சென் செய்த பிரசங்கத்திலிருந்து எடுக்கப்பட்டவை. அப்போது அவருக்கு வயது 26தான் என்பதை நினைவில் வைக்க வேண்டும். அடுத்த தலைமுறையில் இன்னொரு இளைஞர் இந்த வாக்கியங்களைத் தொடர்ந்து வற்புறுத்தத் தோன்றினார். அவர் பெயர் சுவாமி விவேகானந்தர்.

சுதந்திரம் என்கிற சித்தாந்தத்தை வற்புறுத்தியதுபோலவே கேசவ் சந்திரர் கல்வி முறையையும் வற்புறுத்தினார். சரியான கல்வி மூலந்தான் இந்தியர்கள் தேவையான சீர்திருந்தங்களைச் செய்து கொண்டு மேன்மையான வாழ்வு வாழ முடியும். கல்வி மூலந்தான் இந்தியாவில் ஜாதி பேதமற்ற ஒரே ஜாதி சிருஷ்டியாக முடியும் என்று அவர் எண்ணினார். ஒரு சிலருக்குக் கல்வி கிடைத்து பலருக்குக் கிடைக்காமல் போகும் வரையில் கல்வியால் பயனில்லை என்றும், எல்லோருக்கும் சமமாகக் கல்வி கற்க சந்தர்ப்பம் கிடைக்க வேண்டும். கல்வி மூலம் நீதிபோதனையும் ஆன்மீக உயர்வும் ஏற்பட வேண்டும். அதேசமயத்தில் விஞ்ஞான அறிவும் விஞ்ஞானத்தை சரிவர உபயோகிக்கும் அறிவும் ஊட்டப்பட வேண்டும். அரசியல் சுதந்திரமும் சமத்துவமும் சமுதாயத்தில் எல்லோரும் சமம் என்கிற எண்ணமும் பொருளாதாரத்தில் மனிதனுக்கு மனிதன் உயர்வு தாழ்வு இல்லாமையையும், வாழ்க்கை வசதிகள் உயர்வும், கிடைத்த நந்திரத்தைக் கட்டிக்காக்கும் திறனும், அதிகமான நம்பிக்கைகளும் எதிர்பார்ப்புகளும் உருவாக, சரியான கல்விதான் இந்தியர்களுக்கு உதவும் என்று எண்ணினார். அதை அழுத்தமாகச் சொல்லவும் சொன்னார்.

இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளின் ஆரம்ப காலத்தில் சுதந்திரம், கல்வி என்று இரு துறைகளின் முக்கியத்துவத்தையும் பற்றி அந்தக் காலகட்

டத்தில் வேறு யாரும் இவ்வளவு சொல்லவில்லை என்பது கவனிக்கப்பட வேண்டிய விஷயம். இந்த இரண்டு விஷயங்களாலும் கேசவ் சந்திர சென் இந்திய மறுமலர்ச்சியாளர்களுடன் சரி சமமான இடம்பெறுகிருர்.

ஜோதி ராமலிங்கம் போல், தயா னந்த சரஸ்வதியைப் போல, கேசவ் சந்திர சென்னுக்கும் ஸ்தாபனங்கள் மூலம் செயல்படுவதில் நம்பிக்கையிருந் தது. ஆனல் ஸ்தாபனங்களின் குறைபா டுகளும் அவருக்கும் தெரியவரவில்லை என்றும் சொல்ல முடியாது. அவர் இறக்கும்போது (1884) பிரும்ம சமா ஜம் மூன்ருகப் பிளந்து நின்றது. இது தவிர்க்கமுடியாத ஒரு விஷயம். ஆனல் கேசவ் சந்திர சென்னின் சிந்தனை வார்ப்பு விரிசல்விட்டுவிடவில்லை என் றுதான் சொல்ல வேண்டும்.

தக்ஷிணேஷ்வரத்து காவல் பூசாரி யான ராமகிருஷ்ண பரமஹம்சருட ஞன அவரது நட்பைக்கூட இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனையின் ஒரு அம்ச மாகக் கருதலாம். கவி ரவீந்திரநாத் தாகூர், சுவாமி விவேகானந்தர் போன் றவர்கள் கேசவ் சந்திர சென்னின் மறு மலர்ச்சிச் சிந்தனைகளை வெகுவாகச் செ யல்பட்டு விரிவாக்கிக் காட்டினர்கள். சென்னையிலும் ஆந்திரப் பிரதேசத்தி லும் வீரேச லிங்கம் பந்துலு செயல் பட்டதெல்லாம்கூட ஓரளவுக்கு கேசவ் சந்திரரின் முன்மாதிரியைக் கொண்டு தான். இன்னும் சற்று விலகிய தூரத் தில் கேரளத்தில் நாராயணகுரு செயல் பட்டதைக்கூட வங்க பிரும்ம சமாஜத் தின் தூரத்தின் விளைவுகளில் ஒன்ருகக் காணமுடியும்.

மற்ற சில மறுமலர்ச்சிக்காரர்கள் அளவில் கேசவ் சந்திர சென்னும் அவர் சிந்தனைகளும் தமிழர்களால் அதிகமாக ஆராயப்படாதிருப்பது நிவர்த்திக்கப் படவேண்டிய ஒரு அவசி யமான காரியம் என்றுதான் சொல்ல வேண்டும். ●



என். டி. ஆரின் வாரிசு?

'என். டி. ஆரின் அரசியல் வாரிசு யார்?' என்ற கேள்விக்கு விடை கிடைத்துவிட்டது. விடை- சந்திரபாபு நாயுடு; என். டி ஆரின் மருமகன். கட்சி விவ காரங்களில் நாயுடு ரொம்பத் திறமைசாலி என்கிருர்கள். மாம ஞர் அரசாங்கப் பணிகளில் மூழ் கிவிடும்போது, கட்சியின் ''கடி வாளம்'' இவரிடம்தான் இருக்கி றது

சந்திரபாபு நாயுடு, ராமா ராவ் ''தெலுங்கு தேசத்தை'' ஆரம்பித்தபோது இ. காங்கிர ஸில் இருந்தவர். அப்போது அவர் அஞ்சையா மந்திரி சபை யில் மந்திரிகூட! என். டி. ஆர். சந்தித்த முதல் தேர்தலின்போது, ''ராமாராவ் அலை''யைத் தடுத்து நிறுத்த, இ. காங்கிரஸ் பயன்ப டுத்திய துருப்புச் சீட்டு நாயுடு தான்!

நாயுடுவுக்கு, இந்த ''வாரிசு'' அங்கீகாரம் அவ்வளவு எளிதில் கிடைத்துவிடவில்லை. என். டி. ஆரின் இன்னெரு மருமகன் வெங்கடேஸ்வர ராவ், பாராளு மன்றத் தெலுங்கு தேசக் கட்சித் தலைவர் பி,உபேந்திரா இருவரின் எதிர்ப்பையும் சமாளித்துத்தான் இந்த இடத்தைப் பிடித்திருக்கிருர் அவர்.

-குமாரி.

# ராம்கோவின்
# தீபாவளி வாழ்த்துக்கள்

நாட்டில் தொழில் வளம் பெருக்கி வேலை வாய்ப்புகள்,
கல்வி மற்றும் பல அடிப்படை வசதிகளைப்
பெருக்கி, சுபிட்சமும், மக்கள் மன நிறைவும், வளமும் பெற்று
வாழ ராம்கோ நிறுவனங்கள் வழிகாட்டி ஒளிர்கின்றன.





ராம்கோ குருப் நிறுவனங்கள்:

ராஜபாளையம் மில்ஸ் லிட்
மதரூஸ் சிமெண்ட்ஸ் லிட்
ஸதர்ன் ஆஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் லிட்
கௌரி ஹவுஸ் மெட்டல் ஒர்க்ஸ்
ராமராஜூ சர்ஜிகல் காட்டன் மில்ஸ் லிட்
சுதர்சனம் ஸ்பின்னிங் மில்ஸ் லிட்
ஜெயராம் மில்ஸ் லிட்
பி.ஏ.சி. ராமசாமி ராஜா பாலிடெக்னிக்
சின்மயா வித்யாலயா பி.ஏ.சி. ராமசாமிராஜா
மெட்ரிகுலேஷன் ஹையர் செகண்டரி ஸ்கூல்
பி.ஏ.சி. சின்னையா ராஜா ஞாபகார்த்த
மேல்நிலைப் பள்ளி
பி.ஏ.சி. ஆர். அம்மணி அம்மாள் பெண்கள்
மேல்நிலைப் பள்ளி
பி.ஏ.சி. ராமசாமி ராஜா கல்வி அறக்கட்டளை
ராஜா அறக்கட்டளை



JG/R/5/86

இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனையாளர்கள்-26

# ஸ்வாதித் திருநாள்

**க.நா.சுப்ரமண்யம்**

ஸ்வாதித் திருநாள் பெயரில் வழங்குகிற சாகித்தியங்களை அவர்தான் எழுதினரா என்பது பற்றி ஒரு விவாதம் சமீபத்தில் தமிழ்நாட்டில் தலை தூக்கி, அநாவசியமாகத் தீவிரமாக அடிபட்டது. இதுபோல ஷேக்ஸ்பியர் நாடகங்களை ஷேக்ஸ்பியர் என்பவர் தான் எழுதினரா என்பதும் கேள்விக்கிடமாக இருப்பதாகப் பலர் கருதுகிறுர்கள். என்ருலும் அவற்றை ஷேக்ஸ்பியர் என்கிற பெயர் சொல்லியே நாம் அங்கீகரிக்கிறேம். அதேபோல அநேகமாக முச்சங்கம் என்கிற கதையை-அதை சரித்திரம் என்று சொல்ல முடியாது-நம்ப முடியாது என்று ஏற்பட்டுவிட்டாலும்கூட— ஒரு குறிப்பிட்ட காலத்துக் கவிதைகளை சங்க இலக்கியம் என் கொள்வதற்குக் காரணமும் இருக்கிறது தஞ்சை வடிவேலு சகோதரர்கள் பற்றிய சரித்திரம் பூரணமாக நமக்குக் கிடைக்கவில்லை. தஞ்சாவூர் ராஜா ஸரபோஜி இறந்த பிறகு அவர்கள் திருவனந்தபுரத்துக்கு வந்ததாகத் தெரிகிறது. பரத நாட்டியத்தின் இன்றைய நிலைக்கும், இசையின் இன்றையப் போக்கிற்கும், கச்சேரிகளின் உள் அடக்கத்துக்கும் அவர்கள் எந்தெந்த விதங்களில் சேவை செய்தார்கள் என்று பூரணமாகத் தெரியவில்லை. அவர்கள் சேவை பெரிது என்றும் தெரிகிறது. சேவைகளைப் பூரணமாக ஆராய்ந்து மக்களுக்குச் கிடைக்கச் செய்கிற வகையில்-அப்படி இன்றுள்ள அன்றிருந்த நிலையில் சாத்தியமா என்று தெரியவில்லை-ஸ்வாறுதான் தொடர்ந்து கூறுகிறேம்.

பல இந்திய மகா ராஜாக்கள் கல்வியிலும் கலைகளிலும் தேர்ந்தவர்களாக இருந்ததுடன் பல கலைகளிலும் கல்வித் துறைகளிலும் வல்லவர்களாக இருந்திருக்கிறுர்கள். சில சமயம் அவர்கள் பெயரில் வழங்குகிற நூல்கள் முதலியன அவர்கள் எழுதியதல்ல என்று ஏற்பட்டாலும் கூட அதனுல் ஒன்றும் நஷ்டமில்லை. அவர் பெயரில் ஏற்றிச் சொல்லுவது மரபு என்று ஏற்பட்டு விட்ட பிறகு அதைச் சரித்திர உண்மையாகவே ஏற்றுக்கொண்டு விடலாம் நாம்.

ஸ்வாதித் திருநாள் விஷயத்தில் இதைப்பற்றி விவாதத்தை முடித்துக் தித்திருநாள் பெயரில் அந்த சாகித்தியங்கள் இருப்பதில் தவறில்லை என்றுதான் சொல்லத் தோன்றுகிறது.

ஸ்வாதித்திருநாட்கள் கலைச்சேவையும் அப்படி ஒன்றும் புறக்கணிக்கக்கூடியது அல்ல. ஒரு அளவில் பார்க்கப் போனுல் தஞ்சை ஸரபோஜி ராஜா செய்த கலைச்சேவைகளை ஸ்வாதித்திருநாளும் தொடர்ந்திருக்கிறுர் என்று தெரிகிறது. அவருக்குக் கலைகளில் குரு தஞ்சாவூரிலிருந்து வந்த சுப்பாராவ் என்று தெரிகிறது. அவர் மூலம்தான் வடிவேல் சகோதரர்கள் திருவனந்தபுரம் வந்ததாகவும் தெரிகிறது. பல ராஜ ஜமீந்தார் சபைகளில் சங்கீதம் நாட்டியம் முதலிய கலைகளுக்கு ஆதரவு இருந்

திருக்கிறது என்றாலும் ஒரு மறுமலர்ச்சி வேகம் ஸரபோஜி ராஜா சபையிலும் ஸ்வாதித்திருநாள் சபையிலும் காணப் பட்டது என்று தெரிகிறது. இதற்குக் காரணங்கள் காலத்தின் தேவைகளுக் கப்பால் தேடவேண்டியதில்லை. சில சமயங்களில் சில பிரதேசங்களில் மட் டுமே கலைகள் பல எட்டுகள் எடுத்து வைக்கின்றன. இந்த மாதிரிப் பல காலங்களில் ஐரோப்பாவில் பல பிர தேசங்களில் கலை மேன்மை சாத்திய மாக இருந்திருக்கிறது. இது ஒரு சரித் திர உண்மை.

ஸ்வாதித்திருநாள் தத்தியா தோப் பே பிறந்த ஆண்டில் பிறந்த வர்—*1813*. வேறு யாருடைய ராஜ்ஜி யாதிகாரத்தையோ ஸ்தாபிக்க தந்தி யா தோப்பே மூர்க்கமாகப் போ ரிட்டு *1859*ல் தூக்கிலிடப்பட்டார். அதற்கும் *13* ஆண்டுகளுக்கு முன்ன தாக, *33*-வது வயதில் ஸ்வாதித்திரு நாள் காலமாகிவிட்டார். அவர் மர ணம் இயற்கை மரணம்தான்—அவர் சண்டையும் போடவில்லை; யுத்தக் கை தியாகவோ ஆங்கிலேயர்களுக்கு எதிரி யாகவோ கருதப்படவும் இல்லை. கலைக ளுக்கென்று அவர் ஏராளமாகச் செலவு செய்து தன் கஜானாவைக் காலி செய்கி ரூர் என்பது பிரிட்டிஷ் அதிகாரிகளின் புகார் ஸ்வாதித்திருநாள் பற்றி.

ராணி லக்ஷ்மிபாயின் மகனாகப் பிறந்த ஸ்வாதித்திருநாளின் இயற்பெ யர் ராமவர்மா. ராணி பார்வதிபாய் என்கிற அவர் பெரியம்மா அவர் பெயரில் ஆள, ஒரு ராஜாவுக்கு வேண் டிய கல்வி கேள்விகளை அவர் பெற்று வளர்ந்தார். அவர் குருவாகிய தஞ்சா வூர் சுப்பாராவே அவர் காலத்தில் அவர் திவானும் ஆனார். சம்ஸ்கிருத வேதாந்தக் கல்வியை அவர் க்ஷீராப்தி சாஸ்திரி என்று ஒருவரிடம் கற்றுக் கொண்டார். திருவனந்தபுரத்தின் அரச னாக ஸ்வாதித்திருநாள் முடி சூட்டப் பட்டபோது அவருக்கு வயது 16தான். அவர் அது முதல் ஒரு *13* ஆண்டுகள் தன் ராஜ்யத்தை ஆண்டார். ராஜ்யத் தில் ஊழல் தலைகாட்டவிடாமல் ஆண்



டதுடன் அவர் சிறப்பாக பெண் கல்வி மற்றும் பொதுக் கல்வி முதலிய விஷ யங்களில் பலவிதமான சீர்திருத்தம் செய்தார் என்று தெரிகிறது. திருவாங் கூரில் பிற்காலத்தில் கல்வி சிறப்பாகச் செழித்ததற்கு அவர்சீர்திருத்தங்கள் கா ரணமாயின என்று சொல்கிறார்கள். மற் றும் ராஜ்யம் பூராவும் நீதி வழங்கக் கோர்ட்டுகள் ஸ்தாபித்தார். சட்ட விதி முறைகள் புதுசாக எழுதப்பட்டு அமுல் படுத்தப்பட்டன. நிலச்சீர்திருத்தங்கள் செய்தார். மற்றும் ஜனக்கணக்கெடுப்பு அவர் காலத்தில் நடந்தது. பொதுப்ப ணித்துறை நிர்மாணமாகியது. ஆங்கி லக் கல்விக்கு அஸ்திவாரம் அமைந்தது அவர் காலத்தில்தான். பல ஆங்கிலப் பள்ளிகள் தோன்றின. திருவனந்தபுரம் பொது புஸ்தக லைப்ரரியும் நிர்மாண மாயிற்று.

தளபதி கல்லன் என்கிற ஆங்கில ராணுவ அதிகாரி திருவனந்தபுரத்தில் ஆங்கிலேயர்கள் சார்பில் ரிஸிடெண்ட் துரையின் இந்தக்கலை இலக்கியச் செல







TEXTOM®
TEXTOM






வுகள் அதிகமாகிப் போகின்றன என்று ஸ்வாதித்திருநாளைத் திருத்த முயன்முன், எதிர்த்துப் போராடத் தெம்பும் இல்லை, மனமும் இல்லை ஸ்வாதித்திரு நாளுக்கு. 1896-ல் அவர் இறக்கும் வரையில் தன் கடைசி ஐந்து ஆண்டு களை பத்மநாபஸ்வாமி சேவையில் ஆனந்தமாகக் கழித்தார்.

ஸ்வாதித் திருநாளின் சபையில் கேரளாவின் சோபன இசையில் அந்தக் காலத்தில் சிறந்தவர்களாகக் கருதப் பட்ட இராயிம்மான் தம்பி, கரமனை பத்மநாப பாகதவர் முதலியவர்கள் இருந்தனர். அவர்களைத் தவிர தஞ்சாவூர் சுப்பாராவும் இருந்தனர். மர்க்கத ரிதி சேஷ அய்யங்கார் என்பவர் எழுதிய சமஸ்கிருத கீர்த்தனைகள் அவருக்குக் கிடைத்தன. அதை ஒட்டியே தன் கீர்த்தனங்களை ஸ்வாதித் திருநாள் எழுத ஆரம்பித்ததாகச் சொல்லுகிறுர்கள். சம்ஸ்கிருதம், தெலுங்கு, மலையாளம் தவிர அரபி முதலிய மொழிகளில் கூட ஸ்வாதித் திருநாள் ஸ்வரங்கள் செய்திருப்பதாகத் தெரிகிறது. தியாகராஜ கீர்த்தனங்களை கோவிந்த மாரர் என்கிற இசை மேதை நேரில் திருவையாறு சென்று கேட்டு வந்து ஸ்வாதித் திருநாளுக்கும் பாடிக்காட்டியதாகத் தெரிகிறது. தியாகப் பிரம்மத்தை ஸ்வாதித் திருநாள் சந்திக்க ஆசைப்பட்டதாகவும், இவ்வுலகில் இல்லை வேறு இடத்தில் சந்திக்கலாம் என்று தியாகப்பிரம்மம் பதில் அளித்ததாகவும் தெரிகிறது. இதன் உண்மை என்பது இது பரம்பரையாக வந்த கதை என்பதில்தான் காணக்கிடக்கிறது. ஸ்வாதித் திருநாள் இறந்ததற்கு அடுத்த மாதமே தியாகப் பிரம்மம் இறந்துவிட்டதாகத் தெரிகிறது. தியாகப்பிரம்மம் திருவனந்தபுரம் வராத குறையை இட்டு நிரப்ப அவருடைய சிஷ்யர்களில் ஒருவரான கன்னையா பாகவதர் வந்து ஸ்வாதித் திருநாளின் நட்புக்கும் பாத்திரமாக இருந்தார் சில ஆண்டுகள்.

தஞ்சை ராஜா ஸரபோஜி இறந்த பிறகு பல கலைஞர்கள் திருவனந்தபுரத்தை நாடி அவர்களாகவே வந்தார்கள். ஸ்வாதித் திருநாளின் கலை ஈடுபாட்டைக் கேள்வியுற்றுச் சில பேரை தஞ்சாவூர் சுப்பாராவ் அழைத்து வந்ததாகவும் தெரிகிறது. இப்படி வந்தவர்களில் வடிவேலு சகோதரர்களைச் சிறப்பாகச் சொல்ல வேண்டும். இவர்கள் நால்வருடைய இசை பரதநாட்டிய சேவை போதுமான அளவுக்கு ஆராயப்படவில்லை என்று கூடச் சொல்ல வேண்டும். லேசாக ஓரளவுக்குத் தெரிகிறதே தவிரப் பூரணமாகத் தெரியவந்து விட்டதாகத் தெரியவில்லை. ஸ்வாதித் திருநாள் சபையில் பல நாட்டிய உறுப்பினர்கள் உருவானதற்கும் இவர்கள் காரணமாக அமைந்ததாகச் சொல்லுகிறுர்கள். வடிவேலுவின் முயற்சியால்தான் கர்நாடக சங்கீதக் கச்சேரிகளில் வயலின் வாசிப்பது நிலை பெற்றது என்று சொல்லுகிறுர்கள். இது காரணமாக ஸ்வாதித் திருநாள் அவருக்கு தந்தத்தால் ஆன ஒரு வயலினைச் செய்து தந்ததாகச் சொல்லுகிறுர்கள்.

இந்திய மறுமலர்ச்சியில் கர்நாடக சங்கீதம் பரதநாட்டியம் போன்ற கலைகள் பெரும் அளவுக்கு இடம் பெறுவதற்கு தஞ்சை ராஜா ஸரபோஜியும் திருவனந்தபுரம் ராஜா ஸ்வாதித் திருநாளும் பெருமுயற்சி எடுத்துக் கொண்டு ஆவன செய்திருக்கிறுர்கள் என்பது தெரிகிறது. இன்று வரையிலுள்ள சங்கீத பந்தாக்களும் பாணியும் நாட்டியப் போக்கும் உள்ளடக்கமும், ஸரபோஜியினுல் ஏற்பட்டு ஸ்வாதித் திருநாளினுல் ஸ்திரப்படுத்தப்பட்டு இன்று வரை நீடிக்கிறது என்பது அவர்களுடைய தனித்தனிக் கலைச் சேவைக்கு சாட்சி என்று சொல்ல வேண்டும்.

தென்னிந்திய முறைகளையும் வட இந்திய ஹிந்துஸ்தானி முறைகளையும் சங்கீதத்தைப் பற்றிய வகையில் ஒன்று படுத்த ஸ்வாதித் திருநாள், இந்தியா பூராவும் ஒன்று என்கிற அடிப்படைப் பிரக்ஞையுடன் செய்ய முயன்றதாகவே தெரிகிறது. இது காலத்தால் மிகவும் முற்பட்ட ஒரு தேசிய ஒற்றுமை Synthesis (கூட்டு). ஸ்வாதித் திருநாளைத் தேடி

வந்த ஒரு மராட்டி இசைக் கலைஞரை குருவாக ஏற்றுக்கொண்டு ஸ்வாதித் திருநாள் பல கதா காலக்ஷேப மராட்டி பாணிக் கதைகளை இசை ரூபமாகச் செய்ததாகத் தெரிகிறது. அனந்தபத்மநாப கோஸ்வாமி என்று அந்த இசை மேதையின் பெயரைச் சொல்லுகிறார்கள். ஸ்வாதித் திருநாளின் கதாகாலக்ஷேப ஹரிகதைகளான குசேலோபாக்யானமும் அஜமிளோபாக்யானமும் சம்ஸ்கிருத மொழியில் அமைந்திருந்தாலும் மராத்தி பாணியைப் பின்பற்றின.

மராத்தி தேசத்திலிருந்து மட்டும் அல்ல. இந்திய தேசத்தின் பல பாகங்களிலிருந்தும் இசைக் கலைஞர்கள் பலர் ஸ்வாதித் திருநாளின் சபையை அலங்கரித்திருந்ததாகத் தெரிகிறது. சிலர் பெயர்களும் ஊரும் பின்வருமாறு: மைசூரிலிருந்து அலாவுதின், ஹைதராபாதிலிருந்து காசி கங்கா, பூனாவிலிருந்து சச்சிதானந்தா, பஞ்சாபிலிருந்து ராமார் ஜனா, குவாலியரிலிருந்து லக்ஷ்மண தாஸா, அயோத்தியாவிலிருந்து கததேவா, வாரணாசியிலிருந்து பௌட வாஸர தேவா, வங்கத்திலிருந்து ஹர்தாஸா போன்றவர்கள் வந்து சில மாதங்கள் சில சமயங்களில் சில வருடங்களும் திருவனந்தபுரத்தில் ஸ்வாதித் திருநாளின் விருந்தாளியாகத் தங்கிப் போயிருக்கிறார்கள். இவர்களைத் தவிர, பாலக்காட்டிலிருந்து பரமேசுவர பாகவதர், தஞ்சாவூரிலிருந்து ஸரலைமான் ஸேட், மத்தியார்ஜுனத்திலிருந்து கோபாலராயர், திருச்சியிலிருந்து மாத்ருபூதம்யா, போன்றவர்களும் திருவனந்தபுரத்தில் சில காலம் தங்கியிருந்ததாகத் தெரிகிறது.

இசைக்கலை ஒன்று மட்டும் தான் ஸ்வாதித் திருநாளால் போற்றி வளர்க்கப்பட்டது என்று சொல்வதற்கில்லை. நாட்டியக் கலைக்கும் சிறப்பாக அவர் ஆதரவு அளித்திருக்கிறார் என்பது தெரிகிறது. பல நாட்டிய நடன கோஷ்டிகளை நிரந்தரமாக ஆதரித்தார் அரசர். அதைத் தவிர சித்திரக் கலையிலும் அவருக்கு ஈடுபாடு இருந்தது. அந்தக்

காலத்துக்கு மிகவும் பெருந் தொகையான ரூ. 12000 சன்மானம் கொடுத்து ஒரு ஐரோப்பிய சித்திரக்காரரை மன்னரின் உருவ ஓவியத்தை எழுதப் பணித்தார் ஸ்வாதித் திருநாள். இந்தச் சித்திரக் கலை மரபு தான் இந்திய மறுமலர்ச்சியின் முதல் சித்திரக்காரராக இந்தியா பூராவும் பெரும் புகழ் பரப்பிய ரவிவர்மா என்பவர் திருவனந்தபுரத்தில் தோன்றுவதற்குக் காரணமாக அமைந்தது என்று சொல்லலாம். ரவிவர்மா திருவனந்தபுரம் ராஜ வம்சத்தைச் சேர்ந்தவர்- அரண்மனையில் சித்திரக் கலையில் தேர்ச்சி பெற்றார் என்பதும் இங்கு கவனிக்க வேண்டிய விஷயம். அவர் ஸ்வாதித் திருநாள் இருந்த காலத்திலேயே பிறந்தவர் என்பதும் குறிப்பிட வேண்டிய விஷயமாகும்.

புதுசாக உருவாகிக் கொண்டிருந்த கல்வி முறைகளில் கலைகள் இடம்பெற வேண்டும் என்கிற சிந்தனை மற்றவருக்கு அவ்வளவாக ஏற்படாத சமயத்தில் தஞ்சை ராஜா சரபோஜிக்கும், திருவனந்தபுரம் ராஜா ஸ்வாதித் திருநாளுக்கும் ஏற்பட்டிருந்ததைப் பெரும் பரபரப்பாக, இந்திய மறுமலர்ச்சியில் ஒரு பெரிய அம்சமாகவே கருத வேண்டும். விஞ்ஞான அறிவு, பொருளாதார அறிவு, சமுதாய அறிவு, அரசியல் அறிவு என்று இந்தியர்களின் மனம் விசாலமாக்கப்பட்டுக் கொண்டிருந்த சமயம், மத நம்பிக்கைகளில் விரிசல் காண ஆரம்பித்துக் கொண்டிருந்தது என்பது தெரிகிறது. தஞ்சையில் இந்தியப் பண்பாடு என்கிற மாளிகையை அழித்துவிடாமல் காப்பாற்றுவதற்கு ஸ்வாதித் திருநாள் மறுமலர்ச்சிச் சிந்தனைகளும் மிகமிக உபயோகமாக இருந்தன. அவை கலை பற்றிய சிந்தனைகளாக இருந்தது சிறப்பான அம்சம். கல்வி என்று ஒரு துறை வேகமாக வளர்வதனால் மட்டும் பூர்த்தியாகிவிடுவதில்லை. விஞ்ஞானம் மட்டும் போதாது; அரசியல் மட்டும் போதாது; கலைகளும் கல்வியில் இடம் பெறும் வரையில் கல்வி நினைப்பு, முறை பூரணமாக இராது என்பது இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனையில் முக்கியமான ஒரு அம்சம். உடனடியாக இல்லாவிட்டாலும் சிறுகச் சிறுக, இருபதாம் நூற்றாண்டின் ஒரு நாளாவது இந்திய மரபுக் கலைகளின் முக்கியத்துவத்தை இந்தியர்களுக்கு உணர்த்துவதற்கு ஸரபோஜி, ஸ்வாதித் திருநாள் போன்றவர்களின் சேவை உபயோகப்பட்டுள்ளது. இன்னமும் அது பூரணமாகச் செயல்பட்டு வருவதாகவோ, கல்வியில் கலைகள் உரிய ஸ்தானத்தை அடைந்துவிட்டதாகவோ சொல்ல முடியாது. அது அவர்கள் பழுதல்ல. அவர்கள் செய்ய வேண்டியதைச் செய்துவிட்டுப் போய்விட்டார்கள். அதன் மறுமலர்ச்சிப் பயனைப் பூரணமாக உழைத்து அடைய வேண்டியது, அடைய ஆவன செய்து கொள்ள வேண்டியது நமது கடமையாகும்.

இன்னும் ஒன்றும் சொல்லலாம். இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளில் சமூக சீர்திருத்தம் என்பது காலத்தில் முதலாவதாகவும், மத சீர்திருத்தம் என்பது இரண்டாவதாகவும், பொருளாதாரம் என்பது மூன்றாவதாகவும், தொழில் என்பது நாலாவதாகவும், அரசியல் என்பது ஐந்தாவதாகவும் இடம் பெற்றது. இதை ஒரு மொத்தமான மதிப்பாகக் கொள்ள வேண்டும். சற்று முன்பின் மாறியிருக்கலாம். கல்வியும் கல்வித் துறையில் கலைகளின் இடமும் மிகவும் பிற்பட்ட காலத்திலேயே ஏற்பட்டவை. சுதந்திரம் வரும் வரையில் இந்தியாவில் புதுக் கல்வி முறை பற்றி மகாத்மா காந்தி, ரவீந்திரநாத தாகூர், அரவிந்த கோஷ் போன்றவர்கள் ஓரளவு சிந்தித்தார்கள். சுதந்திர வருஷத்துக்குப் பின் இந்தியாவில் கல்வி பற்றிய சுதந்திரமான சிந்தனைகளே தோன்றவில்லை. கல்வி பற்றி தத்துவதரிசி என்றோ, சோதனையாளர் என்றோ சொல்ல சுதந்திர இந்தியாவில் யாருமே காணவில்லை. கல்வியைப் பற்றிய சிந்தனை எழாதபோது அதில் கலைகளின் ஸ்தா



தாய் நத்தை மகளிடம்: கோவிச்சுக்காதேம்மா... உன் கல்யாணத்துக்கு வரலாம்னுதான் புறப்பட்டேன். ஏதோ சீமந்தத்துக்காவது வர முடிஞ்சுதே... —தனபாலன்

னத்தைப் பற்றி நினைக்க யாரும் இல்லை என்று ஏற்பட்டுவிட்டது.

என்றும் கலைகளுக்கு சுபாவத்திலேயே உள்ள ஒரு உயிர்த்துவத்தின் காரணமாக இந்த நூற்றாண்டின் இருபதுகளில் முப்பதுகளில் இசையில், நாட்டியத்தில், இது போன்ற வேறு கலைகளில் மக்கள் ஈடுபட்டு கொண்டு தங்கள் முயற்சியாகவே ஒரு ஒரு வழியாக கலைப்பூர்த்தியைத் தேடிக் கொண்டார்கள். இந்தக் கலை மறுமலர்ச்சியை சாத்தியமாக்கியவர்கள் சென்னை போன்ற நகரங்களில் ஏற்பட்ட சபாக்கள் என்றும் அவற்றிற்குப்பின் இருந்த, சில சமயம் இப்போது பெயர் தெரிபவராக சில நபர்களும்தான் என்று சொல்ல வேண்டும். இந்திய மறுமலர்ச்சியில் சிறந்த நவீன அம்சங்களில் சிலவகைப் பண்பை - மரபுவழிக் கலைகள் இடம் பெற்றதை - இந்திய சமுதாயம் தன்னைப்புதுப்பித்துக் கொள்ளச் செய்த ஒரு முயற்சியாகவே கருத வேண்டும். சில பெயர்கள் இதில் தெரிய வருகின்றன. ஒவ்வொரு பிராந்தியத்திலுமே சில பெயர்கள் சொல்லப்பட வேண்டியவை இருக்கலாம். பல பதினெட்டாம் நூற்றாண்டு பத்தொன்பதாம் நூற்றாண்டுப் பெயர்கள் அடிபட்டுப் போய்விட்டன. இத்தனைக்கும் மத்தியில் சங்கீத மும்மூர்த்திகள் பெயரும், ராஜா சரபோஜி, ராஜா ஸ்வாதித் திருநாள், வடிவேலு சகோதரர்கள் பெயர்களும் தெரிய வருகின்றன. சில சமயம் பெயர்களுக்கப்பால் எதுவும் தெரியவில்லை என்றுகூடச் சொல்ல வேண்டியதாக இருக்கிறது. இவையெல்லாம் தென்னிந்தியாவைப் பற்றிய வரையில் சொல்லப்பட்ட பெயர்கள். வங்கத்தைப் பற்றிப் பிரசாரம் சுத்தமாக இருக்கிறது. என்றாலும்கூட வங்க இசை நாட்டியக் கலைஞர்களைப் பற்றி மற்ற பிரதேசங்களில் அதிகம் தெரியவில்லை. அதேபோல ஒவ்வொரு பிரதேசத்தைப் பற்றியும் சொல்லலாம்.

இந்தியாவின் கலைச் சரித்திரம்- பிராந்திய ரீதியாகவும் தேசிய ரீதியாகவும்- விரிவாக எழுதப்பட வேண்டியது மிகமிக அவசியம். அரசியல் சரித்திரத்திலேயே மூழ்கிக் கிடக்கிற சரித்திரப் பேராசிரியர்கள் இதை சமீப காலத்தில் செய்வார்கள் என்று தோன்றவில்லை. இப்படி ஒரு சரித்திரப் பாரம்பரியம் ஏற்பட்டு கலைகள் உரிய ஸ்தானத்தை மக்கள் மனங்களில் பெறும் வரையில் இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகள் பூரணமாக்கப்பட்டதாகச் சொல்ல முடியாது.

ஸ்வாதித் திருநாள், ராஜா சரபோஜி, வடிவேலு சகோதரர்கள் பற்றிக் கிடைக்கிற தகவல்களுடன் நாம் திருப்திப்பட்டுக் கொள்ள வேண்டியது தான். ●


# தினமணி கதிர்

26-10-86 தினமணி இணைப்பு

பொறுப்பாசிரியர்:

கி. கஸ்தூரிரங்கன்

கதைகளில் வரும் பெயர்கள், சம்பவங்கள் அனைத்தும் கற்பனையே. யாரையும் எதையும் குறிப்பிடுவன அல்ல.

கதை, கட்டுரை எழுதுவோர் காகிதத்தின் ஒரே பக்கத்தில் தெளிவாக எழுத வேண்டும். பிரசுரிக்கப்படாதவற்றைத் திரும்பப் பெற போதிய தபால் தலை வைத்து அனுப்ப வேண்டும்.

தினமணி கதிருக்கு எழுதுபவர்கள் கீழ்க்கண்ட முகவரிக்கு எழுத வேண்டும்.

பொறுப்பாசிரியர்:

தினமணி கதிர்

எக்ஸ்பிரஸ் எஸ்டேட், சென்னை-600 002.

லிக்கு அழைத்துள்ளது மத்ய அரசு. சுமார் 23 இந்தியத் தூதுவர்கள் மற்றும் ஹைகமிஷனர்கள் டில்லி வரயிருக்கிறார்கள்.

கொர்ப்பச்சோவின் வருகை, "பிரஜ்டீஜியஸ் மேஜர் விசிட்", இதை வெற்றிகரமாகச் செய்து காட்ட வேண்டும் என்று ஆப்த நண்பர்களிடம் ராஜீவ் காந்தி அடிக்கடி கூறுகிறார்.

காங்கிரஸ் கட்சியும் இந்த விஷயங்களில் பின்வாங்கவில்லை. அர்ஜுன்சிங் ஐடியாவின் பேரில், பஞ்சாப் முன்னாள் முதல்வர் சர்தார் தர்பாரா சிங் தலைமையில் ராஜீவ் காந்தியின் அனுமதியுடன் ஐந்து மெம்பர்கள் உயர்மட்டக் குழு ஒன்று மாஸ்கோ விஜயம் செய்தது. கம்யூனிஸ்ட் கட்சித்தலைவர்களைக் கண்டு பேசியது. ரமேஷ் பண்டாரி இந்தக் குழுவின் செயலாளராக இருந்தார். காங்கிரஸ் கட்சியின் தலைவர் என்ற முறையில் அனைத்து காங்கிரஸ் தலைவர்களையும் கொர்ப்பச்சோவுக்கு அறிமுகப்படுத்த திட்டமிட்டுள்ளார் ராஜீவ். காங்கிரஸ் கட்சியும், மாஸ்கோ கம்யூனிஸ்ட் கட்சியும் ஒரு ஒப்பந்தத்தில் கையெழுத்திட இருக்கிறார்கள். கொர்ப்பச்சோவ் வருகையால் காங்கிரஸ் கட்சிக்கும் 10/15 லட்ச ரூபாய் செலவிருக்கக் கூடும்.


கொர்ப்பசோவ்

—பாரத்வாசி



அப்பாவையே எட்டவில்லை!

தன் மகன் சன்னி டியோலை 'சூப்பர் ஸ்டார்' ஆக்கத் தலைகீழாய் நின்று பார்த்தார் தர்மேந்திரா. அது நடப்பதாய்த் தெரியவில்லை. சமீபத்தில் அப்பாவும், பிள்ளையும் சேர்ந்து நடித்திருந்த 'சுல்தானத்' படுதோல்வியடைந்தது. 'இதெல்லாம் சினிமாவில் சகஜம்' என்று சொன்னாலும் உள்ளுக்குள் வேதனைப் படுகிறார் 'தரம்'. குறிப்பிட்டுச் சொல்ல வேண்டிய இன்னொரு விஷயம் - 'சன்னி டியோல் இன்னமும் தர்மேந்திரா (இப்போது) வாங்கும் ஊதியத்தையே எட்டிப் பிடிக்கவில்லை' என்பது!

பாரி

# மகாதேவ கோவிந்த ரானடே

சுதந்திரத்துக்குப் பின் ரானடே என்கிற பெயர் அவ்வளவாக மக்களிடையே அடிபடவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். சுதந்திரத்துக்கு முன் இரண்டு மூன்று தலைமுறையினர்-வயதானவர்களும் இளைஞர்களும்-மகாதேவ கோவிந்த ரானடேயைப்பற்றி பூரணமாகவே தெரிந்து வைத்துக் கொண்டிருந்தார்கள், தங்களிடையே பேசிக் கொண்டார்கள் என்பதுடன், இந்திய மறுமலர்ச்சியின் "பரிபூரண" மனிதனை அவரை உணர்ந்து, பின்பற்ற வேண்டிய முன் உதாரணமாக ஏற்றுக் கொண்டு செயல்பட வேண்டும் என்று முனைந்தார்கள்.

மகாத்மா காந்தி இந்திய அரசியலுக்கு வந்தபோது கோபாலகிருஷ்ண கோகலே என்பவரைத் தன் அரசியல் குருவாகக் கருதினர்-சொன்னர். ரானடே அந்த கோகலேயின் குரு. கோகலேவுக்குப் பொது வாழ்வுச் சிந்தனைகளை பெருமளவுக்குச் சமைத்துத் தந்தவர் ரானடேதான்.

ரானடேயின் வாழ்க்கையும் சிந்தனைகளும் இந்திய மறுமலர்ச்சிக்கு முன் உதாரணங்களாக அமைந்ததற்குக் காரணம், ஆங்கிலக் கல்வி பெற்று மேலை நாட்டுச் சிந்தனைகளை ஏற்றுச் சிந்தித்தவர் என்றாலும், இந்தியாவில் புரட்சி மரபு என்கிற-அடித்தளத்துடன் அமைய வேண்டும் என்று அவர் எண்ணியதே! ஆன்மிக, மத, அரசியல், சமுதாய, பொருளாதார தொழில் மறுமலர்ச்சியெல்லாம் ஒரு மரபு தளத்தில் வேர்கள் விட வேண்டுமென்று அவர் எண்ணினர். தன் வாழ்க்கையையும், சிந்தனைகளையும் மரபு என்கிற அடிப்படையில் அமைத்துக் கொண்டதுடன், மற்றவர்களும் அந்த மரபை ஏற்க வேண்டும் என்று அவர் வற்புறுத்தினர்.

நவீன நல்வாழ்வுக்கு ஏற்ற ஒரு மரபை மஹாராஷ்டிரத்திலும் வேறு பல இந்தியப் பிரதேசங்களிலும் ராமானுஜர், ஏகநாதர், நானக் போன்றவர்கள் சுட்டிக்காட்டி, தளம் அமைத்துத் தந்திருக்கிருர்கள் என்று அவர் சொன்னர். கிறிஸ்துவ மதத்தில் இருந்தது போல பல பலஹீனமான விஷயங்கள் இந்து மதத்திலும் இருந்தன. இந்து மதத்தில் சீர்திருத்தம் என்பது, வெளிநாட்டிலிருந்தோ, மேலை நாட்டுச் சிந்தனைகளிலிருந்தோ வர வேண்டிய அவசியமே இல்லை. அதற்காக மேலை நாடுகளில் உள்ள நல்லவைகளை ஏற்றுக் கொள்ளக்கூடாது என்பதில்லை. ஆனல் அவையும் நமது மரபுக்கு ஏற்ற வகையில் அமைந்துவிட வேண்டும். மனிதன் ஒரு சரித்திரத்துக்கு உட்பட்டு இந்த உலகத்தில் வாழ்கிருன். சரித்திர நோக்கு என்பது இன்று மட்டுமல்ல, என்றுமே முக்கியமானது.

இப்படிப் பார்க்கும்போது மஹாதேவ கோவிந்த ரானடே இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளுக்கு ஒரு சரித்திர நோக்கையும் மரபு நோக்கையும் கொண்டு வருகிருர் என்பது தெரிய வருகிறது. இதை அவர் இந்திய மறுமலர்ச்சிக்கு அளித்த விசேஷ அம்சமாகக் கருத வேண்டும்.

க.நா.சுப்ரமண்யம்

பம்பாய் மாகாணத்தில் நிஃபோர் என்கிற கிராமத்தில் 1842ல் ஒரு சாதாரண பிராமணக் குடும்பத்தில் பிறந்தவர் மஹாதேவ கோவிந்த ரானடே. ஆரம்பப் படிப்பை கோல்ஹாப்பூரிலே முடித்துக்கொண்டு 1854ல் பம்பாய்க்கு வந்தார். முதலில் மாணவராகவும் பின்னர் லெக்சரர், பேராசிரியராகவும், 1854 முதல் 1871 வரையில் ஒரு பதினேழு ஆண்டுகள் பம்பாய் எல்ஃபின்ஸ்டன் கல்லூரியுடன் சம்பந்தப்பட்டிருந்தார். 1871 முதல் ஒரு இருபத்திரண்டு வருஷங்கள் புனேயில் சப்-ஜட்ஜாக நியமிக்கப்பட்டு திறம்பட உத்தியோகம் பார்த்தார் 1893ல் பம்பாயில் ஹைகோர்ட் ஜட்ஜானார். 1901ல் அறுபது வயது நிரம்புவதற்குச் சில நாட்களுக்குமுன் இறந்துபோனார்.

ரானடேயின் பொது வாழ்வை இரண்டு பகுதிகளாகப் பிரித்துக் காணலாம். 1871 முதல் 1885 வரை புனேயில் பல பொதுக் காரியங்களில் அவர் ஈடுபட்டிருந்தார். புனே சர்வஜானிக் சங்கத்தின் மூலம் பல பிரசங்கங்கள் செய்தார். அதன் காலாண்டுப் பத்திரிகையில், பல பொதுப் பிரச்சினைகள் பற்றி அழுத்தமான கனமான கட்டுரைகளை எழுதினார். 1885 முதல் இறக்கும் வரையில் பம்பாயில் பல நகர, தேசிய, ஸ்தாபனங்களுடன் தொடர்பு கொண்டு, பிரசங்கங்கள் செய்தும் கட்டுரைகள் எழுதியும் பொதுஜனசேவை செய்தார் பம்பாய் பிரார்த்தனா சமாஜ் என்கிற சங்கத்தை ஆரம்பித்து அதன் தலைவராகப் பல பிரசங்கங்கள் செய்தார். சமுதாய மாநாடு என்று ஒரு தேசிய அமைப்பை 1885ல் தொடங்கி நடத்தினார். இந்திய தேசிய காங்கிரஸ் மாதிரி அதுவும் தேசிய அளவில் பொது விஷயங்களில் பங்குபெற்றது. 1890ல் அவருக்குப் பொருளாதார விஷயங்களில் இருந்த ஈடுபாட்டின் காரணமாக, புனேயில் தொழில் மகாநாடு தொடங்கி நடத்தினார். மனிதன் தனியாகச் செயல்படுவதைவிட, ஒரு ஸ்தாபன ரீதியில் செயல்படுவதுதான் அதிகப் பலனைத் தரும் என்று அவர் எண்ணினார். மனிதனுடைய உடம்பில் பல அவயவங்களும் ஒத்துழைப்பது போல, ஒரு ஸ்தாபனத்தில் எல்லோருமாக சேர்ந்து ஒத்துழைத்தால் அதிகப் பயனைப் பெற முடியும் என்றார் அவர். அதனால்தான் பிரார்த்தனா சமாஜம், சமுதாய மகாநாடு, தொழில் மகாநாடு என்று பல ஸ்தாபனங்களை அமைத்து அவர் பயன்காண முயன்றார் என்று சொல்ல வேண்டும்.

மற்ற விஷயங்களைப் பற்றி எழுதியது போலவே, இந்திய மதச் சீர்திருத்தம் பற்றியும் தெளிவாகச் சிந்தித்து பல கட்டுரைகளை எழுதியிருக்கிறார் ரானடே. அந்தக் கட்டுரைகளை சரித்திர ரீதியாக மட்டுமின்றி, இன்றைய இந்தியத் தேவைகளை ஒரு இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனையாளன், கண்டு சொன்ன முக்கியமான விஷயங்களாகவும் ஏற்றுக்கொள்ள வேண்டியிருக்கிறது. ராமகிருஷ்ண பரமஹம்சரின் ஆன்மீகக் கதைகள் போல, ஜோதி ராமலிங்கத்தின் சமரச சன்மார்க்கக் கட்டுரைகள் கவிதைகள்போல, ரானடேயின் கட்டுரைகளுக்கும் இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளில் நிரந்தரமான ஒரு இடம் உண்டு. இந்திய தெய்வ நம்பிக்கையின் தத்துவம் என்றும், தெய்வ நம்பிக்கையுள்ள ஒருவ

---

**'கதர்' வந்த கதை!**

அலி சகோதரர்களின் அருமைத் தாய் பீவி அம்மாள், தன் கையினால் நூற்கப்பட்ட நூலைக் கொண்டு நெய்த துண்டு ஒன்றை, தன் மகன் மௌலானா முகம்மது அலியிடம் கொடுத்து, "இதை காந்திஜிக்கு 'கதர்' ஆக (கௌரவமாக) போர்த்து!" என்றார்கள்.

'கதர்' என்ற அரபிச் சொல்லுக்கு 'மாட்சிமை மிக்க', 'கண்ணியமிக்க', 'நெருக்கடியான', 'ஒளி' போன்ற பல அர்த்தங்களுண்டு. இவ்வாறு தான் 'கதர்' என்ற சொல் நடைமுறைக்கு வந்தது.

எம்.எம். இப்ராஹீம்

னின் சிந்தனைகள் என்றும், மற்றும் ஏகநாத், கபீர், ராம்தாஸ், துக்காராம், நாகநாத், நானக், ராமானுஜர் இவர்கள் பற்றி அவர் எழுதியுள்ள சுருக்கமான கட்டுரைகளும் மிகவும் முக்கியமானவை.

ஹிண்டு ப்ராடஸ்டன்ஜிசம் என்கிற கட்டுரையில் பொதுவாகக் கல்வி சமஸ்கிருதத்தின் மூலம் அளிக்கப்படுவதை எதிர்த்து அவர் புரட்சி செய்தார். தாய் மொழியில்தான் கல்வி இருக்க வேண்டும் என்று இந்துமதச் சீர்திருத்தக்காரர்கள் வற்புறுத்தியதை எடுத்துச் சொல்கிருர் ரானடே. சித்து விளையாட்டு விளையாடி அதிசயங்கள் செய்து காட்டுகிற யோகிகளை நம்பக்கூடாது என்கிருர்கள் சீர்திருத்தக்காரர்கள். அவர்களிடையே ஜாதி மதக்கட்டுப்பாடுகள் இல்லை. பலிகள் தருவதையும், அசட்டு ஆடம்பரக் காரியங்களில் மதத்தின் பெயரால் ஈடுபடுவதையும் அவர்கள் கண்டிக்கிருர்கள். இந்தச் சீர்திருத்தவாதிகளில் ஆண்களும் பெண்களும் உண்டு. கோயில் குளங்களில் அசட்டு நம்பிக்கை வைப்பதை அவர்கள் கண்டிக்கிருர்கள். ஒன்றே கடவுள் என்று வற்புறுத்துகிருர்கள். ஒன்றே குலம் என்பதனுல் மக்களுக்குள் ஏற்றத் தாழ்வு கற்பிப்பது சரியல்ல என்பதும் வெளிப்படுகிறது.

மஹாதேவ கோவிந்த ரானடே மத விஷயங்களை எடுத்துச் சொன்னதில் புதிதாக எதையும் ஸ்தாபித்துவிடவில்லை என்பதுதான் விசேஷம். தயானந்த சரஸ்வதிபோல, "வேதங்களுக்குத் திரும்பிப் போ" என்ருே, பிரும்ம சமாஜிகள் சொன்னதுபோல நவீன கிறிஸ்துவ வழிகளை பின்பற்று என்ருே, அவர் சொல்லவில்லை. மக்கள் ரானடேயின் தத்துவங்களை சிந்தனைகளை தத்துவார்த்தமாகப் புரிந்துகொண்டார்களா என்பது பற்றி சந்தேகப்படலாம் தான். அது விவாதிக்கப்படவேண்டிய விஷயமாக இன்றைக்குத் தோன்றலாம். ஆனுல் ராமானுஜர், ஏகநாதர், நானக் என்ற மரபு வழி வந்த சிந்தனை என்பதால் பெருவாரியான மக்களுக்கு அவற்றை ஏற்றுக்கொள்வது சுலபமாகவே இருந்தது.

தெய்வத்தில் நம்பிக்கையுடன், நீதி தர்மம் இவற்றில் ஈடுபாடுஉள்ளவராகத் தன்னை எண்ணியதால் ரானடேக்கு ஒவ்வொரு மனிதனின் உள்ளத்திலும் கடவுள் அவன் மனச்சாட்சி மூலம் பேசுகிருன் என்று சொல்ல முடிந்தது. இந்த மனச்சாட்சி என்கிற தெய்வத்தின் குரல், மஹாத்மா காந்தியின் பொது வாழ்வு மூலம் நமக்கு இன்னும் அதிகமாகப் பின்னர் பரிச்சயமாக இருந்தது என்பதையும் கவனிக்க வேண்டும். எல்லா மனிதர்களுக்கும் மனச்சாட்சி என்று ஒன்று எப்படியோ இருப்பதனுல், தெய்வம் உண்டு என்பதும் நிரூபணமாகிறது என்று வாதித்தார் ரானடே.

மனிதன் சமுதாய மிருகம் மட்டுமல்ல. பௌதிக ரசாயனச் சேர்க்கைகளால் மட்டும் ஏற்பட்ட ஒரு முடிச்சல்ல. அன்ருடத் தேவைகள் திருப்தியுறுவதால் மட்டும் திருப்தி அடைந்துவிடுகிறவன் அல்ல. தெய்வீகம் என்கிற ஒரு பொறி எல்லா மனிதர்களிடையேயும் சமமாகக் காணக் கிடக்கிறது. ஷிர்டி சாய்பாபாவும் ராமகிருஷ்ண பரமஹம்சரும் ஆன்மீக வழியில் வந்த மற்றவர்களும் இதையெல்லாம் நிரூபணம் செய்துகாட்ட வேண்டிய விஷயங்களாக கருதியதில்லை. ரானடே சொல்லிப்பார்த்து நிரூபிக்க முடியும் என்று எண்ணிச் செய்துபார்த்தார். இதற்கு அவருடைய மேலை நாட்டுப் படிப்பு காரணமாக இருக்கலாம்.

மனிதனை, சுதந்திரமாக இயங்கவிடாமல் கட்டுப்படுத்துகிற விஷயங்கள் பல இருந்தாலும், சுதந்திரமாக மனச்சாட்சியின்படி நடப்பதற்கும் போதுமான இடம் இருக்கிறது என்று ரானடே வற்புறுத்தினுர். மேலை நாட்டு அறிவுவாதிகள் போல் இல்லாமல், தன் வாழ்க்கையையே சித்தாந்த ரீதியாகத் தன் கொள்கைப்படி அமைத்துக் கொள்ள ரானடேயால் முடிந்தது. திலகர் முதல் தடவையாக ராஜத்துவேஷக்

குற்றம் சாட்டப்பட்டு கோர்ட்டில் நின்ற போது, ரானடே ஒரு நீதிபதியாக இருந்தார். தன்னைச் சந்தேகித்த பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தினர்கூட எதுவும் சொல்லமுடியாதபடி அவர் நடந்துகொண்டார்.

மதம், மனச்சாட்சி என்றெல்லாம் ரானடேயைப் பற்றி இவ்வளவு தூரம் சொல்ல இடம் இருக்கிறது. அரசியலிலும் பொதுவாழ்விலும் காந்தியின் வழிகளைக் கண்டு, 'மஹாத்மா' என்று பாராட்டிய இந்திய மக்கள் அவருக்கு முன் பொது வாழ்விலிருந்த ஒரு மஹாத்மாவாகவே ரானடேயைக் கண்டுகொண்டார்கள் என்றே சொல்ல வேண்டும். தாம் என்கிற தனி நினைப்பே இல்லாதவர் என்றும், யாரையும் எப்பொழுதும் ஒரு சொல்கூட கடிந்து சொல்ல முடியாதவர் என்றும் ரானடேயை அறிந்தவர்கள் எழுதி வைத்திருக்கிறார்கள்.

தாதாபாய் நௌரோஜியைப் போல, ஆங்கிலேயர்கள் சுதந்திரச் சிந்தனை படைத்தவர்கள். அவர்களுக்கும் தர்மம், நீதி உண்டு. **அவர்கள்** மனச்சாட்சியைத் தட்டி எழுப்ப முடியும்' என்று ரானடேயும் நம்பினார். அவர் காலத்தில் அவர் முயற்சிகள், தாதாபாய் நௌரோஜியின் முயற்சிகள் போலவே, பலிக்கவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். ஆனால், அதற்காக அவர் நம்பிக்கை பொய்த்துவிட்டது என்று சொல்லிவிட முடியாது. ஒன்றிரண்டு தலைமுறைகளுக்குப் பிறகு சந்தர்ப்பங்கள் உதவவே மஹாத்மா காந்தியால் அதைச் சாதிக்க முடிந்தது. இந்திய மறுமலர்ச்சியில், பலபேர் பலமுனைகளில் உழைத்துச் சாதித்த அற்புதமே இந்தியச் சுதந்திரம்.

ரானடேயின் சிந்தனைகளில், 'மதச் சீர்திருத்தங்களை அடிப்படையாகக் கொண்டே மற்றச் சீர்திருத்தங்கள் எல்லாம் அமைய வேண்டும்' என்பதுதான் அஸ்திவாரம். தன்னைச் சீர்திருத்திக் கொள்வதன் மூலம், உலகத்தைச் சீர்திருத்திவிடலாம் என்று அவர் நம்பினார்.

## காஸிப்'பச்சன்...



அவர் படவுலகிலிருந்து ஓய்வு பெறப்போகிறார். இப்போது நடித்துக் கொண்டிருக்கும் படம்தான் அவரது கடைசி படம்', 'இப்போதெல்லாம் அவர் இரண்டு ஷிப்ட் நடிக்க ஒப்புக் கொள்வதில்லை', 'அவருக்கு நடிப்பை விட வியாபாரத்தில் ஈடுபாடு அதிகமாகிவிட்டது. தான் நடித்து வெளிவரும் படங்களின் பம்பாய் அல்லது டெல்லி, உ.பி. ஏரியா விநியோக உரிமையை வாங்கிவிடுகிறார்' - இதெல்லாம் ஓர் 'பெரிய' நடிகர் பற்றிய சமீபத்திய 'பம்பாய் வதந்திகள்' அவர் அமிதாப்பச்சன்.

—குமாரி



"மலையேறும் கோஷ்டி எதுக்காக ஜவுளிக் கடைக்குள்ளே வருது...?"

"இங்கேதான் ஜவுளி கள்ளாம் மலை மலையாய்க் குவிந்திருக்காமே...!"

—நித்யா

அதற்கு அவரே ஒரு பெரும் உதாரணமாகவும் இருந்தார்.

அவரை உதாரணமாகக் கொண்டு, அவர் இறந்தபின் இருபத்தைந்து ஆண்டுகள் உயிர் வாழ்ந்த அவரது இரண்டாவது மனைவி ரமாபாய் ரானடே அவரால் முழுமையாக உருவாக்கப்பட்டவர்தான். முதல் மனைவியை இழந்துவிட்ட ரானடே, தன்னுடைய முப்பத்திரண்டு வயதில் எழுத்தறிவில்லாத பன்னிரெண்டு வயதுப் பெண்ணை ரமாபாயைத் திருமணம் செய்து கொண்டார். ரானடே இறந்த பிறகு, அவர் வழியில் செல்வதற்குப் போதுமான கல்வியும் தீவிரமும் வேகமும் ரமாபாயிடம் காணப்பட்டதென்றால் அவையெல்லாம் ரானடேயால் தரப்பட்டவைதாம்!

சுதேசி இயக்கம் பிற்காலத்தில் ஒரு பொருளாதார அம்சமாக விசுவரூபம் எடுக்க இருந்தது. 1871-72லேயே ரானடே ஒரு சுதேசித் திட்டத்தை உருவாக்கித் தந்தார். இந்தியர்கள் தங்களுக்குத் தாங்களே உதவிக்கொண்டு, தன்னிறைவு காணவேண்டும் என்று வற்புறுத்தினர். நாட்டைத் தொழில்மயமாக்குவது பற்றியும், பொருளாதார முன்னேற்றம் பற்றியும் தீர்க்க தரிசனத்துடன் பல விஷயங்களை அவர் எடுத்துச் சொன்னர். திட்டமிட்டு முன்னேறுவது என்பது ஒரு சோஷலிஸ அமைப்பின் அம்சமாகக் கருதப்படுகிறது. பொருளாதார வளர்ச்சிக்கு திட்டமிடுவது அவசியமான ஒரு காரியமாக-நௌரோஜி, டாடா, ரானடே, பின்னர் வந்த விசுவேஸ்வரய்யா முதலியவர்கள் வற்புறுத்தியிருக்கிறார்கள் என்பது கவனிக்கப்பட வேண்டிய விஷயம். இந்தியப் பொருளாதாரத்தின் வளம் பெருக, பாதுகாப்புகள் அவசியம் என்பதையும் ரானடே ஆரம்பம் முதலே வற்புறுத்தி வந்தார்.

ஆங்கிலக் கல்வி அவசியம் என்று சொன்ன ரானடே ஆங்கில இலக்கியத்தில் அளவற்ற ஈடுபாடு கொண்டவர். அதே சமயம் தாய்மொழிக் கல்வியும் தாய்மொழி அன்பும் மிக மிக அவசியம் என்றும் வற்புறுத்தினர். மராட்டியர்கள் அடிமைப்பட்டு ஒடுங்கியிருந்த காலத்தில், அவர்களுடைய சரித்திரப் பெருமையை அவர்களிடமே எடுத்துச் சொல்லித் தன்னம்பிக்கையை ஊட்டியவர் அவர். இந்திய சரித்திரம் எப்படி எழுதப்பட வேண்டும் என்பதற்கு உதாரணமாக அமைந்தது அவருடைய (பூர்த்தி பெருத) மராட்டியச் சரித்திரம் என்று சொல்லலாம்.

இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளில் ரானடேக்கு உள்ள பங்கு மிகவும் பெரிது. அது சரிவரக் கணக்கில் எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது என்று சொல்ல முடியவில்லை.



**ஆப்பிள் பாலும் ஆந்திர முதல்வரும்**

என்.டி.ஆருக்கு மிகவும் பிடித்தது, சில்லென்றிருக்கும் ஆப்பிள் மில்க். இப்போதுகூட, இவருடைய நண்பர்களான திரைப்படத் தயாரிப்பாளர்கள் தங்கள் புதிய படங்களை அவர் சென்னைக்கு வரும்போது, போட்டுக் காண்பிக்கிறார்கள். அது போன்ற சமயங்களில், என்.டி.ஆரின் வீட்டிலிருந்து 'ஆப்பிள் மில்க்' தயாராக வந்துவிடும். தியேட்டரிலோ பக்கத்திலோ கிடைக்கும் குளிர்பதனப் பெட்டியில் வைத்திருந்து இடைவேளையில் அவர் குடிப்பதற்குக் கூலாகக் காத்திருக்கும். — பரத்



று வேறு கிராமங்களில் வசிக்கும் விவசாய
ர்கள். ஒரு நாள் இருவரும் தற்செயலாக சந்தித்தனர்...

கந்தனின் மாடுகள் மேய்ந்து கொண்டி-
ன்றன. திடீரென பலத்த சப்தம். பாறை
சரிந்து விழுகிறது. பயந்து போன
கந்தன் மாடுகளை பத்திரமான
இடத்துக்கு
ஓட்டுகிறார்.













SAA/NIA/2802/TM/B

மு விவரங்களுக்கு, அருகிலுள்ள நியூ இந்தியா ஆபீஸ் அல்லது ஏஜெண்டோடு தொடர்பு கொள்ளுங்கள்.

ன்சூரன்ஸ் — நஷ்ட காலத்தில்
பகமான ஆதரவு!



நியூ இந்தியா
அஷ்யூரன்ஸ்

(ஜெனரல் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன்
ஆட்ப் இந்தியாவின் துணை நிறுவனம்)

இந்தியாவில் இலக்கிய மறுமலர்ச்சியை உருவாக்குவதற்கு முற்பட்ட இலக்கிய ஆசிரியர்கள் எல்லோருமே பொதுவாக இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளில் தங்களுக்குள்ள பங்கையும், பொறுப்பையும் உணர்ந்து முழுப் பிரக்ஞையுடன் செயல்பட்டார்கள் என்று எண்ண வேண்டியதாக இருக்கிறது. மற்ற துறைகளில் இருக்கிற அளவிற்கு மேற்பட்ட ஒரு தீர்க்க தரிசனம் இலக்கியப் பணி செய்ய முற்பட்டவர்களுக்கு அவசியமாக இருந்திருக்கிறது. மைக்கேல் மதுசூதன தத்தர், பங்கிம் சந்திர சட்டர்ஜி, ரவீந்தர நாத் தாகூர் போன்ற வங்க இலக்கிய ஆசிரியர்களும், வேத நாயகம் பிள்ளை, ராஜம் ஐய்யர் போன்ற தமிழ் இலக்கிய ஆசிரியர்களும், சந்து மேனன் போன்ற சீர்திருத்த, அரசியல், சுதந்திர வாதங்கள் எல்லாம் மறுமலர்ச்சியின் அம்சங்களாக் அமைந்தன என்றாலும், முழுப் பிரக்ஞையுடன் செய்யப்பட்டவை என்று சொல்ல முடியாது. இந்திய மறுமலர்ச்சி என்கிற பிரக்ஞை இன்றும் கூட எல்லோருக்கும் ஏற்பட்டு விட்டதாகச் சொல்ல முடியாது. அதன் பல அம்சங்களையும் உணர்ந்தவர்கள் கூட வேறு சிலவற்றை உணராமல் இருக்க முடிகிறது என்பது காணக் கிடைக்கிற விஷயம்.

எல்லா அம்சங்களையும் காணச் சக்தி படைத்தவனைத்தான் இந்திய மறுமலர்ச்சியின் முழுச்சின்னமாக ஏற்க இயலும். அந்த முழுமை இன்னும் சாத்தியமாகவில்லை என்பதனாலேயே இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகள்

# சந்து மேனன்

மலையாள இலக்கிய ஆசிரியரும், இன்னேரன்ன பலரும், இதற்கு உதாரணங்களாகக் கூறலாம்.

ஜோதி ராமலிங்கம், ராமகிருஷ்ண பரமஹம்சர் போன்றவர்கள் இலக்கியம் செய்ய வேண்டும் என்று எண்ணிச் செய்தவர்கள் அல்ல. அவர்களுடைய ஆன்மீகப் பெருந்துறையிலே இலக்கியமும் ஒரு பகுதியாக அடங்கி உருப் பெற்று விட்டது. கோபால கிருஷ்ண பாரதியார் எழுதிய நந்தன் சரித்திரம், ஹரிஜனங்களும் மனிதர்கள்தான் என்று எடுத்துக் கூற உபயோகப்பட்டாலும், தில்லை நடராஜனின் பெருமையைக் கூறுவதுதான் அதன் முதல் நோக்கம். இது மாதிரியே சமூக மதச் பூர்த்தி ஆகவில்லை பூரணம் பெறவில்லை என்று சொல்ல இடமிருக்கிறது.

இந்திய இலக்கிய மறுமலர்ச்சியில் கவிகளை விடவும் அதிகமான அளவில் நாவலாசிரியரிடம் இந்திய மறுமலர்ச்சியின் முழுமை ஓரளவுக்குக் காணக் கிடக்கிறது என்று சொல்லலாம். பங்கிம் சந்திரர் வெறும் நாவலாசிரியர் மட்டுமல்ல இந்து ராஜ்யத்துக்கு ஒரு புது உருவமும் பரிமாணமும் தர அவர் முயன்றார். ஒரு புது கிருஷ்ணனை, தான் உருவாக்கிய கிருஷ்ணனை மக்களின் தெய்வமாக்க முயன்றார்.

வேத நாயகம் பிள்ளையோ ஆங்கிலக் கல்வி மூலம் நாட்டு மக்களிடையே ஊறிப் போயிருந்த அசட்டுத் தனங்

க.நா. சுப்ரமண்யம்

களை அகற்றி, ஜோதிடம், கோவில் பூசாரி, உடுக்கு அடிப்பது முதலிய அறிவற்ற காரியங்களை நீக்கி, பெண் கல்வி, பெண் கல்வி மூலம் ஆண் பெண்ணை சரிசமமாக்கி, நீதி தருமம் வழுவாமல், எல்லோரும் சுய மொழிப் பற்றுடன் வாழ வேண்டும் என்று விரும்பினர். பிறப்பினுல் கிறிஸ்தவர் ஆகி விட்ட அவருக்கு பங்கிம்மைப் போல இந்து மதப் புனர் நிர்மாணத் தில் ஈடுபாடில்லை. இந்தியாவில் வேறு எந்த மொழியிலும் முதல் நாவலை ஒரு இந்திய கிறிஸ்தவர் எழுதியிருப்பதாகத் தெரியவில்லை. இதன் பலா பலன்கள் என்ன? இதனுல் இலக்கியத்துக்கு ஏற் பட்ட லாபம் என்ன? இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளுக்கு இதனுல் ஏற் பட்ட புதிய பரிமாணம் என்ன? என்று விசாரித்துப் பார்க்க யாரும் முயற்சி செய்திருப்பதாகத் தெரியவில்லை.



வேத நாயகம் பிள்ளை ஓர் செயற் கையான நகைச்சுவையுடன், சில சமயம் உறுத்துகிற பிரச்சார வேகத்து டன், பிரதாப முதலியாரின் கதையைச் சொல்கிருர். ஆனுல் மலையாள மொழியில் இந்துலேகா என்கிற சிறந்த முதல் நாவலை எழுதிய சந்துமேனன் மிகவும் இயற்கையான நகைச்சுவையுடன் தனது நாவலை நடத்திச் செல்கிருர். அவருக்கே சுபாவமாக இருந்த நகைச்சு வையுடன், அவர்களுக்கு மக்களின் பழக்க வழக்கங்களும் ஓரளவு சிரிப் புக்கு இடம் தரக் கூடியவையாகவே இருந்தன. தமிழரிடையே லேசான கசப்புக் கலந்த சிரிப்புக்கு இடந்தந்த வாழ்க்கை சந்துமேனன் நாவலில் லேசான கசப்புக்குக் கூட இடம் தராமல் இடம் பெற்று விடுகிறது. பங்கிம் சந்திரரைப் போல் அல்லாமல், அவரைப்போல் வாழ்க்கையை ரொமான்டிக் கண்ணுடி போட்டுக் கொண்டு பார்க்காமல், தமிழ் நாவலாசிரியரும் மலையாள நாவலாசிரியரும் ஹென்றி ஃபீல்டிங்கின் டாம், ஜோன்ஸ், சார்லஸ் டிக்ஸ்ஸின் டேவிட் காப்பர் ஃபீல்ட், வில்லியம் மேக்பீஸ் தக்கரேயின் ஹென்றி எஸ்மாண்டு சரித்திரம் என்கிற பரம்பரையில் வந்தவர்கள். ஆங்கில ஹாசிய நோக்கு பரம்பரை என்று இதைச் சொல்லலாம். இவர்கள் ஏற்படுத்திய மரபு இந்தியா பூராவுக்கும் பயன்படவில்லையே என்று வருத்தப்பட வேண்டியதாக இருக்கிறது. பங்கிம்மின் ரொமான்டிக் மரபுக்கு மாற்ருக எதிர்மறையாக, அல்லது அனுசரணையாக இந்த ஹாசிய மரபு பயன்பட்டிருக்கலாம். அப்படிப் பயன்படாதது இந்திய இலக்கிய மறுமலர்ச்சியில் ஒரு குறைபாடு என்று தான் சொல்ல வேண்டும்.

ஆங்கிலத்தில் இருக்கிற மாதிரி தமிழில் வசன காவியங்கள் இல்லை என்கிற குறையைப் போக்குவதற்காகத் தன் நாவலை எழுதியதாக வேத நாயகம் பிள்ளை சொல்லுகிருர். அதே போல சந்துமேனன் தனது நாவலை மொழி பெயர்த்த வில்லியம்டுமெர்க் என்பவருக்கு ஒரு பிரதியை அனுப்பி அத்துடன் எழுதிய கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிடுகிருர்:

"நாவல்களைப் பற்றி நான் சொல்லுவதைக் கேட்டுக் கொண்டிருந்த என்

துணைவியாருக்கு நாவல் படிக்க வேண்டும் என்கிற ஆசை. அவளுக்கு ஆங்கிலம் தெரியாது. ஆங்கிலத்தில் உள்ளது போல ஒரு நாவல் எழுதி அவளுக்குத் தந்தால் படித்து இன்புறுவாள்”.

அதற்காகவே தான் அந்த நாவலை எழுதிய மாதிரிச் சொல்லிவிட்டு, மேலும் சொல்லுகிறார்—“ஆங்கிலம் தெரியாத மலையாளிகள் பலர் உள்ளனர். ஆங்கில நாவல் இலக்கியம் பற்றி இவர்களுக்குத் தெரியாது. இயற்கைக்கு ஒவ்வாத முட்டாள் தனமான நகைப்புக் கிடமான நடக்க முடியாத கதைகளை மலையாளத்தில் படித்து இவர்களுக்குப் பழக்கம். ஆங்கில நாவல் இலக்கியத்தில் இவர்களுக்கு ஈடுபாட்டை ஏற்படுத்தி குறிப்பிட்ட சூழ்நிலையில் அவர்களது குடும்பங்களில் ஏற்படுவது போன்ற நிகழ்ச்சிகள் விவகாரங்கள் அடங்கிய கதை ஒன்றை அவர்கள் ரசிக்கின்றனரா என்று பார்க்க விரும்புகிறேன்” என்றும் எழுதினார்.

அவர் நாவலை மலையாளிகள் விரும்பிப் படித்தார்கள் என்பது உடனடியாகவே அவருக்குத் தெரிந்துவிட்டது. 1890-ல் இந்துலேகா முதற்பதிப்பு வெளிவந்து. மூன்று மாதங்களுக்குள்ளாகவே விற்றுத் தீர்ந்து விட்டது. இந்தத் தொண்ணூறு ஆண்டுகளில் எழுபது பதிப்புகளுக்கு அதிகமாக விற்பனையாகியிருப்பதாய்ச் சொல்லுகிறார்கள். இந்த மாதிரியான ஒரு வெற்றி தமிழில் முதல் இரண்டு நாவலாசிரியர்களுக்கு ஏற்படவில்லை என்று தான் சொல்ல வேண்டும். தங்கள் நல்ல இலக்கியாசிரியர்களிடம் கவனம் தமிழர்களுக்குக் குறைவு என்று தான் சொல்ல வேண்டும்.

தான் நாவல் எழுதியதின் இன்னொரு நோக்கமாக அதே கடிதத்தில் மேலும் சந்துமேனன் சொல்லுகிறார்.

“அறிவும் அழகும் நிரம்பிய நமது நாயர் பெண்களுக்கு ஆங்கிலக் கல்வி கற்பிக்கப்பட்டால் அவர்கள் எந்த நிலைக்கு உயர முடியும், எந்த அளவுக்குச் சக்தியடைய முடியும். செல்வாக்குப் பெற முடியும் என்பதை எனது மலையாளச் சகோதரர்களுக்கு விளக்கிக் காட்டுவதும் எனது அவா.”

இந்தச் சந்தர்ப்பத்தில் ஆங்கிலக் கல்வியின் அவசியத்தை இந்தியாவில் பரவலாகப் பலரும் வற்புறுத்தினார்கள். மேலை நாடுகளில் வளர்ந்த புதுக் கலைகளை இந்தியர்களுக்கு அறிமுகப்படுத்தவும் இந்தியப் பழங்கலைகளின் நல்ல அம்சங்களைத் தெளிந்து கண்டு அனுபவிக்கவும் ஆங்கிலக் கல்வியைத் தவிர அந்தக் காலத்தில் வேறு வழியில்லை. இன்றும் ஓரளவுக்கு இது உண்மை என்று தான் சொல்லக்கூடிய வகையில் இருப்பது இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனை ஓங்கி வளர்ந்தாலும்கணிசமான அளவில் தேங்கிவிட்டது என்பதையே சுட்டிக் காட்டுகிறது.

மேலே குறிப்பிட்ட கடிதத்தின் கடைசி வாக்கியமாக டுமெர்க்குக்குச் சந்துமேனன் எழுதுகிறார்.

“எனது நாட்டு மகளிரின நிலைமையையும் பொதுவாக உயர்த்தும் நோக்கத்துடனேயே நான் இந்துலேகாவை எழுதினேன்.”

சந்துமேனன் 1847-ல் பிறந்தவர். பதினேழாவது வயதில் மெட்ரிகுலேஷன் தேறியவுடன் வேலையில் சேர வேண்டிய அவசியம் ஏற்பட்டது. தலைச்சேரி சிறு வழக்குகள் நீதி மன்றத்தில் எழுத்தர் பதவி கிடைத்தது. 1871-ல் கள்ளிக்கோட்டையில் தலைமை முன்சிப் ஆனார். அந்த சமயத்தில் சப் கலெட்டராக இருந்த லோகன் என்பவர் எழுதிய மஸார் மாவட்ட நடைமுறை நூல் என்கிற சட்டப் புஸ்தகத்தை தயாரித்ததில் அவர் பெறுமளவு உதவியதாகச் சொல்லப்படுகிறது. 1875-ல் நிலையான முன்சிப்பாக நியமிக்கப்பட்டார். மாஞ்சேரி, பாலக்காடு, ஒத்தப்பாணம், கள்ளிக்கோட்டை முதலிய இடங்களில் பணியாற்றினார். 1886 முதல் 92 வரை பரப்பானங்காடியில் மாவட்ட முன்சிப்பாகப் பணியாற்றினார். அப்போதுதான் 1890-ல் அவருடைய இந்துலேகா என்கிற நாவல் வெளிவந்தது. திறமைசாலி என்றும், நாணயஸ்தர் என்றும் அவரை அவரு

னடைய உயர் அதிகாரிகள் பாராட்டி ஞர்கள் என்று தெரிகிறது.

சட்ட நிபுணராக அவர் செய்த செயல் ஒன்றை பற்றி வெகுவாகச் சொல்லுகிருர்கள். 1890-ல் மலபார் திருமண ஆணைக்குழு நியமிக்கப்பட்ட போது சந்துமேனனுக்கு சர். டி. முத்துஸ்வாமி அய்யர், சர்.சி. சங்கர நாயர் முதலியோருடன் அதில் உறுப்பினராகச் செயல்பட்டு பணி புரிய சந்தர்ப்பம் கிடைத்தது. மருமக்கள் தாயம் திருமண முறைகளை மாற்ற மற்றவர்கள் சிபாரிசு செய்தபோது சந்துமேனன் மரபு வழியில் வந்த பழக்க வழக்கங்களை மாற்றுவது தவறு என்று தனிப்பட்ட அபிப்பிராயம் தெரிவித்தார். இந்த வழிகளில் பலவற்றை இந்துலேகாவில் கேலி செய்திருக்கிருர் அவர் என்ருலும் சமுதாயத்தில் நடைமுறைப் பழக்க வழக்கங்களை மாற்ற முயற்சி செய்யாமல் நடைமுறையைச் சட்டப்படி முறையாக்கி ஏற்றுக் கொள்வதே சரி என்பது அவருடைய குறிப்பு. சர். சி. முத்துஸ்வாமி ஐயருக்கும் அது சரி என்று படவே, இவர் சமுதாயப் பார்வை புகழ்பெற்று எங்கும் பரவலாகப் பேசப்பட்டது.

1899 வரையில் இவர் உயிருடன் இருந்தார். திருநெல்வேலி, மங்களூர், கள்ளிக்கோட்டை முதலிய இடங்களில் வேலை பார்த்தார். சாரதா என்ற பூர்த்தியாகாத கதையை எழுதினர். அந்தக் காலத்தில் கேரளா வர்மா, குருசிசின்ன நம்பியார் முதலியவர்கள் எழுதிய கவிதை நூல்களைத் தன் செலவிலேயே அச்சிட்டு வழங்கினர் என்று சொல்லப் படுகிறது. ஆங்கிலத்தில் நீதி நிர்வாகம் பற்றி இரண்டு தொடர் சொற்பொழிவுகள் ஆற்றியதாகத் தெரிகிறது. இவற்றை மிகவும் சிறப்பான நூல்களாகச் ...கள்.

... இறக்கும்போது இவர் சென்னை சட்டப்படிப்புக்கு ஒரு தேர்வாளராக நியமிக்கப்பட்டிருந்தார்.

சந்துமேனனுடைய நகைச்சுவையைப் பற்றி ஏராளமான கதைகள் வழக்கில் இருக்கின்றன. ஒரே ஒரு உதா




- உலகிலே இருப்பவை இரண்டு யானை வகைகள் மட்டுமே. ஆப்பிரிக்க யானை-ஆசிய யானை இவைதாம் இரண்டு வகை.
- ஆசிய யானைகளை விட எல்லா வகைகளிலுமே உயர்ந்தவை ஆப்பிரிக்க யானைகள்.
- யானைகள் ஒரு குட்டிதான் போடும். எப்போதாவது அபூர்வமாய் இரண்டு போடும்.
- யானைகளின் காது எப்போதும் அசைந்தபடியே இருக்கும். காரணம் காதில் பூச்சிகள் ஏதும் போய்விடாமலிருக்கவே!
- யானைகள் அன்பும்-பாசமும் கொண்டவை. கூட்டம் கூட்டமாய் வாழுபவை.
- ஒவ்வொரு யானை கூட்டத்திற்கும் ஒரு தலைவன் உண்டு.
- யானைக்கூட்டம் தூங்கும்போது-ஒரு யானை காவலிருக்கும்.
- யானைக்கு துதிக்கை ஒரு அற்புத உறுப்பு. எலும்புகளில்லாத வெறும் தசைகளாலான துதிக்கை, நம் கைகளுக்கு இணையானது.
- யானை துதிக்கையால் தண்ணீரைப் பீச்சியடித்தாலும்-தண்ணீர் குடிக்கத் தனது வாயையே உபயோகப்படுத்துகிறது.
- யானைகளுக்கு கண், காது போன்றவை சக்தி குறைந்தவை என்ருலும், மோப்ப சக்தி அபாரமானது.
- யானை துதிக்கையால் சுவாசித்தாலும்-வாசனைகளை நுகரத் தன் வாயைப் பயன்படுத்துகிறது.

-கருணாகரன்

ரணத்தை மட்டும் இங்கு சொல்லலாம். மேனனுக்கு மேல் நீதிபதியாக இருந்த ஒரு ஆங்கில துரைக்கு கச்சேரியில் சிறு சப்தம் கேட்டால்கூடப் பிடிக்காது. அந்த உயர்நீதிபதியின் அறைக்குப் பக்கத்தறையில் ஒரு மேளக்காரரின் வழக்கைச் சந்துமேனன் விசாரிக்க வேண்டியிருந்தது. மேளக்காரன்தான் முதல் தரமான மேளக்காரன் என்றும் தனக்கு இரண்டாந்தர மேளக்காரனின் ஊதியத்தைக் கொடுத்திருந்தார்கள் என்றும் வழக்குப் போட்டிருந்தார். மேளக்காரன் உண்மையிலேயே முதல்தரமானவன்தானு என்று சோதித்துப் பார்க்கிற சாக்கில் அவரைக் கச்சேரியில் ஒரு முழு மேளக் கச்சேரி செய்ய உத்தரவிட்டு விட்டாராம் சந்துமேனன். டேவிட்ஸ் என்கிற ஆங்கில நீதிபதி "உங்களுக்கு சட்டம் மட்டும்தான் தெரியும் என்று பார்த்தேன். இசையும் தெரியுமா?" என்று கேட்டாராம். சந்துமேனன் சிரித்துக்கொண்டே "கதகளியும் தெரியும்" என்ருராம்.

இந்துலேகாவில் சந்துமேனன் மிகவும் கனமான விஷயங்களேயோ ஆழமான விஷயங்களேயோ தொடமுயலவில்லே. சாதாரண ஒரு குடும்பக் கதையை சிக்கல் இல்லாமல் யதார்த்தம் பிசகாமல் நேராகச் சொல்லிக்கொண்டே போகிருர். பழைய தலைமுறைக்கும் புதிய தலைமுறைக்கும் இடையேயுள்ள போராட்டங்கள் இடம் பெற்றிருக்கின்றன. அவை மிகைப்படுத்தப்படாமல் இருப்பது மிகமிக விசேஷம். காலத்தால் ஏற்படக்கூடிய சிறு மாறுதல்களைக்கூட சகித்துக்கொள்ள முடியாத பெரியவர்களை 'லேசாக நகைப்புக்கு இடமாக்கி ஆசிரியர் வர்ணிக்கிருர். இந்திய இலக்கியத்தில் போதுமான அளவு நகைச்சுவை இல்லை என்பது ஒரு பெரும் குறை. அதை ஓரளவுக்கு இந்துலேகா சீர் செய்யப் பார்க்கிறது என்று சொல்லலாம். இதைத் தவிரச் சிறப்பாகச் சொல்லவேண்டிய விஷயம் சில பழைய அசட்டு நம்பிக்கைகள், குருட்டுப் பழக்க வழக்கங்கள் இவற்றை எடுத்துக் காட்டுகின்றது நாவல். மூர்க்கமாகப் புரட்சி செய்யாமல், லேசாக சிறு சிறு அளவில் சீர்திருத்தங்கள் செய்து சமுதாயத்தை மாற்றிவிடலாம் என்பது சந்துமேனனின் முடிவு; நம்பிக்கை.

கல்வி மூலம் புதுச் சமுதாய அடிப்படைகள் தோன்றி விஞ்ஞான கலாச்சார ஆன்மீக, மத, சமுதாய, அரசியல் சுதந்திர, அறிவு எல்லோரிடமும் பரவ வேண்டும். ஆண் பெண் அடங்களுக்கும் அறிவு புகட்டப்படவேண்டும். அதுதான் இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளின் முதல் முன்னேற்றப்படி என்று சந்துமேனன் நம்பிச் சொல்லியது தெரிகிறது. கல்வியின் அவசியத்தை மிகவும் அழுத்தமாகக் கூறியுள்ளார்.

---



காதலி: "இன்னும் எத்தனை நாளைக்கு நாம் இந்த ஓடத்தின் பின்னுலேயே சந்தித்துக் கொண்டிருப்பது?"

காதலன்: "கவலையை விடு. நாளைக்கு இந்த இடத்தை மாத்திடலாம்."

—செல்வி ரஜினி

கண்டவர். இந்தப்படத்தின் மொத்தத் தயாரிப்புச் செலவு பதினேரு லட்ச ரூபாய்.

**என்ருவது ஒரு நாள்:** இந்தப் படத்தின் தயாரிப்பாளர் பாலு வாத்தியார் என்பவர். இவர் ஊரில் பசங்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்த நேரம் போக, மீதமுள்ள நேரங்களில் அவ்வப்பொழுது சென்னைக்கு வந்து தயாரித்த படம் இது! ஆரம்ப காலங்களில் பத்திரிகைப் பேட்டிகளில், "இதுவரை தமிழ் சினிமாவில் எந்த ஒரு டைரக்டரும் ஜனங்களுக்குத் தேவையான கருத்துக்களைச் சொல்லவில்லை! நான் என்னுடைய இந்தப் படத்தின் மூலம் சொல்லப் போகிறேன்!" என்று சூளுரைத்தார்! பத்து லட்ச ரூபாய் செலவுக்குள் முடிந்த இப்படம் ஆறேழு, மாதங்களாக விற்பனையாகாமல் காத்திருந்து தடாலென்று ஒரு நாள் காலை தமிழ் நாடு முழுவதும் ஆங்காங்கே ஓடியது! ஏரியாக்கள் விற்பனை ஆகாமல் சில இடங்களில் பாலுவாத்தியார் சொந்தமாக ரிலீஸ் செய்திருக்கிருர்.

**தொடரும் உறவு:** டைரக்டர் கார்த்திக் ரகுநாத்தின் முதல் படம் இது! நான்கு வருடங்களுக்கு முன்பு ஆரம்பிக்கப்பட்ட இப்படத்தில் கார்த்திக், ஊர்வசி, சிலுக்கு போன்ருேரெல்லாம் சல்லிசான தொகை வாங்கிக் கொண்டு நடித்து முடித்தார்கள். முடித்து என்ன பயன்? இரண்டு வருடங்களாக இப்படம் கேட்பாரற்றுக் கிடந்தது! இதற்கிடையில் பாலாஜி கம்பெனியின் படங்களான அண்ணி போன்றவை கார்த்திக் ரகுநாத்துக்கு கொஞ்சம் பெயரைச் சம்பாதித்துக் கொடுக்கவும், தீபாவளி நெருங்கவும் சரியாகி இருக்கவே படத்தை, பல்லைக் கடித்துக் கொண்டு வெளியிட்டு விட்டார்கள்! பல வருடங்கள் ஆனதால் இந்தப் படத்தின் தயாரிப்புச் செலவு பதினுறு லட்ச ரூபாய்.



கார்த்திக் ரகுநாத்.

**செல்வமுத்து**

---




"ஆஷ்" என்ற ஆங்கிலேயரைக் கொலை செய்த வாஞ்சிமீது தொடரப்பெற்ற வழக்கில் தீர்ப்பு வழங்கிய நீதிபதி, விடுதலை உணர்ச்சியைத் தூண்டி விடுவது பாரதியின் பாடலே என்று குற்றம் சாட்டி, 'என்று தணியும் இந்த சுதந்திர தாகம்' என்ற பாடலை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துக் குறிப்பிட்டாராம் தம் தீர்ப்பில்.

பாரதியின் கவிதை இவ்வாறு முதன் முதலாக மொழிபெயர்க்கப் பெற்று அரங்கேற்றப்படும் பெருமை சென்னை உயர்நீதி மன்றத்துக்குக் கிடைத்தது.

—தகவல்: வைதேகி.

# ரொமேஷ் சந்திர தத்தர்

க.நா.சுப்ரமண்யம்.

இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனையாளர்களில் பெரும்போலோர் ஆங்கிலக் கல்வியின் விளைவாக உருப் பெற்றவர்கள். சிலர் மட்டும் ஆங்கில அறிவு சிறு அளவில் கூடப் பெறுமல் உருவானவர்கள் என்று சொல்லலாம். உதாரணமாக ஜோதி ராமலிங்கம், ராமகிருஷ்ண பரமஹம்ஸர், தியாகப்பிரம்மம், கோபாலகிருஷ்ண பாரதியார் என்று சிலரைச் சொல்லலாம். தாதாபாய் நௌரோஜி, டாடா, வேதநாயகம் பிள்ளை, ராஜா சரபோஜி, பங்கிம் சந்திரர், ரானடே, சந்து மேனன் போன்றவர்கள் ஆங்கிலக் கல்வியால் உருவானவர்கள்.

டாடா, நௌரோஜி போன்றவர்கள் சொந்தத் தொழில் துறையில் ஈடுபட்டவர்கள். ரானடே, ரொமேஷ் சந்திர தத் போன்றவர்கள் ஆங்கில சர்க்காரில் பெரிய உத்தியோகம் வகித்து நல்ல பெயர் வாங்கியவர்கள். சந்துமேனன், பங்கிம், வேதநாயகம் பிள்ளை போன்றவர்கள் அடுத்த தளத்தில் உத்தியோகம் பார்த்தவர்கள். இதில் வேத நாயகம் பிள்ளை மேல் ஏதோ குற்றச்சாட்டு இருந்து தன் காலத்துக்கு முன்பே ரிடையர் ஆனவர். சந்துமேனன் கடைசி வரை நல்ல பெயருடன் உத்தியோகம் பார்த்தவர். பங்கிம் தன் செயலற்ற தன்மையை உணர்ந்து திறம்படவே என்றாலும் மனசில்லாமல் ஆங்கில சர்க்காரிடம் உத்தியோகம் பார்த்தவர்.

ரொமேஷ் சந்திர தத்தர் ஐசிஎஸ் பரீக்ஷையில் இங்கிலாந்தில் தேர்ச்சி பெற்று மிகவும் திறமைசாலி என்கிற பெயருடன் நிர்வாகம் செய்து விட்டு, முழுப் பென்ஷன் வாங்குவதற்கான காலம் வரை வேலையில் இருந்துவிட்டு சரித்திரப் பேராசிரியராக லண்டனில் வேலை செய்து விட்டு, பரோடா சமஸ்தானத்துத் திவானுக உயிர் நீத்தவர். 1848ல் பிறந்த அவர் 1909ல் காலமானூர். இந்திய தேசியப் பொருளாதார இலக்கிய, ஆன்மீக, கலாசார மறுமலர்ச்சியில் ரொமேஷ்சந்திர தத்தரின் சேவை சரிவரக் கணிக்கப்பட்டுச் சொல்லப்பட்டிருப்பதாகச் சொல்ல இயலாது. வங்காளிகளிலும்கூடச் சிலரது சேவைதான் திரும்பத் திரும்பச் சொல்லப்பட்டு பெரிதாக மதிக்கப்பட்டிருக்கிறதே தவிர வேறு சிலருடைய சேவை அவ்வளவாக நிற்கவில்லை, இன்று மக்களை எட்டும்படியாக எடுத்துச் சொல்லப்படவில்லை என்று தான் சொல்லத் தோன்றுகிறது.

பிற்காலத்தில் ஜவஹர்லால் நேரு இந்தியக் கல்வியியக்கத்தின் தந்தையாக 1925 முதல் 1948 வரை செயலாற்றினூர். இந்த அறிவு மரபு இலக்கிய சரித்திரப் பொருளாதாரப் பண்பாட்டுத் துறைகளில் இந்தியாவில் ரானடே, ரொமேஷ் சந்திர தத் இவர்களுடன் தொடங்குகிறது என்று சொல்லலாம். இந்த அறிவுஜீவி மரபு ஆங்கில கல்வி, சிந்தனைகள், ஸ்தாபனங்கள் இவற்றின் தாக்கத்திஞல் ஏற்பட்டது என்பதில் சந்தேகத்துக்கு இடமில்லை. ஆங்கிலக் கல்வி சிந்தனைத் தாக்கத்தின் சிறப்பான அம்சங்கள் எல்லாம் ரானடேயிடமும்,

ரொமேஷ் சந்திர தத்தரிடமும் பூரண மாகக் காணக் கிடக்கின்றன.

பெற்றோரை சிறு வயதிலேயே இழந்து விட்ட ரொமேஷ் சந்தர் தன் மாமாவின் தயவில் வளர்ந்து பெரியவ ரானவர். 1864 முதல் 1868 வரை கல்கத்தா ராஜதானிக் கல்லூரியில் அதன் சிறந்த மாணவர்களில் ஒருவரா கப் படித்தார். ஸுரேந்திரநாத் பா னர்ஜி, பிஹாரிலால் குப்தா, ஸ்ரீமத் பாபாஜி தாகுர் என்பவர்களுடன் 1868ல் ஐ.சி.எஸ். பரீஷைக்குப் போ னார். அப்போதெல்லாம் ஐ.சி.எஸ். பரீட்சை இங்கிலாந்தில் மட்டும்தான் அனுமதிக்கப்பட்டிருந்தது. 1869ல் மூன் றாவது மாணவனாகப் பரீட்சையில் தேறி ரொமேஷ் சந்தர் ஐ.சி.எஸ். வே லைக்குப் பயிற்சி பெற்றார். இங்கிலாந் தில், ஆங்கிலேயர்கள் மத்தியில் இந்தி யாவின் பிரதானத் துறையில் பயிற்சி பெற்றுக் கொண்டிருக்கும்போது அவர் இந்தியர் ஒருவருக்கு எழுதிய கடிதத்தில் பின்வருமாறு எழுதுகிறார்: "இந்தியா வில் இருக்கிற நம்முடைய நாகரீகமும் பண்பாடும் மிகவும் பழமையானது. மிகவும் மேன்மையானது. நாம் பார்க் கக் கொடுத்து வைக்காவிட்டாலும் நம் குழந்தைகளின் குழந்தைகள் இந்தியா வும் உலகத்தின் மிகப் பெரிய உன்னத தேசமாக மற்ற பெரிய தேசங்களுடன் சரி சமமாக வீற்றிருப்பதைப் பார்க்கக் கொடுத்து வைத்திருப்பார்கள். நாகரீ கம், பண்பாடு என்பதுடன் தொழில் துறையிலும் உற்பத்தியிலும் வியாபா ரத்திலும் நாமும் முதல்வர்களாக விளங்கும் காலம் வரும். நிலையான ஸ்தாபனங்கள் எழுந்து செயல்படவும் உண்மையான சமுதாய முன்னேற்றங் கள் ஏற்படவும்தான் போகின்றன. இந் தியாவுக்கு அந்த நாள் சீக்கிரமே வரட் டும் என்று நாம் பிரார்த்திப்போமாக."

நாகரிகம், பண்பாடு, சரித்திரம்- இவற்றுடன் தொழில், உற்பத்தித் திறன், வியாபாரம், பொது ஸ்தாபனங் கள், சமுதாய முன்னேற்றங்கள்- என்று இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளின் அடிப்படைகளை எத்தனை துல்லியமாக



விஜி:- என்னது, மாமியா ருக்கு கொலுசு போடப் போறி யா?

சுஜி:- நாங்க பேசறப்போ ஒட்டுக் கேக்கறதைக் கண்டுபி டிக்க இது ஒண்ணுதான்டி வழி.

-எம். சுதா.

---

இங்கு ரொமேஷ் சந்திர தத்தர் எடுத் துக் கூறுகிறார் என்பது கவனிக்கப்பட வேண்டிய விஷயம். அவர் கவலை தன் பெரிய உத்தியோகத்தைப் பற்றியதாக மட்டும் இல்லை. தேசத்தின், தேச மக்க ளின் தேவைகளைப் பற்றியதாகவும் இருந்தது என்பது வெளிப்படை.

இலக்கியத்திலும் ஆங்கில மொழி யிலும் ஈடுபாடு கொண்டிருந்த அவர் தன் பிரிட்டன் வாசத்தையும், ஐரோப் பிய விஜயம் பற்றியும் ஆங்கிலத்தில் ஐரோப்பாவில் மூன்று ஆண்டுகள் என்று ஒரு நூலை எழுதி வெளியிட் டார். அதில் இங்கிலாந்தில் சமுதாயப் போக்கு பொது ஸ்தாபனங்கள், அரசி யல், இலக்கியப் போக்குகள் சிந்தனைப் போக்குகள் எல்லாவற்றையும் எழுதி விட்டு, ஃபிரெஞ்சு, இத்தாலி, ஜெர் மனி, ஸ்விட்ஸர்லாந்து முதலிய தேசங் களிலும் தன் அனுபவங்களைச் சொல்லு கிறார். தெளிவாகவும், அழகாகவும் எழு தப்பட்டிருக்கிறது என்பதுடன், அந்த நூலைத் தேடிப் படிப்பவர்கள் இன்று கூடப் பயன் காண முடியும் என்று தான் தோன்றுகிறது.

இந்தியாவுக்குத் திரும்பிய பிறகு முதலில் அஸிஸ்டெண்டு கலெக்டராக வும் பின்னர் கலெக்டராகவும் பல

இடங்களில் வேலை பார்த்தார். இரக்க குணமும், திறமையும் படைத்த அதிகாரி என்றும்,மக்களுக்கு உதவி செய்வதையே தனது சேவையின் லக்ஷியமாகக் கொண்டு உழைத்தார். என்றும் சக அதிகாரிகள் கூறுகிறார்கள். இப்படி ஆங்கில அதிகாரிகளின் பாராட்டைப் பெறுவது அக்காலத்தில் மிகவும் அரிது. அரிய ஒரு காரியத்தை ரொமேஷ் சந்திர தத்தர் அநாயாசமாகச் செய்து காட்டினார். வங்காளத்தில் அந்த நாட்களில் புயல், வெள்ளம் என்றும், ப்ளேக், பஞ்சம் என்றும் பல பகுதிகளில் மக்கள் மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்த காலம். 1876ல் தக்ஷிண்ய நாஹாபால்பூர் என்கிற பிரதேசத்தில் புயலால் விளைந்த சேதத்தில் மக்களுக்கு உதவ அவர் செய்த சேவைகள் வெகு காலம் மக்கள் மனத்தை விட்டு மறையவில்லை. பெரும்பாலோர் அங்கு ஏழை முஸ்லிம்கள். ஆடு, மாடு கன்றுகள், வீடு, வாசல், தோட்டம், துரவு என்று எல்லாம் போய்விட்ட நிலையிலும், ரொமேஷ் தத்தரின் உதவியுடன் அவர்கள் மனோதிடம் குன்றாமல் தங்களுக்குத் தாங்களே உதவி செய்து கொண்டு சமாளித்தது பற்றி ஒரு ஆன்மீக அனுபவமாகவே அதைப் பின்னர் குறிப்பிட்டிருக்கிறார் அவர்.

சமுதாயத்தில் மேல் தளத்தினரிடையேயும், முக்கியமாக நகரவாசிகளிடையேயும் பரவிக்கொண்டிருந்த அவர் காலத்திய முக்கிய மறுமலர்ச்சி சாதனமாகிய பிரம்ம சமாஜம், ராமகிருஷ்ண பரமஹம்சர் இதெல்லாம் பற்றி அவர் எதையும் சொல்லியிருப்பதாகத் தெரியவில்லை. அதாவது அவர் வாழ்க்கைக் குறிப்புகளைப் படித்தாலும் இது பற்றிய அவர் கருத்துக்கள் தெரியவரவில்லை. அவர் எதுவும் சொல்லவேயில்லையா என்பது நிச்சயமாகத் தெரியவில்லை. அப்படி சொல்லாததற்கு ஒரு காரணம் இருக்கலாம். கல்கத்தாவுக்கு அப்பாலிருந்த பல பிரதேசத்து நடுத்தர கீழ்மட்ட வகுப்பு ஜனங்களுடைய வாழ்க்கையில்தான் அவருக்கு ஈடுபாடு இருந்தது. அறிவு ஜீவிதான் என்றாலும், மரபுச் சிந்தனைகளில்பெரும் அளவுக்கு ஈடுபட்டவர் என்பதாலும் மதச் சீர்த்திருத்தமோ, சமுதாயச் சீர்திருத்தமோ மேல்மட்டத்தில் அவசியம் இல்லை. கீழ் மட்டத்தில் பொருளாதார முன்னேற்றம் ஏற்பட வழிகள் என்ன என்று அவர் சிந்திப்பதில் ஈடுபட்டிருந்ததாகத் தெரிகிறது. இது உண்மை என்று ஏற்றுக்கொண்டால் ரொமேஷ் சந்திரரை அவர் காலத்துக்கு மிகவும் முற்பட்ட போக்கு உடையவராகக் கொள்ள வேண்டும். தவிரவும் ஹிந்துக்களையும், முஸ்லிம்களையும், ஹரிஜனங்களையும் உயர்குடிப் பிறந்த மக்களையும் ஒரே மாதிரியாக சரி சமமாகப் பார்க்கும் மனப்பான்மை அவருக்கு இருந்ததாகத் தெரிகிறது. அடிப்படையில் ஒரு மனித குல நோக்கு என்று இதைச் சொல்லலாம்.

சுதந்தரமாகச் செயல்படவும், சுதந்தரமாக அபிப்ராயங்கள், கொள்கைகள் என்று தொடரவும் ரொமேஷ் சந்திர தத்தருக்கு இருந்த சக்தி பற்றி அவர் காலத்திய சக ஆங்கிலேய அதிகாரிகள் அதிக அளவில் குறிப்பிட்டிருப்பதாகத் தெரிகிறது. இந்திய அதிகாரிகள் தங்கள் சிந்தனா சக்தியையோ, சுதந்தரத்தையோ அதிகமாக வற்புறுத்தாத காலம் அது. ஐரோப்பிய இண்டிகோ முதலாளி வர்க்கத்தின் விரோதத்தையும், அதே போல ஆங்கில அதிகாரிகளின் விரோதத்தையும் பாராட்டாமல் செயல்பட ரொமேஷ் சந்திரருக்கு தெம்பு இருந்ததைப் பெரிய விஷயமாகப் பாராட்ட வேண்டும். இந்தியர்கள்ால் பெரிய அதிகாரங்களை வகித்துச் சமாளிக்க முடியாது என்று ஆங்கில ஆளுநர்கள் பரவலாகச் சொன்ன கருத்துக்கு எதிர்மறையான ருஜுவாக ஓரளவுக்கு மகாதேவ கோவிந்த ரானடே, ரொமேஷ் சந்திர தத்தர் இவர்களுடைய உத்தியோகத் திறன் பளிச்சிட்டது. அதே அளவுக்கில்லாவிட்டாலும், பங்கிம் சந்திரர், சந்து மேனன், வேத நாயகம் பிள்ளை போன்றவர்களின் சேவையும் பளிச்சிட்டது என்றுதான் சொல்ல வேண்டும். பெரிய பதவிகளை

யும் திறம்பட வகிக்க இந்தியர்களுக்குத் தகுதியுண்டு என்று செய்து காட்டிய வர்கள் இவர்கள். இது இன்று அல்ப மான சேவையாகத் தோன்றலாம், அன்று பெருவாரியாக விவாதிக்கப் பட்ட ஒரு கருத்து இது.

நில சம்பந்தமான பல துறைகளி லும், விவசாயப் போக்குகளிலும், பஞ்ச நிவாரணம், வறட்சி ஒழிப்பு, வெள்ளச் சமாளிப்பு போன்ற பல விஷயங்களிலும், விவசாயிகளின் நடைமுறைப் பிரச்சினைகளையும் தன் அனுபவத்தின் மூலம் நேரடியாக உணர்ந்து சிந்தித்துத் தன் முடிவுகளை ரொமேஷ் சந்திரதத்தர் இரண்டு நூல்க ளில் எழுதி வெளியிட்டிருக்கிறார். பஞ் சங்களும், நில வரிப் பிரிவினைகளும் என்னும் நூலும், வங்க விவசாயிகள் என்கிற நூலும் நாட்டின் அடிப்படை யாக உள்ள நிலச் சீர்திருத்தத்தையும், விவசாயத்தின் போக்கையும் வளத்தை யும் பற்றி ரொமேஷ் சந்திரதத்தர் எழுதிய நூல்கள். படிப்படியாகத்தான் என்றாலும் காலப்போக்கில் அவர் குறித்த சீர்திருத்தங்களில் பலவும் நடை முறைக்கு ஏற்றவையாகக் கையாளப் பட்டன என்பது அவருடைய தீர்க்கதரி சனத்தைக் காட்டுகிறது.

படிப்படியாக அவருக்குத் தடங்க லில்லாமல் உத்தியோக உயர்வு கிடைத் தது. பல ஜில்லாக்கள் அடங்கிய ஒரு பிராந்தியம் பூராவுக்கும் கமிஷனராகப் பதவி ஏற்கும் முதல் இந்தியராக அவர் 1895ல் விளங்கினார். ஒரிஸ்ஸாவின் கமி ஷனராகவும் இந்திய சமஸ்தானங்களின் அரசியல் ஏஜெண்டாகவும் அவர் செய லாற்றியபோது ஒரியா இலக்கியத்தின் தந்தை என்று சொல்லப்படுகிற பகிர் மோகன் குலநாபதி என்பவரைச் சந் தித்து அவர் சிந்தனைகளை எதிர் கொள்ளவும் அவருக்கு வாய்ப்பு ஏற் பட்டது. அவர் உத்தியோகத்தில் மே லும் உயர்ந்து மாகாண இந்தியக் காரி யதரிசியாவார் என்று எதிர்பார்க்கப் பட்டது. ஆனால் சேவை திருப்தியாக நடந்திருந்தாலும் போதும் என்று முழுப் பென்ஷன் பெறுவதற்கான கா

**கார்ப்பரேஷன் ரேடியோ!**

சென்னை மாநகராட்சிதான் இந்தியாவின் முதல் வானொலி நிலையத்தைத் துவக்கியது. 1929-ல் ராஜா சர் முத்தையா செட்டியார் மேயராக இருந்த போது ஆரம்பிக்கப்பட்ட அந்நி லையம் முப்பது மைல் வட்டாரத் துக்கு ஒலிபரப்பு நிகழ்த்தியது.

பின்னரே 1933-ல் அகில இந் திய வானொலி நிலையம் தோன்றி யது.

"ஸ்வாமி"



**சாதனை படைத்த காதலன்**

மார்ஷல் டி லெக்லூர் என்ற பெர்ஷிய ஓவியர் 1875-ம் ஆண் டில் உலகிலேயே மிகப் பெரிய காதல் கடிதத்தை எழுதினார். மா லிக்டி வில்லடோ என்ற மங்கைக் காக இவர் எழுதிய இந்தக் காதல் கடிதத்தைப் படித்து முடிக்க குறைந்தது இரண்டு மாத கால மாவது ஆகும்.

அவ்வளவு பெரிய அந்தக் கடி தத்தில் இருக்கும் மொத்த வார்த் தைகள் எவ்வளவு தெரியுமா? 56,25,000. அதாவது இவ்வளவு வார்த்தைகளில் சுமார் 70 நாவல் களை எழுதி முடித்து விடலாம்.

இந்தக் கடிதத்தை எழுத மார் ஷல் ஒரு குமாஸ்தாவை சம்பளம் கொடுத்து வைத்திருந்தார்.

இக்கடிதத்தில் "நான் உன்னைக் காதலிக்கிறேன்" என்ற மூன்று வார்த்தையை மட்டும் 18,75,000 இடங்களில் மார்ஷல் குறிப்பிட் டுள்ளார்.

—முக்கிமலை நஞ்சன்

லம் பூர்த்தியானவுடன் ரொமேஷ் சந்திரர் தானாக ரிடையர் ஆகிவிட்டார். ஆங்கிலத்திலும் முக்கியமாக வங்க மொழியிலும் நிறைய எழுத வேண்டும் எனகிற ஆசை அவருக்கு இருந்தது. அவர் புகழ் பங்கிம் சந்திரர் அளவுக்குப் பரவாவிட்டாலும் அவரது வங்க நாவல்கள் பங்கிம் சந்திரரின் வங்க நாவல்களுக்கு ஈடு சொல்லக் கூடியவையாக இருந்தன.

தான் எழுத முன்வந்த நோக்கத்தை அவரே குறிப்பிட்டுச் சொல்லுகிறார்: ''மக்கள் இன்று இழந்துவிட்டு நிற்கிற தேசிய உயர் கௌரவத்தை ஸ்தாபிக்க இலக்கியம் உதவ வேண்டும். இந்தியாவின் மக்களுக்குத் தங்கள் எதிர்காலத்தைப் போலவே பழைய சரித்திரத்திலும் நம்பிக்கை ஏற்பட வேண்டும்'' என்று கூறினார். இவரும் பங்கிமைப் போலவே தன் எழுத்தில் ரொமாண்டிக் மரபைப் பின்பற்றியவர்தான். நாலு சரித்திர நாவல்கள் வங்க மொழியில் எழுதி அவர் பிரசுரித்தார். அதை தவிர 12வது நூற்றாண்டிலிருந்து தன் காலம் வரை வங்க இலக்கிய சரித்திரத்தை விரிவாக எழுதியிருக்கிறார். இந்த சரித்திரத்தை மகாதேவ கோவிந்த ரானடே எழுதிய மராத்திய சரித்திரத்துடன் ஒப்பிடலாம். பிற்காலத்தில் தன் காலத்திய சமுதாய பழக்க வழக்கங்களை வைத்து இரண்டு வங்க நாவல்கள் எழுதினார். சரித்திர நாவல்களைப் போலவே இவையும் அவற்றின் காலத்தில் பிரசித்தமாக இருந்தன.

ஆங்கில இலக்கியங்களைக் கற்றுக் கரைகண்டவரான ரொமேஷ் சந்திர தத்தர் ஆங்கிலத்திலும் பல நூல்களை எழுதியுள்ளார். அவருடைய இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளின் பங்கை இந்தமாதிரி நூல்களின் தலைப்புகளே கூடக்கோடிட்டுக் காட்டுகின்றன என்று சொல்ல வேண்டும். ரிக் வேதத்தை வங்க மொழியில் பெயர்த்து வெளியிட்ட கையோடு ஆங்கிலத்தில் பண்டைய இந்தியாவின் நாகரிகம் என்று ஆங்கிலத்தில் ஒரு நூல் வெளியிட்டார். காலனி அதிகாரிகள்- மெக்காலே தொடங்கிப் பலரும்- பண்டைய இந்திய இலக்கியங்கள், சரித்திரம், மதச் சடங்குகள் இவை பற்றி அவதூறாகவும் அரைகுறை அறிவுடனும் பலவிதமான தப்பபிப்ராயங்களைப் பரப்பி வந்தார்கள். இந்தப் பரம்பரை சமீபகாலம் வரையில் நம்மிடையே நீடித்தது. இது காரணமாகத்தான் சென்ற நூற்றாண்டின் கடைசி வருஷங்களில் மாக்ஸ்முல்லர் என்கிற ஜெர்மன் சம்ஸ்கிருதப் புலவர், ''இந்தியா நாகரிகமடைந்த நாடா?'' என்று கேட்டு ஒரு அற்புதமான நூலை எழுதினார். அதேபோல சற்றேறக் குறைய அதே சமயத்தில் பாலகங்காதர திலகர் தனது பகவத் கீதை வியாக்கியானத்தையும், வேதத்தில் உள்ள ஆர்க்டிக் வீடு என்கிற நூலையும் எழுதினார். அவற்றிற்குச் சமமாக இந்திய நாகரிகத்தையும் தொன்மையையும் எடுத்துச் சொன்ன நூல் ரொமேஷ் சந்திர தத்தரின் 1889ம் ஆண்டில் பிரசுரமான பண்டைய இந்திய நாகரிகத்தின் சரித்திரம் என்பது ஆகும். கிரிர்ஸன் என்கிற ஆங்கிலப் புலவர் இது மாதிரியான ஒரு நூலைத் தான் நாங்கள் பல ஆண்டுகளாக இந்தியாவிலிருந்து எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம் என்று அதற்கு மதிப்புரை எழுதினார். மூன்று பாகங்களாக வெளிவந்த இந்த நூல் இந்திய நாகரிகத்தின் வளம், வளர்ச்சி, முக்கிய அம்சங்கள், தத்துவம் இவற்றைப் பற்றித் தெளிவாக எடுத்துச் சொல்லுகிறது.

இந்த நூல் எழுதியதன் விளைவாக லண்டன் சர்வகலாசாலையில் வேலையிலிருந்து ஓய்வு பெற்ற ரொமேஷ் சந்திர தத்தர் இந்திய சரித்திரப் பேராசிரியராகப் பணியாற்ற அழைக்கப்பட்டார். அந்த வேலையை ஏற்றுக் கொண்டு திறம்பட நிறைவேற்றினார் அவர். ஏழு ஆண்டுகள் லண்டனில் இந்திய சரித்திரப் பேராசிரியராக அவர் பணியாற்றினார். இந்தக் காலத்தில் தான் அவருடைய ராமாயணம், மகாபாரதம் சுருக்கங்கள் (செய்யுளாக) இயற்றப் பெற்று மிகவும் ஜனரஞ்சகமான வெரிமான்ஸ்

லைப்ரரியில் இடம் பெற்று இன்னும் அச்சாகிக் கொண்டு வருகிறது.

சரித்திரம், பண்பாடு, நாகரிகம், சிந்தனைகள் என்பவற்றுடன், ரொமேஷ் சந்திர தத்தர் ஆரம்ப முதலே விவசாயப் பிரச்னைகளிலும், நாட்டின் பொருளாதாரப் பிரச்னைகளிலும் ஈடுபாடு கொண்டவர். இது காரணமாக அவர் இந்தியாவின் பொருளாதார சரித்திரம் என்று ஒரு ஆதாரப்பூர்வமான நூலை இரண்டு பாகங்களாக எழுதினார். **1901**ல் பிரசுரமான முதல் பாகத்தில் ஆங்கில ஆட்சியின் ஆரம்ப காலத்தில் இந்தியப் பொருளாதாரத்தையும், **1903**ல் வெளிவந்த இரண்டாம் பாகத்தில் விக்டோரியா காலத்தில் இந்தியப் பொருளாதாரம் பற்றியும் விரிவாகக் கூறுகிறார். தாதாபாய் நௌரோஜியின் இந்திய ஐசுவரிய வடிசால் நூலைப் போல இந்த இரண்டு நூல்களும் இந்தியப் பொருளாதாரப் போக்கை அறிந்துகொள்ள பலருக்கும் உதவின. இன்றுள்ள இந்தியப் பொருளாதார சிந்தனைகள் திட்டங்கள் பலவும் ரொமேஷ் சந்திரரின் இந்த நூல் அடிப்படையிலும், தாதாபாய் நௌரோஜியின் ஆரம்ப நூல் அடிப்படையிலும் ஏற்பட்டவைதான் என்று சொன்னால் மிகையேயாகாது.

இந்தியாவுக்கு கடவுள் புண்ணியத்தால் பிரிட்டிஷ் ஆட்சியும், ஆங்கிலக் கல்வியும் கிடைத்தது பற்றி நன்றியுடன் கூறி விவரிக்கிற ரொமேஷ் தத்தர், ஆங்கில அதிகார வர்க்கம் தங்கள் கொள்கைகளாலும், நடைமுறைகளாலும் ஏற்படுகிற தீய அம்சங்களைக் கொடுமைகளைக் கவனிப்பதில்லை என்று குற்றம் சாட்டுகிறார். இந்திய தேசீய உணர்வும் சுதந்திரம் என்கிற சிந்தனையும் ஆங்கில இலக்கியம், தத்துவம், சரித்திரம் இவற்றைப் படித்துக் கொண்டதனால் ஏற்பட்டது என்று சொல்லுகிற அதே மூச்சிலேயே ஆங்கிலேயர்கள் தங்களைப் பற்றி ஒருவிதமாகவும் இந்தியர்களைப் பற்றி வேறுவிதமாகவும் எண்ணுவதை விந்தை என்று கூறிச் சாடுகிறார். இந்திய தேசீய காங்கி



**கென்னடியின் கடைசி ஆசை**

ஜான் கென்னடி இறப்பதற்கு மூன்று நாட்களுக்கு முன்பு மயானம் வழியாகச் சென்றார். மயானத்தில் சில நிமிடங்கள் நின்று, "இந்த இடம் எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. இந்த இடத்தில் நிரந்தரமாகத் தங்கி இருக்க என் மனம் விரும்புகிறது" என்றார்.

சரியாக மூன்று நாட்கள் கழிந்ததும்—

விரோதியால் சுட்டுக் கொல்லப்பட்டார். அதே மயானத்தில் அவருடைய உடல் அடக்கம் செய்யப்பட்டது.

—முக்கிமலை நஞ்சன்




ரஸின் 1898வது ஆண்டுக் கூட்டம்-லக்நௌவில் நடந்தது. அதற்குத் தலைவராக ரொமேஷ் சந்திர தத்தர்தான் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவருடைய தேச பக்தியும், சேவை மனப்பான்மையும், பொருளாதார சிந்தனைகளும், சீர்திருத்த நோக்கங்களும், சரித்திர ஈடுபாடும், மரபு வழித்தாக்கமும் பரவலாக மக்களுக்குத் தெரிந்திருந்தன.

"முடிவுகள் செய்வதில் நம்மை யாரும் கேட்டு முடிவு எடுப்பதில்லை என்கிற நிலை மாறவேண்டும்" என்று அந்த நாளிலேயே முழங்குகிறார் அவர். "இந்திய மக்களின் அன்றாட வாழ்வைப் பாதிக்கிற பல விஷயங்களில் அவர்களுடைய அபிப்பிராயம் என்ன என்று அறிந்துகொண்டு முடிவெடுக்க இப்போதைய அதிகார வர்க்கம் தயாராக இல்லை. அந்த நிலைமை உடனடியாக மாறவேண்டும். அதிகாரம் செலுத்தும் ஸ்தாபனங்களில் இந்திய அபிப்பிராயம் பிரதிபலிக்கும்படியாகச் செயல்பட வேண்டும்" என்று தனது காங்கிரஸ் தலைமையுரையில் கூறினார்.

இலக்கியம், விவசாயம், பொருளாதாரம், சரித்திரம், நாகரிகம் என்கிற துறைகளுடன் அவருக்கு அன்றாட அரசியல் துறைகளிலும் தீவிரமும் சிந்தனையும் இருந்தது என்பது தெரிகிறது. இப்போது அவர் சிந்தனைகள் பலவற்றை நாம் மறந்துவிட்டாலும், அவர் நூல்களின் பெயர்கள் கூடச் சரிவரப் பலருக்கும் தெரியவில்லை என்றாலும் இந்திய மறுமலர்ச்சி சிந்தனைகளைப் பெருவாரியாக பாதித்த முக்கியஸ்தர்களில் ஒருவர் ரொமேஷ் சந்திர தத்தர் என்பதில் யாருக்கும் சந்தேகம் இருக்க முடியாது. அவருடைய வாழ்க்கையையும் சிந்தனைகளையும் பூரணமாக அறிந்து கொள்வது இன்னும் கூட நமக்கு மிகவும் பயன் தரக்கூடிய விஷயமாக இருக்கும். இதுமாதிரிப் பலபேருடைய சேவைகள் விமரிசனப்பூர்வமாகப் பார்த்து உரம்பெறும் வரையில் இந்திய மறுமலர்ச்சி சிந்தனைகள் பூர்ணத்வம்பெறாது. ஏனென்றால் இந்தப் பெரிய நதியில் பல கிளை நதிகள் வந்து கலந்திருக்கின்றன. அவற்றில் ஒரு பெரிய கிளை நதி ரொமேஷ் சந்திர தத்தர். பல அரசியல் காரணங்களால் ஒரு சிலரைப்பற்றி அதிகமாகச் சொல்லிவிட்டு மற்றவர்களை அடியோடு மறந்து விடுவது நம்முடைய இன்றைய பழக்கமாக இருக்கிறது. இது மாற வேண்டும்.

லண்டனில் 1901ல் நேஷனல் இண்டியன் அஸோஸியேஷன் ஆதரவில் அவர் பேசிய பேச்சில் காணப்படுகிற ஒரு விஷயத்துடன் இந்தக் கட்டுரையை முடிக்கிறேன். "இந்திய வாழ்க்கையை ஆங்கிலப் போக்கையோ, ஐரோப்பியப் போக்கையோ பின்பற்றச் செய்வது விரும்பத்தக்கதல்ல, செயல்முறையில் முழுவதும் சாத்தியமும் அல்ல. தங்களுக்கு எது சிறந்த வழி என்று தீர்மானித்துக்கொள்ளப் போதுமான ஞானம் அவர்களுக்கே இருக்கிறது. தனக்குச் சிறப்புத்தரக்கூடிய பல அம்சங்களையும் ஏற்றுக்கொண்டு செயல்படும் சக்தியும் இந்திய சமுதாயத்திற்கு, ஹிந்து சமுதாயத்திற்கு இருந்து வந்துள்ளது என்பது நாம் சரித்திரத்தில் காண்கிற உண்மை. தலைமுறைக்குத் தலைமுறை, காலத்துக்குக் காலம், தங்களுக்கு வேண்டிய மாறுதல்களை ஏற்று சமாளித்து வந்தபடியால்தான் பர்ஸியா, எகிப்து பாபிலோன் போன்ற பல பழைய நாகரிகங்கள் அழிந்து போனதுபோலப் பண்டைய இந்து நாகரிகம் அழிந்து போகாமல் இன்னும் நீடித்து வருகிறது என்பதை நாம் உணரவேண்டும்."

ரொமேஷ் சந்திரரின் நவீன சிந்தனைகளின் அடிப்படை இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளின் அஸ்திவாரம் இங்கு காணக்கிடக்கிறது என்று தோன்றுகிறது. ●

கணிப்பதில் இதுவரை எவரும் வெற்றி பெற்றதில்லை!

டைரக்டர் ஆர்.செல்வராஜிடம் முதலில் ஒரு படத்திற்கும், பிறகு அரைப் படத்திற்கும் உதவியாளராகப் பணியாற்றிய லட்சுமி நாராயணன் என்பவர் சூர்யா என்ற பெயரில் டைரக்ட் செய்கிறார். டைரக்ட் செய்திருக்கும் படம் புதிய பூவிது!

சின்னச்சின்ன நட்சத்திரங்களைப் போட்டு காமெடிப் படம் என்ற பெயரில் கதை பண்ணியதில் பதினைந்து லட்ச ரூபாயை நெருக்கிச் செலவழித்திருக்கிறார்கள். மிக மோசமான இரட்டை அர்த்தமுள்ள வசனங்கள் எழுதிக் கொடுத்து கதாசிரியர் எம்.ஜி. வல்லபன் பெரிதும் உதவியிருக்கிறார். வாரப் பத்திரிகைகளில் வரும் ஜோக்குகளை எல்லாம் தொகுத்து படமாக எடுத்தால் ஜனங்கள் சிரிப்பார்கள் என்று நம்பி ஏமாந்து போயிருக்கிறார்கள். விற்காத ஏரியாக்கள் சிலவற்றை டிஸ்ட்ரிபியூஷனுக்குக் கொடுத்துவிட்டு, சில இடங்களில் சொந்தமாக ரிலீஸ் செய்திருக்கிறார்கள். தீபாவளிக்கும்பலில் வெளியிட்டதால் வியாபார ரீதியில் இப்படம் தோல்விதான்!


லட்சுமி வந்தாச்சு - சிவாஜி-பத்மினி

இந்தியில் வெற்றிகரமாக ஓடிய "சூப் சூரத்' தமிழ்நாட்டில் லட்சுமி வந்தாச்சாக வந்திருக்கிறது! சிவாஜியுடன் பத்மினியைப் பார்க்கும்பொழுது ஏதோ பழைய படம் ஒன்றைப் பார்ப்பது போல உணர்வை ஏற்படுத்தினாலும் முழுக்க முழுக்க பெண்கள் கூட்டத்தை நம்பி எடுக்கப்பட்ட படம் இது! படப்பிடிப்பில் கலந்து கொள்வதற்காக பத்மினி அடிக்கடி அமெரிக்காவில் இருந்து வருவதற்கும் சேர்த்து கொடுத்து இருக்கிறார்கள். முப்பத்தைந்து லட்ச ரூபாய் செலவில் தயாராகி இருக்கும் இப்படம் மூன்று சென்டர்களிலும் சுமாராக ஓடிக் கொண்டிருக்கிறது! விநியோகஸ்தர்களுக்கு ஐந்து சதவீதம் கையைக் பிடித்தாலும் பிடிக்கும், அல்லது மார்ஜினை நெருக்கி கொஞ்சம் லாபம் கிடைத்தாலும் கிடைக்கலாம் என்கிறார்கள்.

ஜானிவாக்கர்



பரிசு அங்கிருந்து!

விளையாட்டு வீரர் என்ற இந்த வருடத்திய பட்டத்தைப் பெறப் போகிறார் சமீபத்தில் 33வது செஞ்சுரி அடித்த சுனீல் கவாஸ்கர். இதில் என்ன விசேஷம்? இவர் பெறப்போவது ஜிம்பாப்வே அரசாங்கத்தின் பரிசை!

மஞ்சுதேவன்

# ராஜா ரவிவர்மா

மறுமலர்ச்சிச் சிந்தனைகளில் கலைகளின் தாக்கம் மிகவும் தாமதமாகவே ஏற்பட்டது என்பதை ஏற்கனவே சில கட்டுரைகளில் சொல்லியாகிவிட்டது. அதற்குக் காரணங்கள் கண்டு சொல்வது சிரமமல்ல. மக்களின் வாழ்க்கைப் போக்கில் பொதுவாக ஒரு விரிசலும் தடங்கலும் ஏற்பட்டது. இது தவிர்க்க முடியாத சரித்திர சக்திகளினால் உண்டானது. மரபுகள் துண்டித்துப் போகிற இடத்தில், கலைகள் தேங்குவதற்கு இடம் ஏற்படுகிறது. இசையில் இந்த மாதிரியான தேக்கம் ஏற்படாமல் தஞ்சையிலும் வேறு பல இடங்களிலும் நாயக்கர், மராத்திய மன்னர் ஆதரவில் இசைக் கலைஞர்கள் பார்த்துக்கொண்டார்கள். சமுதாய ரீதியில் உயர்கலையாக அப்போது கருதப்படாத நாட்டியம் ஒரு காலத்தில் தேக்கமுற்று ராஜா சரபோஜி ஆதரவில் தஞ்சை வடிவேலு சகோதரர்களின் மேதையால் இன்றுள்ள உருவம்பெற்று வளம்பெறத் தொடங்கியது.

இந்தியச் சித்திரக் கலையில் ஏற்பட்ட தேக்கமும் மாறுதல்களும் இசை, நாட்டியம் இவை ஆராயப்பட்டுள்ள அளவு கூட ஆராயப்படவில்லை. முகலாயர்கள் காலத்தில் சித்திரக் கலையில் ஏற்பட்ட வளமும் தேக்கமும் இன்றும் சரியாகக் கணிக்கப்பட்டிருப்பதாகச் சொல்லமுடியாது. இஸ்லாமியர் ஆதரவில் சித்திரக்கலைக்குச் சரியான ஆதரவு இல்லாமல் போனதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. தெற்கே தஞ்சையில் ஆண்ட நாயக்க மராத்திய மன்னர்களின் ஆதரவில் சித்திரக்கலை தொடர்ந்து செயல்பட்டிருப்பதும் பின்னர் ஆங்கிலேயர் பாதிப்பினால் வளம் பெறுவதும் குன்றியது. ராஜா சரபோஜியைப் போலவே அவருக்கு முந்தி தஞ்சையில் ஆண்ட பல மன்னர்களும் சித்திரக்கலையில் வல்லவர்களாகவும் சித்திரக்கலையை ஆதரிப்பவர்களாகவும் இருந்திருக்கிறார்கள் என்று தெரிகிறது. இப்போது தஞ்சாவூர் பாணி என்று கலை விமர்சகர்கள் போற்றுகிற கலை சித்திரம் மரபில் ஆங்கிலேயத் தாக்கம் ஏற்படுத்திய மாறுதல்களுடன் சரபோஜி காலத்துக்கு முன்பிலிருந்து வழக்குக்கு வந்துவிட்டது. கான்வஸ் சித்திரத்துணி எண்ணெய் வர்ணங்கள் என்கிற புறச்சாதனங்களுடன் யதார்த்தம் என்கிற ஒரு நோக்கமும் ஏற்பட்டது சித்திரக்கலைக்கு.

இசைக் கலைஞர்களை தஞ்சாவூரிலிருந்து அழைத்திருந்தது போலவே திருவனந்தபுரத்தை ஆண்ட மன்னர்கள் சித்திரக்கலைஞர்களையும் தஞ்சாவூரிலிருந்தே அழைத்து வருவது நடந்து வந்து கொண்டிருந்தது. அப்படி வந்த தஞ்சாவூர்ச் சித்திரக்காரரர் அழகிரி நாயுடு என்பவர். வடிவேல் சகோதரர்கள் பற்றிப் போலவே, இவரைப் பற்றியும் அதிகமாக விவரங்கள் எதுவும் கிடைப்பதாகத் தெரியவில்லை. அழகிரி நாயுடு திருவனந்தபுரம் அரண்மனைக் கலைஞராக இருந்தபோது அவரிடமிருந்து புதிதாக அமுலுக்கு வந்திருந்த வர்ணங்களை எண்ணெயில் குழைத்து கேன்வஸ் சீலையில் தீட்டும்

க.நா.சுப்ரமண்யம்

வழிகளை அரச குடும்பத்தைச் சேர்ந்த சித்திரம் தீட்டுவதில் ஈடுபட்டுள்ள ராஜவர்மா என்பவர் கற்றுக்கொண்டார். இந்தச் சித்திர வித்தையை, அவரிடமிருந்து, பின்னர் கலையளவில் மறுமலர்ச்சிக்கு ஒரு முக்கியத் து ண்டுகோலாக வளரவிருந்த ரவி வர்மா கற்றுக்கொண்டார். அவரைச் சித்திரக் கலையில் படிப்பிக்க வேறு யாரும் வேறு எப்படியும் வரவில்லை. அவராகவே கற்றுத் தேர்ந்து கொண்டதுதான்.



ரவிவர்மாவைப் பற்றியும் அவர் சாதனைகள் பற்றியும் சற்று அலட்சியமாகவும் இளப்பமாகவும் கூடப் பேசுவது சுலபமாக இந்தக் காலத்தில் போய்விட்டது. அவர் அவ்வளவாக உயர்ந்த கலைஞர் அல்ல என்றும் தன் சித்திர நாயக நாயகிகளை பாம்பே பார்ஸி நாடக பாணியில் தீட்டியிருக்கிறார் என்றும் இன்றைய இந்தியச் சிற்பக்கலை விமர்சகர்கள் கூறி, அவரை விட்டு கலை இன்று வெகு தூரம் நடந்து வந்துவிட்டது என்பதுபோலவும் குறை கூறியிருக்கிறார்கள். ஆனால் அவர் ஒருவராக, தனியாக, முன்மாதிரி என்று சொல்ல ஒருவரும் இல்லாமல், இந்தியக் கலையில் ஒரு மறுமலர்ச்சியை நோக்கி உருவாக்கிய முதல்வர் என்று சொல்ல வேண்டும். அவருக்குப்பின் அவர் கலைக்கு எதிர்முனையாகத் தோன்றிய வங்கச் சித்திர மரபும் கூட அவ்வளவாக இன்று பாராட்டப்படுவதில்லை என்றுதான் சொல்ல வேண்டும். இரண்டு பாணிகளையுமே ஆனந்தகுமாரசாமி போன்ற கலை விமர்சகர்கள் துரதிருஷ்டவசமானது, இந்தியக்கலைத் தத்துவத்துக்கு ஒத்து வராதது என்று சொல்லுகிறார்கள். இருந்தாலும்கூட, இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளில் ரவிவர்மாவின் இடம் சிறிது 'படுத்தக் கூடியதல்ல. மிகவும் முக்கியமானது. இந்தியச் சிற்பக் கலையின் சில அம்சங்களை அவர் மக்களை எட்டச் செய்தார்.

இந்தியாவில் விக்ரகங்களைப் பூஜை செய்வது முழுவதும் தவறானது என்று ஒரு கட்சியும், கலைகளின் வளத்துக்கும் தரத்துக்கும் விக்ரக ஆராதனைதான் அவசியம் என்றும் பலர், போரிட்டுக் கொண்டிருந்த காலம் அது. இதிகாசங்களாகவும், காவியங்களாகவும், நாடகங்களாகவும் மத்திய கால நாயக நாயகிகளையும் தெய்வங்களையும் மக்கள் திரும்பவும் கண்டு கொள்ள முயன்று கொண்டிருந்த காலம் அது. அந்தக் காலத்தில் பழைய புராணத் தெய்வங்கள் காவிய, நாடக, நாயக, நாயகிகளை கண்ணால் காணமுடிகிற உருவங்களாக புது வர்ணங்களில் தீட்டி நம்மோடு தினசரி பழகுகிற மனிதர்களாக அறிமுகப்படுத்தினார் ரவிவர்மா. சினிமா, டெலிவிஷன் இல்லாத காலத்தில், தமயந்தி, சகுந்தலை, ராமர், கிருஷ்ணர், மோகினி, ஜடாயு, இந்திரஜித் என்று பலரையும் நேருக்கு நேர் காண உதவினார் ரவிவர்மா. அவர் படங்கள் மன்னர்களின் சித்திர சாலைகளில் இடம் பெற்றன என்றாலும், மக்கள் மனத்தையும் கூடக் கவர்ந்தன. மக்கள் கலையாகத்தான் ரவி வர்மாவின் சித்திரங்களை நாம் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

இசைக்கும் நாட்டியத்துக்கும் இல்லாத ஒரு சௌகரியம், புஸ்தகங்களுக்கும் ரவிவர்மா காலத்துச் சித்திரங்களுக்கும் ஏற்பட்டுவிட்டது. தியாகப் பிரும்மம் பாடுவதையோ, சரபோஜி



கடலரசன் மீது கோபம் கொண்டு இராம பிரான் அம்பு எய்ய எத்தனிக்கும் காட்சி விவர்மா ஓவியம்.

மூன் கௌரியம்மாள் ஆடுவதையோ நேரில் கேட்டு காணுவதைத் தவிர வேறு வழியில்லை. அவற்றைப் படமாக எடுத்தோ ஒலியாக பதிப்பித்தோ நமக்குத் தர சாதனங்கள் அவர்கள் காலத்துக்குப் பிற்பட்டுத்தான் வர இருந்தன. ஆனால் அச்சு யந்திரம் வந்து விட்டது எழுதுவதை எல்லாம் எத்தனை பிரதிகள் வேண்டுமானாலும் அச்சிட்டு மக்களுக்குக் கிடைக்க வழி செய்யலாம். இதே போல சித்திரங்களை அச்சிடும் ஒலியோகிராஃப் முறை வழி ஏற்பட்டதும் ரவி வர்மா காலத்தில்தான். அவர் அதைப் பயன்படுத்திக் கொண்டார். இதற்கு அவரைத் தூண்டியவர் டி. மாதவராவ் என்கிற பரோடா சமஸ்தான திவான் என்று தெரிகிறது. பம்பாயில் ரவிவர்மாவின் படங்களைப் பிரசுரிப்பதற்கு என்று ஏற்பட்ட ஒரு கம்பெனி மூலம், ரவி வர்மா எழுதிய எண்பத்தொன்பது சித்திரங்கள் இந்தியாவிலிருந்த பெரும்பாலான நடுத்தர வர்க்க வீடுகளில் இடம் பெற்றன. மன்னர்களின் சித்திர சாலைகளை விட்டுக் கலை கிளம்பி, கோவில்களையும் விட்டு வெளியேறி இந்தியச் சித்திரங்கள் தனிப்பட்ட மனிதர்களின் வீடுகளில் புகுந்தது இதற்குப் பின்தான் என்று சொல்ல வேண்டும். கலையில் வியாபார நோக்கம் வந்து விட்டது என்று சொன்னவர்கள் அப்போதும் உண்டு, இப்போதும் இருக்கிறார்கள். இந்திய மறுமலர்ச்சிச் சிந்தனைகளில் வியாபார நோக்கங்கள் இடம் பெறுவதும் அதற்கு மறுப்பு தெரிவிப்பதும் ஒரு பெரிய அம்சமாக ஒரு நூறு ஆண்டுகளாகவே தொடர்ந்து வந்திருக்கிறது என்று சொல்லலாம். இலக்கியம், கலை இவற்றிலும் பொதுவாக நமது வாழ்க்கையிலுமே வியாபார நோக்கம் என்பது தொடர்ந்து வருவதைக் காண முடிகிறது. இதுவே சில மறுமலர்ச்சிப் போக்குக்குக் காரணமாகவும் அமைந்தது.

ஓவியராக ரவிவர்மாவின் பெயரும் புகழும் உலகம் பூராவும் பரவிற்று. அவர் மிகவும் வெற்றிகரமான வாழ்க்கை வாழ்ந்தவர். *1848*ல் பிறந்து *1906*ல் காலமானவர். திருவனந்தபுரத்து அரசர் குலத்தில் பிறந்தவர். ராஜா என்கிற பட்டத்துக்கு அவர் உரிமையில்லாதவர் என்றாலும் இந்திய அரசாங்கமும், மக்களும் எல்லோருமே அவரை ராஜாரவிவர்மா என்றுதான் சொன்னார்கள். இதுபற்றி திருவனந்தபுரம் ராஜா விசாகம் திருநாளுக்கு அவரிடமே கோபம் வந்தது என்றும் சொல்லுகிறார்கள். அது எப்படியானாலும் திருவாங்கூர் சமஸ்தானத்தில் அடுத்தடுத்து திவான்களாக இருந்தவர்கள் எல்லோருமே அவர் சித்திரங்களைப் போற்றிப் பாராட்டிச் சித்திரக்காரராக அவரைப் பல மகாராஜாக்களுக்கும் பெரிய இடங்களுக்கும் சிபாரிசு செய்தார்கள். திருவனந்தபுரத்தில் அரசராக இருந்த ஆயில்யம் திருநாளும் அவரைப் பெரும் அளவில் ஆதரித்ததாகத் தெரிகிறது. ஆயில்யம் திருநாளின்

ராணி லட்சுமிபாயின் சகோதரியை ரவிவர்மா 1866ல் மணந்துகொண்டார். இந்த உறவு காரணமாக ரவிவர்மாவின் பேத்தி சேது லக்ஷ்மிபாய் திருவனந்தபுரத்தில் பின்னர் ராணி ரிஜண்ட்டாக செயல்பட முடிந்தது. திருவாங்கூரின் கடைசி அரசனுன சித்திரைத் திருநாளின் தாயார் சேது பார்வதியும் ரவி வர்மாவின் பேத்திகளில் ஒருத்தி. இவர்களை ரத்தவாரிசாக ஏற்றுக்கொள்ள விசாகம் திருநாளுக்கு சிபார்சு செய்தவர் ரவிவர்மாவின் கடிதத்தின் பேரில் இந்திய வைசிராய் நார்ஸான் பிரபுதான்.

சென்னையில் கவர்னரின் ஆதரவில் நடந்த சித்திரக்காட்சியில் அப்போது இருபத்தைந்து வயது நிரம்பியிருந்த ரவிவர்மாவுக்குத் தங்கமெடல் முதல் பரிசாகக் கிடைத்தது. அதே சித்திரத்துக்குப் வியன்னு நகரில் நடந்த சர்வதேசக் கண்காட்சியிலும் இன்னொரு மெடல் கிடைத்தது. அடுத்தடுத்துநாலு வருஷங்கள் நடந்த சென்னைக் கண்காட்சிகளில் ரவிவர்மாவின் படங்கள் சிறந்த சித்திரங்களாக முதற் பரிசுகளான தங்கமெடல்களைப் பெற்றன. 1876ல் பரிசு பெற்ற ரவிவர்மா சித்திரம் சகுந்தலை துஷ்யந்தனுக்குக் காதல் கடிதம் எழுதுகிற சித்திரம். இந்தப் படத்தை மோனியர் வில்லியம்ஸ் என்பவர் விரும்பி வாங்கி தனது சாகுந்தலம் ஆங்கில மொழி பெயர்ப்புக்கு முகப்புப்படமாக உபயோகித்தார். 1893ல் சிகாகோ நகரில் நடந்த சர்வதேச ஓவியக்கண்காட்சிக்கு இந்திய பெண்கள் என்று பத்து சித்திரங்கள் வரைந்து அனுப்பினுர் ரவிவர்மா. இவை எல்லாமே ஏற்றுக்கொள்ளப்பட்டு கண்காட்சியில் இடம் பெற்றன. ரவிவர்மாவுக்கு இரண்டு மெடல்களும் பல அத்தாட்சிப் பத்திரங்களும் கிடைத்தன. அத்தாட்சிப் பத்திரங்களில் கலையம்சத்துக்கப்பால் இந்தச் சித்திரங்களில் ஜாதி, மத, தேச, உடை, பாவனைகள் யதார்த்தமாக இடம் பெற்றிருப்பதாக எடுத்துக்கூறிப் பாராட்டுகின்றன.



சுவாமி விவேகானந்தரின் சிகாகோ பிரசங்கம் போல சர்வதேச அரங்கில் இந்திய தேசிய கௌரவத்தையும் இந்தியக்கலைச் சமர்த்தையும், இந்திய மரபு வழிகளின் மேன்மைகளையும் எடுத்துக் காட்டிய ஒரு காரியமாக இதையும் கருத வேண்டும். இந்திய மறுமலர்ச்சி சிந்தனைகளின் போக்குக்கு உரம் சேர்க்க வளம் தந்த காரியங்கள் இவை இரண்டும். இந்தப் படங்களை எழுதுவதற்காகவும் பரோடா, உதய்பூர் மைசூர் புதிய அரண்மனைகளை அலங்கரிக்க ஓவியங்களை தீட்டுவதற்காகவும் ரவி வர்மா பல நாள் பயணம் மேற்கொண்டு பல பட இந்தியாவில் ஊர்களில் தங்கியதாகத் தெரிகிறது. இந்தியாவின் ஒருமையையும் அந்த ஒருமை எப்படிப் பலதரப்பட்ட விஷயங்களால் ஏற்படுகிறது என்றும் அறிந்துகொள்ள அவருக்கு அந்தப் பயணம் சந்தர்ப்பம் அளித்தது.

திருவாங்கூர் ராஜ வம்சத்தில் கிளிமானூர்க்கிளையில் பிறந்தவர் ரவிவர்மா. அந்த வம்சத்தில் பலர் இலக்கியத்திலும் பலர் அரங்குக் கலைகளிலும் வல்லவர்களாக இருந்திருக்கிருர்கள் என்று தெரிகிறது. ரவிவர்மாவுக்கு சமஸ்கிருத மலையாள இலக்கியங்களில் புலமையிருந்ததாகத் தெரிகிறது. அதே அளவுக்கு அவருக்கு துள்ளல் கதகளி என்ற ஆட்டங்களிலும் ஈடுபாடு இருந்திருப்பதாகத் தெரிகிறது. கதகளி, துள்ளல் ஆகியவைகளின் பாதிப்பை அவர் சித்திரங்க

வில் காணலாம் என்று கிருஷ்ண சைதன்யா என்கிற கலை விமரிசகர் எழுதுகிறார்.

ரவிவர்மா மூலமும் அவர் உறவினர்கள் மூலமும் கிளிமானூர் இந்திய ஓவியக்கலையில் ஒரு புதுப்பாணியை உற்பத்தி செய்தது என்பது விமர்சகர்களின் அபிப்பிராயம். ரவிவர்மாவின் சகோதரி மங்களா பாய் அவர் தம்பி ராஜராஜ வர்மா, மகன் ராமவர்மா எல்லோரும் ஓவியக்கலைஞர்தான். மகன் ராமவர்மா 1967ல் தனது எண்பத்தேழாவது வயதில் காலமானார்.

கலைகள் மக்களை எட்டவேண்டும் என்ற ஒரு சித்தாந்தம் சமீப காலமாகத்தான் முக்கியத்துவம் பெற்று வருகிறது. இந்தியக் கலைகளில் இசையையும் நாட்டியத்தையும் தவிர மற்ற கலைகள் இடைக்காலத்தில் ஓரளவுக்குக் கூட மக்களை எட்டித் தொட்டதாகச் சொல்ல முடியாது. மக்களை ஓரளவுக்கு எட்டிய பல சித்திரங்களை முதல் தடவையாக சிருஷ்டித்த பெருமை ரவிவர்மாவுடையது. இந்திய மறுமலர்ச்சியில் ரவிவர்மாவின் பங்கு கணிசமானது என்றுதான் சொல்லவேண்டும்.

## விமானம் ஏறப்போகும் இந்திய மானம்....

பாட்ரிக் ஃப்ரான்சிஸ் ஒரு பத்திரிகையாளர். பிரான்சு நாட்டவர். ஒரே ஆசனம் உள்ள விமானத்தில் உலகம் முழுவதும் 40 ஆயிரம் கி.மீ. பறந்து, தன் அனுபவங்களைப் புத்தகமாக எழுத விரும்பினார்.

அவ்விமானத்தின் பெட்ரோல் டாங்கின் கொள்ளளவு 45 லிட்டர். 70 கி.மீ. வேகத்தில் மணிக்கு 6 லிட்டர் செலவாகும். ஏழரை மணி நேரம் பறக்கலாம்.

1984 செப்டம்பர் 29 அன்று, பிரான்சிலிருந்து கிளம்பி, லத்தீன் அமெரிக்க நாடுகள், பனமா, மெக்சிகோ, அமெரிக்கா, சிங்கப்பூர், டாக்கா வழியாக கல்கத்தா வந்தார்.

கடந்த ஜூலை 10 காலை 6 மணி. கயாவில் 45 லிட்டர் பெட்ரோல் நிரப்பிக் கொண்டு கிளம்பினார். இலக்கு வாரணாசியின் பார்த்பூர் விமான நிலையம். வழக்கமான அளவான மணிக்கு 6 லிட்டர் வீதம் செலவானால் இலக்கை அடைந்து விடலாம். ஆனால், மணிக்கு 10 லிட்டர் செலவாவதாக மீட்டர் காட்டியது.

எனவே பாதி வழியில் விமானம் இயங்காமல் தரையிறங்கும். எனவே ஜி.டி. ரோடில் வலுக்கட்டாயமாக இறக்கி, பங்கில் பெட்ரோல் நிரப்பிக் கொள்ள விரும்பினார்.

ஆனால் போக்குவரத்து மிகுந்த சாலை. எனவே ஒரு வயலில் இறக்கினார். ஒரு மேட்டில் உரசி பின்பக்க இறக்கை பழுதாகி விட்டது. புது இறக்கை பாகத்தை பிரான்சிலிருந்து வரவழைக்க உடனே டில்லி போனார்.

அது சரி, ஏழரை மணி நேரம் பறக்க நிரப்பப்பட்ட பெட்ரோல் நாலரை மணியில் காலியானதேன்?

பிரான்சிஸ் கூறும் காரணம்: கயாவில் நிரப்பப்பட்ட பெட்ரோல் கலப்படமானதாம்!

அவர் எழுதப்போகும் புத்தகத்தில் இந்தியாவின் மானம் விமானம் ஏறிப் பறக்கப் போவது உண்மை!

—ஜெய்ராம்ஜி